# டால்ஸ்டாய கதைகள்

இரண்டாம் பாகம்

தமிழாக்கம்:

வி. எஸ். வெங்கடேசன்




தியாகராய நகரம் :: சென்னை-17.

முதற் பதிப்பு : மார்ச், 1959


விலை ரூ. 2-00

## இதனுள்ளே.


| | | |
|---|---|---|
| 1. | ஏழையின் காதல் | 5 |
| 2. | மூன்று ஜீவன்கள் | 46 |
| 3. | மனித சுபாவம் | 66 |
| 4. | பேயின் தோல்வி | 100 |
| 5. | பனிப்புயல் | 104 |
| | | 147 |
| 7. | அஸ்ஸிரியா மன்னன் | 158 |


மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை-2.

# 1. ஏழையின் காதல்

இரவு சுமார் இரண்டு மணி இருக்கும். அப்போது பீட்டர்ஸ்பர்க் நகரத்தில் நடந்த ஒரு சிறு விருந்துக்கு ஐந்து வாலிபர்கள் தங்களுக்குள் பொழுதைப் போக்க வந்தார்கள்.

விருந்துக்கு வந்தவர்கள் அதிகமாகச் சாராயம் பருகினர். வந்த ஆண்களில் பெரும்பாலோர் வாலிபர்கள். பெண்களும் நல்ல அழகிகளாக யிருந்தனர். அதனால் பிடிலும், பியானோ வாத்தியமும் இடைவிடாது நடனப் பாடங்களையே இசைத்துக் கொண்டிருந்தன. நடனமும் கூச்சலும் தொடர்ந்து இருந்து வந்தன. அப்படியும் எக்காரணத்தாலோ அங்கிருந்த அனைவரும் உற்சாகமின்றியும், தடுமாற்றத்துடனும் காணப்பட்டனர். தாங்கள் செய்வது அவசியமற்றது, சரியானதுமல்ல என்று அனைவரும் கருதினர்.

பலமுறை எல்லாம் சரியான முறையில் நடைபெற முயற்சித்தனர். ஆனால் பலவிதமான ஆட்டமும் பாட்டும் சலிப்பையே உண்டு பண்ணின.

ஐந்து வாலிபர்களில் ஒருவனுக்கு மற்றவர்களிடம் அதிருப்தி உண்டாகியிருந்தது. எல்லாமே வெறுப்பாகயிருந்தது. அதனால் அவன் தன் தொப்பியைத் தேடி எடுத்துக்கொண்டு வீட்டிற்குப் போகும் எண்ணத்துடன் வெளியே சென்றான்.

முன் ஹாலில் யாரும் இல்லை. ஆனால் அதைச் சேர்ந்த ஒரு அறையில் இருவர் விவாதிக்கும் குரல் கேட்டது. அதைக் கேட்டு வெளியே செல்ல வந்த வாலிபன் சற்று நின்றான்.

'நீ போகக் கூடாது. அங்கே விருந்தினர் இருக்கின்றனர்.' என்று ஒரு பெண் குரல் சொல்லிற்று.

'தயவு செய்து என்னை உள்ளே போகவிடுங்கள். நான் சுய உணர்வுடன்தான் இருக்கிறேன்' என்றது ஒரு பலவீனமான ஆணின் குரல்.

'முடியாது. எஜமானியம்மாளின் உத்தரவின்றி நான் அனுமதிக்க முடியாது. நீங்கள் எங்கே போகிறீர்கள்? நீங்கள் எப்படிப்பட்டவர்?'

அதே சமயம் கதவு படால் என்று திறந்துகொண்டது. ஒரு விசித்திரமான உருவம் அங்கு காணப்பட்டது. அவனைக் கண்ட வேலைக்காரர்கள் ஒன்றும் சொல்லவில்லை. அவனைத் தடுக்கவுமில்லை. அந்த விசித்திர உருவம் அச்சத்துடன் குனிந்து வணக்கம் தெரிவித்தது. பிறகு மெல்லிய கால்கள் தடுமாற உள்ளே வந்தது.

அவன் நடுத்தர உயரமாக யிருந்தான். முதுகு சற்று கூனாக யிருந்தது. தலைமுடி நீண்டு கழுத்துக்குக்கீழ் தொங்கிக்கொண்டிருந்தது. குறுகலான மேல் கோட்டும், கிழிந்த நிஜாரும், சுத்தம் செய்யாத பூட்ஸூம் அணிந்துகொண்டிருந்தான். அவனது வெளுத்த கழுத்தில் டை கட்டியிருந்தான். அழுக்குப்படிந்த சொக்காய் அவனது மெலிந்த உடலை மறைத்துக் கொண்டிருப்பது கோட்டினுள்ளிருந்து காணப்பட்டது. பலவீனமான உடலாக இருந்தும் அவன் முகம் மாத்திரம் வெண்மையாகவும் நேர்த்தியாகவும் இருந்தது. கறுப்புத் தாடிக்குமேல் அவன் முகத்தில் இளமையின் துடிப்பு காணப்பட்டது. அவன் முடி நன்கு வாரப்படாமலிருந்தது. அவனுடைய கருத்த விழிகள் மென்மையாகவும் தன் எதிரே யிருப்பவர்களிடம் மரியாதையுடன் கெஞ்சுவது போலவும் இருந்தது. அத்துடன் வளைந்த மெல்லிய மீசைக்கிடையே உதடுகள் அசைவது தெரிய வந்தது.

சிறிது தூரம் அவன் முன்னால் நடந்த பிறகு வாலிபன் முன் நின்று புன்முறுவல் செய்தான். அவனுக்குச் சிரிக்கவும் கஷ்டமாக யிருந்தது போலத் தோன்றிற்று. ஆனால் அவன் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்ததும் எதற்காக என்றுகூடத் தெரியாமல் வாலிபனும் சிரித்தான்.

விசித்திரமான உருவம் வாலிபனைக் கடந்து நடன அறைக்குள் சென்றதும் வாலிபன் ஒரு வேலைக்காரனிடம் அவன் யார் என்று விசாரித்தான்.

'அவன் ஒரு பித்துப்பிடித்த சங்கீதக்காரன். நாடக சாலையிலிருந்து வருகிறான். சில சமயம் எஜமானியம்மாளைக் காண இங்கு வருவான்' என்றான் வேலையாள்.

'டெல்ஸாவ் எங்கே யிருக்கிறாய்?' என்று யாரோ கூப்பிட்டார்கள். வெளியே செல்ல வந்த வாலிபனின்

பெயர் டெல்ஸாவ். அவன் உடனே நடனம் நடைபெறும் ஹாலுக்குச் சென்றான்.

சங்கீதக்காரன் கதவருகில் நின்று நடனமாடுபவர்களையே பார்த்துக் கொண்டிருந்தான். அவனது முகத்தில் தவழ்ந்த புன்முறுவலும், பார்வையும், கால்கள் தாளம் போடுவதையும் பார்க்கும்போது அவன் அங்கிருப்பவர்களிடம் திருப்தி யடைந்திருக்கிறான் என்று தெரியவந்தது.

அவனைப் பார்த்த ஒரு விருந்தாளி 'வாருங்கள். நடனமாடுங்கள்' என்றார்.

சங்கிதக்காரன் குனிந்து வணக்கம் தெரிவித்தான். பிறகு வீட்டு எஜமானியை என்ன செய்யலாம் என்று கேட்பது போலப் பார்த்தான்.

'போங்கள், போங்கள். ஒரு சீமான் சொல்லும் போது ஏன் நடனமாடக் கூடாது!' என்றாள் வீட்டு எஜமானி.

சங்கீதக்காரனுடைய மெலிந்த பலவீனமான கால்களிலும், கைகளிலும் உடனே ஒரு வேகம் ஏற்பட்டது. அவன் கையையும் காலையும் ஆட்டிக்கொண்டு நடன ஹால் முழுவதும் சுற்றி வந்தான். ஹாலின் மத்தியில் ஒரு வேடிக்கையான சர்க்கார் அதிகாரி நடன மாடிக்கொண்டிருந்தான். எதிர்பாராத விதமாக அவனுடைய முதுகில் சங்கீதக்காரன் இடித்துக் கொண்டான். மெலிந்த அவனது கால்கள் எதிர்பாராத நிகழ்ச்சியினால் தடுமாறின. வேகமாகச் சிறிது தூரம் சென்று அவன் அப்படியே கீழே விழுந்தான். அவன் விழுந்ததால் ஏற்பட்ட சப்தத்தைக் கேட்டு அங்கிருந்த அனைவரும் கொல்லென்று சிரித்தனர்.

கீழே விழுந்த சங்கீதக்காரனோ எழுந்திருக்கவே யில்லை. இதைப்பார்த்ததும் பியானோவும் பிடிலும் பாட்டிசைப்பதை நிறுத்தின. விருந்தாளிகளும் மௌனமானார்கள். சங்கீதக்காரன் கண்கள் மிரள தரையில் விழுந்து கிடந்தான். விருந்தாளிகளில் சிலர் சென்று அவனைத் தூக்கி ஒரு நாற்காலியில் உட்காரவைத்தனர். அவன் தன் தலை முடியைச் சரி செய்துகொண்டான். விருந்தாளிகளின் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் புன்முறுவல் செய்தான்.

'ஆல்பர்ட், ஆல்பர்ட் ஏதாவது அடிபட்டதா? எங்கே? நீ நடனமாடக்கூடாது என்று சொல்லியிருக்கி

றேன் அல்லவா?...... அவன் மிகவும் பலவீனமானவன். நடப்பதே மிகவும் கஷ்டம். அவனுல் எப்படி நடனமாட முடியும்?' என்ருள் வீட்டு எஜமானி.

'அவன் யார்?' என்று ஒரு சீமாட்டி கேட்டாள்.

'பாவம் ஏழை. சங்கீதக்காரன். நல்லவன். ஆனுல் எப்படி யிருக்கிருன் பாருங்கள்' என்று வீட்டு எஜமானி ஆல்பர்ட்டின் எதிரிலேயே அலட்சியமாகச் சொன்னுள். இதைக் கேட்டு ஆல்பர்ட் எதையோ கண்டு பயந்தவனைப் போல துள்ளி எழுந்தான். அவனைச் சுற்றி நின்றிருப்பவர்களைத் தள்ளிக்கொண்டு எழுந்து நின்ருன். 'அதெல்லாம் ஒன்றுமில்லை' என்ருன்.

கீழே விழுந்ததில் ஒரு அடியும் படவில்லை என்பதைக் காண்பிக்க ஹாலின் மத்திக்குச் செல்ல முயன்ருன் ஆல்பர்ட். ஆனுல் கால்கள் தள்ளாடி விழப்போனுன். விருந்தினர்களில் ஒருவர் அவனை அச்சமயம் பிடித்துக்கொள்ளாமல் போயிருந்தால் மீண்டும் கீழே விழுந்திருப்பான்.

எல்லோரும் கவலையுடன் மௌனமாக யிருந்தனர்.

ஆண்ட்ருவின் கண்கள் மீண்டும் மங்கின எல்லோரும் தங்களை மறந்து நின்றிருந்த சமயம் ஆல்பர்ட் தன் கால்களைத் தடவி விட்டுக் கொண்டான். திடீரென்று தலைநிமிர்ந்தான். கால்கள் தள்ளாட நடந்தான். முடியைச் சரி செய்து கொண்டான். தள்ளாடிய வண்ணம் பிடில் வாசிப்பவன் அருகில் சென்ருன். அவனிடமிருந்து பிடிலை வாங்கிக் கொண்டான்.

'அதெல்லாம் ஒன்றுமில்லை' என்று ஆல்பர்ட் மீண்டும் சொன்னுன்: 'சீமான்களே. சிறிது சங்கீதம் கேட்கலாம்' என்ருன்.

'என்ன விசித்திரமான மனிதன்' என்று விருந்தாளிகள் ஒருவர் மற்றவரிடம் சொல்லிக்கொண்டனர்.

'உடல்நிலை காரணமாக அவனிடமுள்ள திறமை பாழடைந்து வருகிறது' என்ருன் ஒரு விருந்தாளி.

'ஆமாம். பாவம்' என்ருன் மற்ருெருவன்.

'அவனுடைய முகம் எவ்வளவு நேர்த்தியாக யிருக்கிறது. அவனைப் பற்றி ஏதோ அசாதரணமான ஒன்றிருக்கிறது. பார்க்கலாம்' என்ருன் டெல்ஸாவ்.

# 2

ஆல்பர்ட் அங்கிருந்தவர்களைக் கவனிக்காமல் பிடிலை எடுத்து வைத்துக் கொண்டான். மெல்ல பியானோவுக்குச் சரியாகச் சுருதி சேர்த்தான். அவனுடைய உதடுகள் அசைந்தன. அவனது கண்களைக் காண முடியவில்லை. ஆனால் அவனது கூன்விழுந்த முதுகும், நீண்ட வெண்மையான கழுத்தும், கால்களும், தலையும் விசித்திர மாகக் காணப்பட்டன. ஆனால் எக்காரணத்தாலோ அவை பார்ப்பவர்களுக்கு மோசமானதாகத் தென்பட வில்லை.

பிடிலைச் சுருதி சேர்த்ததும் வில்லை எடுத்து தந்தி களில் உராய்ந்தான். அவனுடன் சேர்ந்து வாசிக்கத் தயார் செய்துகொண்டிருந்த பியானோ வாசிப்பவனைத் திரும்பிப் பார்த்தான். அவன் வாசிக்கப்போகும் பாட்டின் முதலடியை பியானோக்காரனிடம் சொன்னான்.

தன்னை மன்னிக்கும்படி எல்லோரையும் பார்த்துப் புன்முறுவல் செய்தான் ஆல்பர்ட். வில்லை வைத்திருந்த கையால் தலைமுடியைப் பின்னால் தள்ளிக்கொண்டான். பியானோவின் அருகில் நின்று மெல்ல வில்லை பிடிலில் இசைத்தான். உடனே ஹால் முழுதும் மிகவும் இனிமை யான நாதம் ரீங்காரம் செய்தது.

பாட்டின் முதலடியை இசைத்த பிறகு ஹாலில் இருந்தவர்கள் அனைவரும் தங்களையே மறக்கும்படியாக இரண்டாவது அடியை எடுத்தான். ஒரு தவறோ அல்லது அளவு மீறியோ அவன் வாசிப்பில் ஏற்படவில்லை. எல்லாம் இனிமையாகவும், தெளிவாகவும், நேர்த்தியாகவும் இருந் தன. எல்லோரும் மௌனமாக இசை விருந்து உச்ச நிலையை அடையப்போவதை எதிர்பார்த்துக்கொண்டிருந் தனர். சலிப்படைந்து, சத்தத்தால் மனம் புழுங்கி, மனம் வெறுப்படையும் நிலையிலிருந்த விருந்தாளிகள் திடீரென்று மாறுபட்ட உலகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அனைவரும் மௌனமாகத் தங்களை மறந்திருந்தனர். இப் பொழுது அவர்களது உள்ளத்தில் அமைதியான எண்ணம் ஏற்பட்டது. கடந்தகால சந்தோஷத்தை தட்டி எழுப் பிற்று. திருப்தியடையாத காதலையும் வருத்தத்தையும்,

ஆவலையும் தூண்டிற்று. பிடிலிலிருந்து எழுந்த நாதம் வர வர அங்கிருந்தவர்களை மெய்மறக்கச் செய்தது.

ஆல்பர்ட் பாட்டின் ஒவ்வொரு அடியை பிடிலில் இசைக்கும்போது அவன் மேலும் மேலும் விரைப்பாக நின்றான். இப்பொழுது அவன் விசித்திரமானவனாகவோ, கூனிக்குறுகியோ காணப்படவில்லை. அவன் பிடிலில் முக வாய்க்கட்டையை அழுத்தி அதிலிருந்து எழும் நாதத்தை உன்னிப்பாகக் கேட்டான். பாட்டிற்கேற்பக் காலால் தாளம் போட்டான். சில சமயம் அவன் நிமிர்ந்து நிற்பான். மற்றும் சில சமயம் பின்புறம் தாழவளைந்து கொள்வான். அவனது இடதுகை வளைந்திருந்தது. விரல் பிடிலின் தந்தியைத் தேய்த்தன. வலதுகை வில்லைப் பற்றிக்கொண்டு மெள்ள அசைந்தது. அவனது முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது. கண்கள் மின்னின. சிவந்த மூக்குவிரிந்தது, உதடுகள் மகிழ்ச்சியால் அசைந்தன.

சில சமயம் அவன் தலையைப் பிடிலின் பக்கமாகச் சாய்ப்பான். கண்களையும் மூடிக்கொள்வான். அவனது முகத்தைக் கூந்தல் பாதி மறைத்துவிடும். உதடுகளில் புன்னகை தவழும். சில சமயங்களில் அவன் பிடிலை வாசித்துக்கொண்டே இரண்டடி முன்னால் வருவான். அங்கே யிருந்தவர்களை அவனுடைய திறமையை எண்ணி கர்வத்துடனும், பெருமையாகவும் பார்ப்பான். ஒருமுறை பியானோக்காரன் ஒரு தவறு செய்தான். அப்போது ஆல்பர்ட்டின் முகத்தில் வேதனைக்குறி தென்பட்டது. அதே சமயம் குழந்தைகளுக்கு ஏற்படும் ஆத்திரத்தைப் போல் காலால் தரையில் தட்டினான். உரக்கக் கத்தினான். உடனே பியானோக்காரன் தன் தவறை உணர்ந்தான். மறுகணம் ஆல்பர்ட் கண்களை மூடிக்கொண்டு புன்முறுவல் செய்தான். மீண்டும் அவன் தன்னையும் மற்றவர்களையும் மறந்து பிடிலை இசைக்கத் தொடங்கினான்.

அங்கே யிருந்தவர்கள் அனைவரும் ஆல்பர்ட்டின் வாசிப்பைக் கேட்டு மௌனமாக யிருந்தார்கள். அவனுடைய சங்கீதத்தைக் கொண்டே அவர்கள் உயிர் வாழ்வதாகவும் மூச்சுவிடுவதாகவும் தோன்றிற்று.

வேடிக்கையான அதிகாரி ஜன்னலருகில் நாற்காலியில் அசைவற்று உட்கார்ந்திருந்தார். உயிரற்ற தரையை பார்த்துக்கொண்டே பெருமூச்சு விட்டார். பெண்கள்

சுவருக்கு அருகாமையில் மௌனமாக உட்கார்ந்திருந்தனர். எப்போதாவது ஒரு சமயம் ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்துக்கொள்வார்கள். வீட்டு எஜமானியின் பருத்த முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது. தவறு ஏற்படாமலிருக்கவேண்டுமே என்ற கவலையுடன் பியானேக்காரன் ஆல்பர்ட்டின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தான். அவனுடன் சேர்ந்து வாசிக்க முயற்சித்து வந்தான். விருந்தாளிகளில் ஒருவர் அனைவரையும் விட அதிகமாகச் சாராயம் பருகியிருந்தார். அவர் தம் மன எழுச்சியை வெளிக்குக் காட்டப் பயந்து சோபாவில் அசைவற்றுப் படுத்திருந்தார்.

. வழக்கத்திற்கு மாறுன அனுபவம் டெல்ஸாவுக்கு ஏற்பட்டது. அங்கு ஒரே குளிராக யிருப்பது போலவும், ஒரு சமயம் அது அதிகரித்தும், மற்ருெரு சமயம் குறைவதாகவும் அவனுக்குத் தோன்றிற்று. அவனுடைய உடலில் ஒவ்வொரு நரம்பிலும் உணர்ச்சித் துடிப்பு உண்டாயிற்று. உடல் பூராவும் குளிரால் நடுங்கி நெஞ்சையே அழுத்துவதாகவும் கருதினன். அவனுடைய மூக்கிலும் கண்களிலிருந்தும் நீர் ஆறுபோல் பெருகிற்று. அவன் தலையை அசைத்துப் பெருகிய நீரை அகற்றவும், உணர்ச்சி வசமாவதிலிருந்து தடுக்கவும் முயன்ருன். ஆனல் அங்கிருந்த மற்றவர்களோ, முகம் சிவக்கக் கண்ணீரைப் பெருகவிட்டுக் கொண்டு மௌனமாக இருந்தனர்.

ஆல்பர்ட் கையில் பிடிலை எடுத்து வாசிக்கத் தொடங்கியதும் அதிலிருந்து எழுந்த முதல் ஒலி டெல்ஸாவுக்குத் தன் பால்ய நாட்களை நினைவுபடுத்திற்று. இப்பொழுது அவனுக்கு பதினேழு வயதாகிறது. வாழ்க்கையில் பல அனுபவங்கள் ஏற்பட்டு களைத்துப்போயிருந்தான். அவன் இப்பொழுது திடீரென்று சுய திருப்தி யடைந்தவனுகக் காணப்பட்டான். அவனையறியாமலே அவனது மனதில் மகிழ்ச்சிப் பெருக்கு ஏற்பட்டது. அவன் முதலில் அவனுடைய உறவினர் மகளைக் கண்டதும் காதல் கொண்டான். அச்சமயம் அவள் சிவப்புநிற உடை அணிந்திருந்தாள். அவளிடம் டெல்ஸாவ் தன் காதலை முதலில் தெரிவித்தது நினைவுக்கு வந்தது. அப்போது அவள் அவனுக்கு முத்தம் ஈந்தாள். அதனுல் அவனுடைய உடலில் ஒரு மாயா விநோதமான மின் சக்தி பாய்ந்தது போலவும், இயற்கையின் அற்புத சாதனையும் அவனுக்குத் தென்பட்

டது. அந்த நினைவுகள் இப்போது அவனுக்கு உண்டாயிற்று. அத்துடன் தெளிவற்ற நம்பிக்கையின் மத்தியில், அடக்கமுடியாத ஆவலும், கைவிடப்பட்ட மகிழ்ச்சி கிடைக்கலாம் என்ற எண்ணமும் ஏற்பட்டது. பழைய சம்பவங்கள் ஒன்றின்பின் ஒன்ருக அவன் கண்முன் தோன்றிற்று. அவன் அவற்றைக் கண்டு மகிழ்ந்தான். கண்ணீர் பெருக்கினுன். அந்த நாட்களை நல்லவிதமாகக் கழிக்காததற்காக அவன் கண்ணீர் பெருக்கவில்லை. ஆனுல் அந்த நாட்கள் மீண்டும் வராதே என்று வருந்தினுன். நினைவுகள் தானுகவே ஏற்பட்டன.

ஆல்பர்ட் மீண்டும் மீண்டும் பிடிலை வாசித்துக் கொண்டேயிருந்தான். அவனுடைய இன்னிசை "உன்னுடைய சிறந்தநாட்கள் வீணுயின. அந்தக் காதலும், சந்தோஷமும் இனித் திரும்பி வராது. அதற்காக அழு. கண்ணீர் பெருக்கு, அந்த நாட்கள் திரும்பி வராதா என்று அழுது உயிரையே மாய்த்துக் கொள். அந்த மகிழ்ச்சிகரமான வாழ்க்கை உன்னைவிட்டு அகன்று போயிற்று" என்று கூறுவது போலிருந்தது.

கடைசிப் பாட்டை பிடிலில் இசைக்கும் சமயம் ஆல்பர்ட்டின் முகம் ஒரேயடியாகச் சிவந்தது. அவனுடைய கண்கள் மின்னின. முகத்தில் வியர்வை முத்துமுத்தாக வெளிப்பட்டது. உடல் பூராவும் நடுங்கிற்று. வெளுத்த உதடுகள் விரிந்தன. அவனுடைய உடலும் உள்ளமும் சந்தோஷத்தால் பூரித்தது.

பாட்டு முடிந்ததும் அவன் உணர்ச்சியுடன் உடல் பூராவும் குலுங்கும்படி கூந்தலைப் பின்னுக்குத்தள்ளினுன். குனிந்து பிடிலைக் கீழே வைத்தான். கர்வத்துடனும் மகிழ்ச்சியுடனும் புன்முறுவல்செய்து ஹாலிலிருந்தவர்களை ஒரு முறை பார்த்தான். பிறகு உடல் குன்ற தலைகவிழ்ந்து கொண்டான். அவனது உதடுகள் மூடின. கண்கள் மங்கின. அவன் தனக்குள்ளாகவே வெட்கமடைந்து அனைவரையும் ஒருமுறை பார்த்தான். மறுகணம் தள்ளாடிக் கொண்டு அடுத்த அறைக்குச் சென்ருன்.

ஆல்பர்ட் பிடில் வாசிக்கும்போது அந்த ஹாலில் மௌனம் நிலவியது. அனைவரும் ஏதோ ஒரு நூதனமான

நிகழ்ச்சி நடப்பதாகவும நூதனமான எண்ணங்கள ஏற் படுவதாகவும் கருதினர். ஒவ்வொருவரும் அந்த நூதன மானது என்ன என்று தம் கருத்தைச் சொல்ல விரும்பினர். ஆனால் சொல்ல இயலவில்லை. பிரகாசமான ஹால், நேர்த்தி யான மாதர், ஜன்னலுக்கு வெளியே ஆகாயம், பொழுது புலர்வதற்கான அறிகுறி இவற்றுடன் பிடிலின் நாதத்தினால் கடந்த கால எண்ணங்கள் தோன்றி உணர்ச்சி வசமாகிவிட்டது. எல்லாம் சேர்ந்து கொண்டு அவர்களை பேசச் சக்தி யற்றவர்களாகச் செய்துவிட்டன. ஆனால் ஒருவர் கூட அது என்ன என்று சொல்ல முயற்சிக்க வில்லை. அதற்கு மாறாக பிடிலின் நாதத்தினால் ஏற்பட்ட நினைவுகளில் வசிக்கவும் அதிலிருந்து விடுபடாதிருக்க மறுத்தும் இருந்தனர்.

'அவன் உண்மையிலேயே வெகு நன்றாகப் பிடில் வாசிக்கிறான்!' என்றான் அதிகாரி.

'ஆமாம். வெகு நேர்த்தியாக வாசிக்கிறான்' என்று சொல்லித் தாடைகளில் வழிந்த கண்ணீரை கையால் துடைத்துக் கொண்டான் டெல்ஸாவ்.

'ஹூம். போகவேண்டிய நேரமாகி விட்டது' என்று சோபாவில் சாய்ந்திருந்தவன் சுய உணர்வு பெற்றுச் சொன்னான். 'நாம் அவனுக்கு ஏதாவது கொடுக்க வேண்டும். எல்லோரிடத்திலும் கேட்டு வாங்குங்கள்' என்றான்.

பக்கத்து அறையில் சோபா ஒன்றில் ஆல்பர்ட் தனி யாக உட்கார்ந்திருந்தான். அவன் கைகளை மெலிந்த முழங்காலில் ஊன்றி முகத்தையும், தலை முடியையும் அழுக்குப் படிந்த விரல்களால் தடவிக் கொண்டான். சந்தோஷத்தினால் புன்முறுவல் செய்தான்.

எல்லோரிடத்திலும் பணம் பெற்று டெல்ஸாவே ஆல்பர்ட்டிற்குக் கொடுக்க முற்பட்டான்.

ஆல்பர்ட்டின் சங்கீதம் டெல்ஸாவுக்கு நூதனமான எண்ணத்தை உண்டுபண்ணிற்று. அவனுக்கு ஆல்பர்ட் பயன்படுவான் என்று தோன்றிற்று. ஆல்பர்ட்டைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று, அவனுக்கு நல்ல உடை களைக் கொடுத்து, நல்ல இடத்தில் வைத்து அவனை இந்த இழி நிலையிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்றும் டெல் ஸாவ் கருதினான்.

'ஹ்ூம் உங்களுக்குக் களைப்பாக இருக்கிறதா?' என்று கேட்டுக் கொண்டே ஆல்பர்ட் அருகில் வந்தான் டெல்ஸாவ்.

ஆல்பர்ட் அவனைப் பார்த்துப் புன்முறுவல் செய்தான்.

'உங்களுக்கு நல்ல திறமை யிருக்கிறது. நீங்கள் இன்னும் உங்கள் சங்கீதத்தை விருத்தி செய்துகொண்டு கச்சேரிகள் செய்ய வேண்டும்.'

'எனக்கு ஏதாவது குடிக்க வேண்டும்' என்று அப்பொழுதுதான் தூங்கி விழித்தவனைப் போல் சொன்னான் ஆல்பர்ட்.

டெல்ஸாவ் சாராயம் எடுத்துவந்தான். ஆவலுடன் ஆல்பர்ட் இரண்டு கோப்பை சாராயம் பருகினான். 'எவ்வளவு நேர்த்தியான சாராயம்!' என்றான் ஆல்பர்ட்.

'நீங்கள் வாசித்த பாடல் எவ்வளவு இன்பமாக யிருந்தது!'

'ஹ்ூம். ஆமாம். ஆமாம்' என்று கூறி ஆல்பர்ட் புன்முறுவல் செய்தான். பிறகு 'மன்னிக்கவும். தாங்கள் யார் என்று தெரியவில்லையே! ஒரு வேளை ஏதாவது பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவரோ அல்லது இளவரசரோ! உங்களால் எனக்குச் சிறிது பணம் கொடுத்து உதவ முடியுமா?' என்று சொல்லி சிறிது தயங்கி 'என்னிடம் ஒன்றுமில்லை. நான் ஏழை. என்னால் உங்களிடம் வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுக்க முடியாது' என்றான்.

டெல்ஸாவ் தயங்கினான். அவனது நிலைமை பரிதாபமாகப் போய்விட்டது. எல்லோரிடத்திலும் வாங்கிய பணத்தை ஆல்பர்ட்டிடம் கொடுத்தான்.

'பணத்தைப் பெற்றுக்கொண்டு டெல்ஸாவுக்கு நன்றி தெரிவித்தான் ஆல்பர்ட். பிறகு 'நல்லது. மீண்டும் ஒரு பாட்டு வாசிக்கிறேன். நீங்கள் விரும்பும் வரை வாசிக்கிறேன்...... எனக்கு இன்னும் சிறிது சாராயம் கொடுங்கள்' என்று சொல்லி எழுந்தான்.

டெல்ஸாவ் மீண்டும் சிறிது சாராயம் எடுத்துவந்தான். ஆல்பர்ட்டைத் தன் அருகில் உட்காரும்படி சொன்னான். 'நான் உங்களிடம் வெளிப்படையாகப் பேசுவதற்கு மன்னிக்கவும். உங்கள் சங்கீதத் திறமை என்னைக் கவர்ந்து

விட்டது. நீங்கள் நல்ல நிலைமையில் இல்லை என்று தோன்றுகிறது' என்றான்.

டெல்ஸாவையே உற்றுப் பார்த்தான். பிறகு அப்பொழுதுதான் உள்ளே வந்துகொண்டிருந்த வீட்டு எஜமானியைப் பார்த்தான்.

'உங்களுக்கு உதவி செய்யச் சந்தர்ப்பம் கொடுங்கள். நீங்கள் என்னுடன் தங்கியிருந்தால் உங்களுக்குத் தேவையானதைத் தருகிறேன். நான் தனியாகத்தான் இருக்கிறேன். உங்களையும் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று கருதுகிறேன்.'

ஆல்பர்ட் பதில் சொல்லாமல் புன்முறுவல் செய்தான்.

'நீ ஏன் அவர் சொன்னதற்கு ஒப்புக்கொள்ளக் கூடாது? கடவுளே உனக்கு உதவி செய்ய அவரை அனுப்பியிருக்கிறார் போலும்...ஆனால் இந்த விஷயத்தில் நான் ஆலோசனை கூறமாட்டேன்' என்று சொல்லி டெல்ஸாவ் பக்கம் திரும்பி அவன் விருப்பத்திற்குத் தன் சம்மதத்தைக் கொடுக்க முடியாது என்ற வகையில் தலையை அசைத்தாள்.

'நீங்கள் எனக்கு உதவி செய்வதாகக் கூறியதற்கே நான் மிகவும் கடமைப்பட்டவனாகிறேன்' என்று சொல்லி அழுக்குப்படிந்த தன் கையால் டெல்ஸாவின் கையைப் பற்றிக் குலுக்கினான். பிறகு 'இப்பொழுது நாம் சிறிது சங்கீதம் கேட்கலாம். தயவு செய்யுங்கள்' என்றான்.

அதே சமயம் உள்ளே வந்தவர்கள் வெளியே செல்லத் தொடங்கினர். அவர்களைத் தங்கியிருக்கும்படி எவ்வளவோ மன்றாடினான் ஆல்பர்ட். ஆனால் அவர்கள் அவன் பேச்சைக் கேட்காமல் முன் ஹாலுக்குச் சென்றனர்.

ஆல்பர்ட் எல்லோரிடத்திலும் விடை பெற்றான். சிக்கேறிய தொப்பியையும் பழைய கோட்டையும் எடுத்து அணிந்துகொண்டான். அந்தத் தொப்பியும், கோட்டும் தான் அவனுக்குக் குளிர் காலத்திற்காக இருப்பவை. அவற்றை அணிந்த பிறகு டெல்ஸாவுடன் அவன் வண்டிக்குச் சென்றான்.

டெல்ஸாவ் தன் புது நண்பனுடன் வண்டியில் ஏறி உட்கார்ந்தான். ஆல்பர்ட்டின் ஆடைகளிலிருந்து எழுந்த நாற்றமும், சாராயத்தின் வாசமும் அவன் மூக்கைத்

துளைத்தது. அதைக்கொண்டு சிறுபிள்ளைத்தனமாகத் தான்செய்த காரியத்திற்காக அவன் பட்சாதாபப் பட்டான். அத்துடன் ஆல்பர்ட் சொன்னவையும் நினைவுக்கு வந்தன. அவை மடத்தனமாகவும், வெறுக்கத் தகுந்ததாகவும் இருந்தன. திடீரென்று நல்ல காற்றடித்த தும் டெல்ஸாவின் மனதில் புதிய எண்ணம் ஏற்பட்டது. 'இவனை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வது ?' என்ற கேள்வி எழுந்தது.

அவர்கள் இருவரும் சிறிது நேரம் பிரயாணம் செய்தனர். ஆல்பர்ட் மௌனமாகயிருந்தான். அவனு டைய தொப்பி கழன்று காலடியில் விழுந்தது. அவனும் வண்டியின் ஒரு மூலையில் சாய்ந்து குறட்டைவிடத் தொடங்கினான்.

வண்டிச் சக்கரங்கள் ஒரே விதமாகப் பனிக்கட்டிகளை உடைத்துக்கொண்டு சுழன்றன. வானத்தில் பொழுது புலர்வதற்கான மங்கலான வெளிச்சம் பனி படிந்த ஜன்னல்களின்மீது படர்ந்திருந்தது.

டெல்ஸாவ் திரும்பி தன் நண்பனைப் பார்த்தான். உயரமான உருவம் அதன் ஆடையில் மூடப்பட்டு உணர் வற்றுக் கிடந்தது. நீண்ட கறுத்தமூக்கு உடல்வரை நீளமாகயிருப்பது போலக் காணப்பட்டது, டெல்ஸாவ் பார்த்த நீண்ட முகமும் கறுத்த மூக்கும் உண்மையில் ஆல்பர்ட்டின் கூந்தல். ஆல்பட்டின் முகம் தலை முடியால் மறைக்கப்பட்டிருந்தது. அவனுடைய முகத்தை டெல் ஸாவ் உற்றுப் பார்த்தான். மூடியிருந்த உதடுகளும், நெற்றியின் அழகும் மீண்டும் அவன் மனதைக் கவர்ந்தன.

மனதில் தோன்றிய கலவரத்தாலும் பொழுது விடியும் வரை தூக்க மில்லாததாலும் டெல்ஸாவ் களைத்துப் போயிருந்தான். அவன் இரவு கேட்ட சங்கீதத்தை நினைத்துக்கொண்டு ஆல்பர்ட்டின் முகத்தையே உற்றுப் பார்த்தான். இரவு சந்தித்த இடத்திற்கே தன்னை மீண் டும் அழைத்துச் செல்லக்கூடாதா என்றும் கருதினான். அவன் தன்னுடைய சந்தோஷமான இளமைப் பருவத்தை நினைவுபடுத்திக் கொண்டான். செய்த தவறுகளுக்காக அவன் பட்சாதாபப்படவில்லை. அச்சமயம் அவன் முழு மனதுடன் ஆல்பர்ட்டை நேசித்தான். அவன் தனக்குக்

கட்டாயம் உபயோகமாக யிருப்பான் என்றும் டெல்ஸாவ் தீர்மானித்தான்.

மறுநாள் காரியாலயத்திற்குச் செல்வதற்காக எழுப்பிய போது டெல்ஸாவ் ஆச்சரியத்துடன் தன்னைச் சுற்றிப் பார்வை செலுத்தினன்; பழைய திரைச் சீலை, பழைய வேலைக்காரன், சிறிய மேஜையின் மீதிருந்த அவனது கைக் கெடிகாரம் ஆகியவற்றைப் பார்த்தான். 'எப்பொழுதும் என்னைச் சுற்றி யிருப்பதைத் தவிர வேறு எதை நான் காண விரும்புகிறேன்?' என்று தன்னையே கேட்டுக் கொண்டான். பிறகு சங்கீத வித்வான் ஆல்பர்ட்டின் புன்புறுவல் பூத்த முகமும், கறுத்த விழிகளும் முதல் நாளிரவு ஏற்பட்ட புதிய அனுபவமும் அவன் நினைவுக்கு வந்தது.

ஆல்பர்ட்டைத் தன் வீட்டிற்கு அழைத்து வந்தது நல்லதா, கெட்டதா என்று டெல்ஸாவ் சிந்திக்கவில்லை. வேலைக்காரர்களிடம் அவர்கள் செய்ய வேண்டியவைகளைச் சொல்லிவிட்டு அவசரமாக உடைகளை அணிந்து கொண்டான். பூட்ஸைப் போட்டுக்கொண்டு சாப்பிடும் அறைப் பக்கமாகச் சென்று உள்ளே பார்த்தான். ஒரு சோபாவின் மீது அழுக்கடைந்த உடைகளுடன் நன்ருகத் தூங்கிக் கொண்டிருந்தான் ஆல்பர்ட். அவனைப் பார்த்ததும் 'ஏதோ தவறு இருக்கிறது' என்று டெல்ஸாவ் தன்னையும் அறியாமல் எண்ணினன்.

டெல்ஸாவ் அருகிலிருந்த வேலைக்காரனைப் பார்த்து போஷ்யு ஜாவிஸ்கியிடம் போய் பிடில் கேட்டு வாங்கிவா. சில நாள் எனக்கு வேண்டும் என்று சொல்' என்று சொல்லி தூங்கிக் கொண்டிருக்கும் ஆல்பர்ட்டைக் காட்டி, 'அவன் எழுந்ததும் காபி கொடுங்கள். என் உடைகளில் சிலவற்றை அவன் அணியக் கொடுங்கள். தயவு செய்து அவனை நிம்மதியாக யிருக்கச் செய்யுங்கள்' என்ருன்.

மாலை திரும்பி வந்தபோது ஆல்பர்ட் இல்லாததைக் கண்டு டெல்ஸாவ் ஆச்சரிய மடைந்தான். வேலைக்காரனிடம் அவன் எங்கே என்று கேட்டான்.

'பகல் சாப்பாட்டிற்குப் பிறகு அவன் போய் விட்டான். அவன் தன்னுடன் பிடிலையும் எடுத்துப் போயிருக்கிறான். ஒரு மணி நேரத்தில் திரும்பி வருவதாகச் சொன்னான். இன்னும் வரக்காணோம்' என்றான் வேலைக்காரன்.

'சே, சே, என்ன மோசமானவன். அவனை ஏன் போக விட்டாய் ஜக்கார்?' என்று கேட்டான் டெல்ஸாவ்.

வேலைக்காரனுடைய பெயர் ஜக்கார். அவன் கடந்த எட்டு வருஷங்களாக டெல்ஸாவிடம் வேலை பார்த்து வருகிறான். அவன் பீட்டர்ஸ்பர்க் நகரத்தைச் சேர்ந்தவன். டெல்ஸாவ் கலியாண மாகாதவன். அவன் எண்ணமோ, செய்யும் காரியங்களோ ஜக்காருக்குப் புரியவேயில்லை.

'அவனை நான் எப்படித் தடுத்து நிறுத்துவது? நீங்கள் சொல்லியிருந்தால் அவனை எப்படியாவது வீட்டிலேயே தங்கச் செய்திருப்பேன். ஆனால் நீங்கள் அவனது உடைகளைப் பற்றி மாத்திரம் சொன்னீர்கள்' என்று கை கடிகாரத்தைத் தடவிக்கொண்டே சொன்னான் ஜக்கார்.

'ஹூம் என்ன மோசமான காரியம்! நல்லது. நான் இல்லாத போது அவன் இங்கே என்ன செய்து கொண்டிருந்தான்.'

ஜக்கார் புன்முறுவல் செய்தான். 'அவனை ஒரு கலைஞன்—திருடன்—என்றே சொல்லலாம். கண் விழித்து எழுந்ததும் சாராயம் வேண்டும் என்றான். பிறகு சமையல் காரனிடமும், பக்கத்து வீட்டு வேலைக்காரனிடமும் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தான். அவன் மிகவும் வேடிக்கையானவன். நல்ல குணமுள்ளவன். அவனுக்குத் தேனீர் கொடுத்தேன். சாப்பாடு போட்டேன். ஆனால் அவன் எதையும் சாப்பிடவில்லை. என்னை அழைத்தான். அவன் பிடில் வாசித்தான். அவனைப் போன்று பிடில் வாசிப்பவனே இருக்க மாட்டான் போலத் தோன்றிற்று. இப்படிப் பட்டவனுக்கு ஒருவர் உதவி செய்வது அவசியம். அவன் 'வொல்காவின் உதயம்' என்ற பாட்டை பிடிலில் இசைத்தபோது கேட்டவர் கண்ணீர் வடிக்கும் வண்ணம் இருந்தது. அது வெகு நேர்த்தியாகவும் இருந்தது. எல்லா வீட்டு வேலைக்காரர்களும் பின்புற வழியாக அவன் பாட்டைக் கேட்க வந்து விட்டார்கள்' என்றான் ஜக்கார்.

'நல்லது. அவனுக்கு உடைகளைக் கொடுத்தாயா?'

'கொடுத்தேன். உங்களுடைய இரவு வேளைச் சொக்காயைக் கொடுத்தேன். என்னுடைய நிஜாரையும் தந்தேன். அவனைப் போன்றவனுக்கு உதவி செய்வது நல்லது. பாவம், நல்லவன்!'

சிறிது நேரம் இருவரும் மௌனமாக யிருந்தனர். பிறகு மீண்டும் ஜக்கார், 'நீங்கள் என்ன பதவியில் இருக்கிறீர்கள்? உங்களுக்கு செல்வாக்குள்ளவர்கள் சிநேகம் இருக்கிறதா? வேலைக்காரர்கள் எத்தனைபேர் இருக்கிறார்கள்? சொத்து என்ன இருக்கிறது என்றெல்லாம் என்னைக் கேட்டுக் கொண்டிருந்தான்' என்றான்.

'சரி, சரி, ஒரு வேளை மீண்டும் அகப்பட்டால் அவனுக்குச் சாராயம் கொடுக்காதே. அதனால் அவன் இன்னும் மோசமாகி விடுவான்.'

'நீங்கள் சொல்வது உண்மைதான். அவனே பலவீனமாக யிருக்கிறான். உங்கள் தகப்பனாரிடம் இவனைப் போன்று ஒரு குமாஸ்தாயிருந்தான்...'

டெல்ஸாவுக்கு அந்த குமாஸ்தாவைப் பற்றி நன்றாகத் தெரியும். அவன் ஓயாமல் சாராயம் பருகி வந்ததும் டெல்ஸாவுக்கு தெரியும். அதனால் ஜக்காரை மேலும் குமாஸ்தா பற்றிப் பேசவிடவில்லை. அவன் குறுக்கிட்டுப் பேச்சை நிறுத்தினான். இரவுக்குத் தேவையானதைத் தயார் செய்துவிட்டு ஆல்பர்ட்டைத் தேடி அழைத்து வர ஜக்காரை வெளியே அனுப்பினான் டெல்ஸாவ்.

பிறகு படுக்கும் அறைக்குச் சென்றான் டெல்ஸாவ். விளக்கை அணைத்து விட்டுப் படுக்கையில் படுத்தான். தூக்கம் வரவில்லை. ஆல்பர்ட்டைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தான். 'என் நண்பர்களைக் காண புதுமையாக யிருக்கலாம். ஆனால் கடவுளால் அளிக்கப்பட்ட இம்மாதிரியான சந்தர்ப்பத்தைக் கண்டு அவருக்கு நன்றி செலுத்தாமலிருக்க முடியாது. நானும் இந்தச் சந்தர்ப்பத்தைக் கைவிடமாட்டேன். என் சக்திக்கேற்ப அவனுக்கு உதவி செய்வேன். மேலும் அவன் பைத்தியக்காரனில்லை, சாராய போதையில்தான் அவன் மோசமாக நடந்துகொள்கிறான். அவனால் எனக்கு அதிகச் செலவு ஏற்படாது. ஒருவனுக்குப் போதுமானதாக இருப்பது, இருவருக்கும் போதும். என்னுடன் சில நாள் இருக்

கட்டும். பிறகு அவனுக்குக் கச்சேரி செய்ய ஒரு வழி செய்யலாம். சீர்கேடான நிலையிலிருந்து அவனை மேலே தூக்கிவிடலாம். பிறகு என்ன நடக்கிறது பார்க்கலாம்' என்று எண்ணியதும் அவன் மனதில் மகிழ்ச்சி ஏற்பட்டது.

''நானும் ஒரேயடியாகக் கெட்டவனல்ல. மற்றவர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது நானே நல்லவன் என்று தோன்றுகிறது'' என்று டெல்ஸாவ் கருதினான்.

அவனுக்குத் தூக்கம் வரும் சமயம் வாயில் கதவு திறக்கப்படும் சப்தம் கேட்டது. அத்துடன் முன் ஹாலில் யாரோ வரும் காலடிச் சப்தமும் கேட்டது. அதைக் கேட்டு அவன் தூக்கம் கலைந்தது.

'நல்லது, அவனிடம் நான் கண்டிப்பான முறையில் நடந்துகொள்கிறேன். அதுதான் நல்லது. அப்படியே நடந்துகொள்கிறேன்' என்று எண்ணி டெல்ஸாவ் வேலைக்காரனை அழைக்க மணியை அடித்தான்.

ஜக்கார் வந்ததும், 'அவனை அழைத்து வந்தாயா?' என்று கேட்டான்.

'பாவம், பரிதாபமாக யிருக்கிறான்' என்று கண்களை மூடிக்கொண்டே சொன்னான் ஜக்கார்.

'சாராயம் பருகியிருக்கிறானா?'

'ஆமாம், மிகவும் பலவீனமாக யிருக்கிறான்.'

'பிடில் அவனிடம் இருக்கிறதா?'

'அதை நான் வாங்கி வந்துவிட்டேன். அந்தச் சீமாட்டி கொடுத்தாள்.'

'நல்லது, அவனை இப்பொழுது இங்கே அழைத்து வராதே, படுக்கையில் படுக்க வை. எக்காரணத்தைக் கொண்டும் நாளை அவனை வெளியே போகவிடாதே.'

ஆனால் ஜக்கார் அந்த அறையை விட்டுப் போவதற்குள்ளாகவே ஆல்பர்ட் அங்கு வந்துவிட்டான்.

'நீங்கள் இப்பொழுதே தூங்கப்போகிறீர்களா? நான் அன்னா ஐஸிேனோவாவின் வீட்டிற்குப் போயிருந்தேன்.

மாலைப்பொழுது வெகு நேர்த்தியாகக் கழிந்தது. மன திற்கு மகிழ்ச்சியைத் தரக்கூடியவர்களுடன் சேர்ந்து ஆடிப்பாடிக் களித்தோம். ஒரு கோப்பை ஏதாவது கொடுங் கள்!' என்று ஆல்பர்ட் கூறித் தண்ணீர் புட்டியைக் கையில் எடுத்தான். பிறகு 'தண்ணீரில்லை. வேறு ஏதாவது...' என்ருன்.

முதல் நாள் மாலையைப் போலவே அப்பொழுதும் காணப்பட்டான் ஆல்பர்ட். அதே புன்முறுவல் பூத்த முகம், ஒளி பொருந்திய கண்கள், பரந்த நெற்றி, பலவீன மான கால் கைகள்; ஜக்காருடைய நிஜார் அவனுக்குச் சரியாக யிருந்தது. சுத்தமான இரவுச் சொக்காயின் கழுத் துப் பட்டைக்குக் கீழ் ஆல்பர்ட்டின் வெளுத்த நீண்ட கழுத்துக் காணப்பட்டது. உடையும், அவனது தோற்ற மும் சிறு பிள்ளை போலத் தோன்றிற்று. அவன் டெல்ஸா வின் படுக்கையில் உட்கார்ந்து மௌனமாக நன்றி கலந்த புன்முறுவல் செய்தான்.

டெல்ஸாவ் அவனுடைய கண்களையே பார்த்தான். அவனுடைய புன்முறுவலால் டெல்ஸாவ் கவரப்பட்டான். அதன் பிறகு அவன் தூங்க விரும்பவில்லை. மேலும் அவன் கண்டிப்பாக இருக்கவேண்டும் என்ற தீர்மானத்தை யும் மறந்தான். அதற்கு மாருகப் பொழுது விடியும்வரை ஆல்பர்ட்டின் சங்கீதத்தைக் கேட்டுச் சந்தோஷமாகப் பொழுது போக்க விரும்பினுன். அவன் ஜக்காரிடம் பிடில், சாராயம், சிகரெட் ஆகியவற்றை எடுத்துவரும்படி உத்தர விட்டான்.

"ஆமாம். அதுதான் வேண்டும். இன்னும் படுக்க நேரமாகவில்லை. சிறிது சங்கீதம் கேட்கலாம். நீங்கள் விரும்பும்வரை பிடில் வாசிக்கிறேன்' என்ருன் ஆல்பர்ட்.

ஜக்கார் குதூகலத்துடன் ஒரு புட்டி சாராயம், இரண்டு கிண்ணங்கள், சிறிது சிகரெட், பிடில் ஆகிய வற்றை எடுத்து வந்தான். எஜமானனைப் போலவே அவனும் படுக்கப் போகவில்லை. ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு அடுத்த அறையில் உட்கார்ந்துகொண் டான்.

'நாம் சிறிது பேசலாம்' என்று ஆல்பர்ட்டிடம் சொன் ஞன் டெல்ஸாவ். அப்போது ஆல்பர்ட் கையில் பிடிலை எடுக்கப் போனுன். அவன் உடனே பிடிலை வைத்துவிட்டு

புன்முறுவல் செய்து கொண்டு சந்தோஷமாக உட்கார்ந்திருந்தான்.

'ஆமாம். நல்லது' என்று கூறி ஆல்பர்ட் ஆவலுடன் நெற்றியை வருடிக்கொண்டான். 'நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். நேற்றிரவு ஒருவரை "என்" என்று பெயரிட்டு அழைத்தீர்களே, அவர் அந்தப் புகழ்பெற்ற "என்" என்பவரின் மகனா?' என்று கேட்டான்.

'அவருடைய மகன்தான்' என்று ஆல்பர்ட் கேட்பதற்கான காரணத்தை அறியாமல் பதில் சொன்னான் டெல்ஸாவ்.

'நல்லது!' என்று திருப்தியடைந்த சந்தோஷத்தில் புன்முறுவல் செய்தான் ஆல்பர்ட். 'அவருடைய நடை உடை பாவனையிலிருந்து பிரத்யேகமான தன்மையைக் கண்டேன். நான் பிரபுக்களை நேசிக்கிறேன். பிரபுக்களிடத்தில் சில நேர்த்தியான குணங்களும், பெருந்தன்மையும் இருக்கும். அந்த அதிகாரி வெகு நேர்த்தியாக நடனமாடினார் அல்லவா? அவரையும் எனக்குப் பிடித்திருந்தது. அவர் அந்த "என்"னின் மெய்காப்பாளரா?'

'யார் அது?'

'நாம் நடனமாடும்போது என்மீது மோதிக்கொண்டாரே அவர்தான். அவர் மிகவும் நல்லவராக யிருக்க வேண்டும்.'

'இல்லை. அவன் சாதாரணமானவன்.'

'அப்படி யிருக்கமாட்டார். அவரிடம் ஏதோ சிறந்த பண்புகள் இருக்க வேண்டும். அவர் சிறந்த சங்கீத ரசிகர்; நடனசாலையில் ஆடாத நடனம் ஒன்றை அவர் ஆடினார். ஒருவர் ஆட்டத்தைக் கண்டு நான் புகழ்ந்து வெகு நாட்களாகி விட்டன.'

'ஆமாம் அவன் நன்றாக நடனமாடுகிறான். ஆனால் அவனுடைய நடனம் எனக்குப் பிடிக்கவில்லை' என்றான் டெல்ஸாவ். தன் நண்பன் சங்கீதத்தைப் பற்றிப் பேச வேண்டும் என்று அவன் கருதினான். 'அவனுக்கு நல்ல முறையான சங்கீதம் தெரியாது. சாதாரணப் பாடல்களே தெரியும். நீங்களும் அவனைப் பற்றி அப்படியே நினைக்கலாம்.'

'இல்லை இல்லை, மன்னிக்கவும்' என்று ஆல்பர்ட் பெருந்தன்மையாக டெல்ஸாவைப் பார்த்தான். 'பழைய சங்கீதம்

ஒரு வகையானது. புதியது ஒருவிதம். நவீனகால சங்கீதத்திலும் மெச்சத்தகுந்த பல இருக்கின்றன. ஸோனு புலா, லூஸியா, ரோபர்ட் ஆகிய பாடல்கள் மிகச் சிறந்தவை. பிதோவன் இப்பொழுது உயிருடன் இருந்தால் ஸோனு புலாவைக் கேட்டுக் கண்ணீர் வடிப்பார் என்று பலமுறை எண்ணியிருக்கிறேன். அந்தப் பாட்டில் அவ்வளவு இனிமையும் அழகும் மிளிர்கிறது. விர்டோத்தும், ரூபாணியும் இங்கு இருக்கும்போது ஸோனுபுலாவைக் கேட்டிருக்கிறேன். அது இப்படித்தான் இருக்க...' என்று கண்களில் ஒளி மின்ன, இரண்டு கைகளாலும் மார்பிலிருந்து எதையோ பிய்த்தெடுப்பது போல் பார்த்தான். 'அது இன்னும் சிறிது அதிகமாகப் போயிருந்தால் மனதைக் கட்டுப்படுத்தவே கடினமாகிவிடும்' என்ருன்.

'தற்கால சங்கீத வித்வான்களைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'

'இதாலிய தேசத்து பாடகி போஸியோ நல்லவள். நல்ல பாடகிதான். ஆனல் அவள் பாட்டு இதயத்தைத் தொடுவதாக இல்லை' என்று கூறி ஆல்பர்ட் இதயத்தைத் தொட்டுக் காண்பித்தான். 'ஒரு பாடகிக்கு ஆர்வம் இருக்க வேண்டும். அதுதான் அவளிடம் இல்லை. அவள் பாட்டு கேட்பவர்களை சந்தோஷப்படுத்துகிறது. ஆனல் மனதைத் தொடுவதாக இல்லை'

'லாபலாசி எப்படி?'

'நான் அவருடைய பாட்டைப் பாரிஸ் நகரத்தில் கேட்டிருக்கிறேன். அப்பொழுது அவர் எல்லோராலும் போற்றப்பட்டார். ஆனல் இப்பொழுது அவருக்கு வயதாகிவிட்டது. வயதான பிறகு அவர் பாடகராக இருக்க முடியாது.'

'வயதாகிவிட்டால் என்ன? இன்னமும் நன்ருகத்தான் பாடுகிருர்' என்று லாபலாசியின் ரசிகனை டெல்ஸாவ் சொன்னுன்.

'எப்படி? அவருக்கு வயதாகிவிட்டதா?' என்று ஆல்பர்ட் பேச்சை மாற்றிக்கொண்டான். 'வயதாகியிருக்காது'. ஒரு கலைஞன் கிழவனுகவே மாட்டான். கலைக்கு அனுபவம் வேண்டும். தவிர...' என்று சொல்லி அவன் கைகளை மேலே உயர்த்தினுன்.

அவனுடைய உள்ளத்தில் நெருப்புக் கொழுந்துவிட்டு எரிவது போலக் காணப்பட்டது. 'கடவுளே! உங்களுக்கு பெட்ராவ் என்ற கலைஞனைத் தெரியுமா?'

'தெரியாது' என்று டெல்ஸாவ் கூறிப் புன்முறுவல் செய்தான்.

'அவரை உங்களுக்கு அறிமுகம் செய்துவைக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அவரிடம் பேசுவதே உங்களுக்கு மகிழ்ச்சியை அளிக்கும். சித்திரக் கலையைப் பற்றி அவர் எப்படி அறிந்திருக்கிறார்! நான் அடிக்கடி அவரை அன்னா ஐவனோவாவின் வீட்டில் சந்திப்பேன். ஆனால் எக்காரணத்தாலோ அன்னா ஐவனோவாவுக்கு அவர்மீது கோபம். அவர் இப்பொழுது அங்கு வருவதில்லை. நீங்கள் கட்டாயம் அவரைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும்; அவர் பெரிய கலைஞர்.'

'இப்பொழுதும் அவர் சித்திரம் வரைகிறாரா?'

'எனக்குத் தெரியாது. எழுதுவதில்லை என்றுதான் நினைக்கிறேன். ஆனால் அவர் அகாடமியின் சித்திரக்காரர். அவருக்கு எவ்வளவு கற்பனைசக்தி யிருக்கிறது! சிலசமயங்களில் அவர் பேசுவது வெகு நேர்த்தியாக இருக்கிறது. ஹூம், பெட்ராவும் சிறந்த கலைஞன்தான். அவர் ஆடம்பரமான வாழ்க்கை நடத்துவதுதான் வருத்தமாக யிருக்கிறது' என்று சொல்லி ஆல்பர்ட் புன்முறுவல் செய்தான். பிறகு படுக்கையிலிருந்து எழுந்து பிடிலை எடுத்து சுருதிகூட்டத் தொடங்கினான்.

'நடன சாலையை விட்டு வெகுநாட்களாகின்றனவா?'

ஆல்பர்ட் நாலாபக்கமும் பார்த்துப் பெருமூச்சுவிட்டான். 'இனி என்னால் அங்கே போகமுடியாது. எல்லாவற்றையும் சொல்கிறேன்' என்று சொல்லித் தலை குனிந்து மீண்டும் டெல்ஸாவின் படுக்கையில் உட்கார்ந்தான் ஆல்பர்ட். பிறகு மெல்லிய குரலில் 'நான் அங்கே போக முடியாது. அங்கு பிடிலும் வாசிக்க இயலாது. என்னிடம் ஒன்றுமே யில்லை. துணியில்லை; எனக்கு இருக்க இடமில்லை; பிடிலும் இல்லை. என் வாழ்க்கை மிகவும் துன்பகரமானது! துன்பகரமானது!!' என்று பலமுறை கூறிவிட்டு 'நான் ஏன் அங்கே போகவேண்டும்? எதற்காக நான் போகவேண்டும்? போக வேண்டிய அவசியமே இல்லை......

ஹூம், டான்வான்' என்று கூறி அவன் கையால் தலையில் அடித்துக் கொண்டான்.

'அப்படியானால் நாம் இருவருமாகச் சேர்ந்து எப்பொழுதாவது அங்கே போகலாம்' என்றான் டெல்ஸாவ்.

பதில் சொல்லாமல் ஆல்பர்ட் துள்ளி எழுந்தான். பிடிலை எடுத்து 'டான்வான்' நடன நாடகத்தின் முதல் அங்கத்தின் கடைசிப் பகுதியை வாசித்தான்.

ஆல்பர்ட் பிடிலில் மரணத் தருவாயிலிருக்கும் ராணுவ அதிகாரி கூறுவதை வாசித்தான். அதைக் கேட்டதும் டெல்ஸாவின் மெய் சிலிர்ப்பது போலிருந்தது.

'முடியாது. என்னால் இன்று வாசிக்க முடியாது. நான் அதிகமாகச் சாராயம் பருகி யிருக்கிறேன்' என்று சொல்லி ஆல்பர்ட் பிடிலைக் கீழே வைத்தான்.

ஆனால் மறு கணமே மேஜையருகில் சென்று சாராய புட்டியை எடுத்தான். கிண்ணத்தில் சாராயத்தை ஊற்றி ஒரே மடக்கில் பருகி விட்டான். பிறகு வந்து டெல்ஸாவின் படுக்கையில் உட்கார்ந்து கொண்டான்.

வைத்த கண் எடுக்காமல் ஆல்பர்ட்டையே பார்த்துக் கொண்டிருந்தான் டெல்ஸாவ். அடிக்கடி ஆல்பர்ட் புன்முறுவல் செய்தான். டெல்ஸாவும் புன்முறுவல் செய்தான். இருவரும் பேசாமல் மௌனமாக இருந்தார்கள். ஆனால் அவர்களுடைய புன்முறுவல் மேலும் மேலும் அவர்களிடையே நேசத்தை வளர்த்தது. டெல்ஸாவுக்கு அவனைப் பிடித்திருந்தது. ஆல்பர்ட்டால் அவனுக்கு அளவிட முடியாத மகிழ்ச்சி ஏற்பட்டது.

'நீங்கள் எப்பொழுதாவது யார் மீதாவது காதல் கொண்டிருக்கிறீர்களா?' என்று சற்றும் எதிர்பாராத வகையில் கேட்டான் டெல்ஸாவ்.

ஆல்பர்ட் சிறிது நேரம் சிந்தனையில் மூழ்கினான். பிறகு வருத்தம் தோய்ந்த புன்முறுவல் அவன் முகத்தில் படர்ந்தது. அவன் டெல்ஸாவ் பக்கமாகக் கையை ஊன்றி அவன் கண்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். 'நீங்கள் ஏன் அந்தக் கேள்வியைக் கேட்டீர்கள்? உங்களை நேசிக்கிறேன். அதனால் உங்களிடம் எல்லாவற்றையும் சொல்லி விடுகிறேன்' என்று சொன்னான். டெல்ஸாவையே பார்த்துக் கொண்டிருந்தான். எப்பொழுதாவது திரும்பி நாலா பக்கமும் பார்த்தான்.

'உங்களிடம் எதையும் மறைக்க மாட்டேன். ஆரம்பத்திலிருந்து எல்லாவற்றையும் சொல்கிறேன்!' என்று சொன்னான் ஆல்பர்ட். அவனுடைய கண்கள் விரிந்தன.

'என் மனம் மிகவும் பலவீனமானது என்பது உங்களுக்குத் தெரியும். ஆமாம், ஆமாம். அன்னா ஐஸிவோவா உங்களிடம் சொல்லியிருப்பாள். நான் பைத்தியக்காரன் என்று அவள் எல்லோரிடத்திலும் சொல்லி வருகிறாள். அது உண்மையல்ல. அவள் இப்படி வேடிக்கைக்காகவே சொல்கிறாள். அவள் மிகவும் நல்லவள். உண்மையிலேயே நான் சில காலமாக என் சுய உணர்வுடன் இல்லை தான்' என்று சொல்லிப் பேச்சைச் சிறிது நேரம் நிறுத்தினான், இருளடைந்த கதவுப் பக்கம் பார்த்தான். 'நான் யார் மீதாவது காதல் கொண்டேனா என்று கேட்டீர்கள். ஆமாம். நான் ஒரு சமயம் ஒருவள்மீது காதல் கொண்டிருந்தேன்!' என்று சொல்லி அவன் புருவத்தை மேலே உயர்த்தினான். 'நான் நடன சாலையில் வேலை செய்து கொண்டிருந்தபோது அது நடந்தது. நடன சாலையில் நான் இரண்டாவது பிடில்காரனாக யிருந்தேன். அவள் மேடைக்கு அருகில் இடது புற சோபாவில் உட்காருவது வழக்கம்' என்று சொல்லி எழுந்தான் ஆல்பர்ட். பிறகு டெல்ஸாவின் முகத்திற்கு அருகாமையில் குனிந்தான்.

'நான் ஏன் அவள் பெயரைச் சொல்லவேண்டும்? உங்களுக்கும் அவளைக் கட்டாயம் தெரிந்திருக்கும். எல்லோருக்கும் அவளைத் தெரியும். நான் அவளைப் பார்த்துக் கொண்டே யிருப்பேன். அவளோ பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவள். நானோ ஏழை சங்கீதவித்வான். இது எனக்கு நன்றாகத் தெரியும். அவளை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தேனே தவிர வேறு விதமாகத் திட்டம் போட்டு விடவில்லை'

ஆல்பர்ட் பேச்சை நிறுத்திக் கடந்த சம்பவங்களை நினைவு படுத்திக்கொள்ள முயற்சித்தான்.

'அது எப்படி நடந்தது என்று நினைவில்லை. ஆனால் ஒரு சமயம் அவளுடன் பிடில் வாசிக்க என்னை அழைத்தார்கள்; நான் யார், ஒரு ஏழை சங்கீத வித்வான்' என்று தலையை அசைத்துப் புன்முறுவல் செய்தான் ஆல்பர்ட். 'முடியாது. நான் சொல்ல மாட்டேன்...நான் எவ்வளவு சந்

தோஷமாக யிருந்தேன்' என்று கூறி அவன் கைகளால் தலையைப் பற்றிக் கொண்டான்.

'உண்மையாகவா?...நீங்கள் அடிக்கடி அவள் வீட்டிற்குப் போவீர்களா?' என்று கேட்டான் டெல்ஸாவ்.

'ஒரு முறைதான் போயிருக்கிறேன். ஆனால் அது என் தவறுதான். நான் பித்தனைப் போலிருந்தேன். அவள் பெரிய சீமாட்டி. நானோ ஏழை சங்கீத வித்வான். அவளிடம் நான் ஒன்றும் சொல்லியிருக்கக் கூடாது. ஆனால் நான் பித்தனைப்போல் சென்று முட்டாள்த்தனமாக நடந்து கொண்டேன். பெட்ராவ் சொன்னது உண்மைதான். அவளை நான் நடனசாலையிலேயே பார்த்துக் கொண்டிருப்பதுதான் எனக்கு நல்லது'

'நீங்கள் என்ன செய்தீர்கள்?'

'சற்று பொறுங்கள். என்னால் அந்தச் சம்பவம் பற்றிப் பேச முடியாது' என்று கூறி ஆல்பர்ட் கைகளில் முகத்தைப் புதைத்துக்கொண்டு மௌனமாக யிருந்தான்.

'நான் அன்று நேரம் பொறுத்தே வந்தேன். அன்று மாலை நானும் பெட்ராவும் சாராயம் பருகினோம். என் மனம் ஒரு நிலையில் இல்லை. அவள் வழக்கம் போல தன் இடத்தில் உட்கார்ந்து ஒரு ராணுவ அதிகாரியுடன் பேசிக் கொண்டிருந்தாள். எனக்கு அந்த ராணுவ அதிகாரியைத் தெரியாது. அவள் சோபாவின் முனையில் உட்கார்ந்து கைகளையும் சோபாவின் பிடியில் வைத்துக் கொண்டிருந்தாள். வெள்ளை உடை அணிந்து, கழுத்தில் விலை உயர்ந்த கற்கள் பதித்த பதக்கம் போட்டிருந்தாள். அவள் ராணுவ அதிகாரியுடன் பேசிக்கொண்டே என்னைப் பார்த்தாள். அப்படி அவள் என்னை இரண்டு மூன்று முறை பார்த்திருப்பாள். அவளுடைய கூந்தல் வாரி முடியப்பட்டிருந்தது. நான் பிடில் வாசிக்காமல் அவளைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தேன். அப்பொழுது என் மனதில் ஒரு புதுமையான உணர்ச்சி ஏற்பட்டது. அவள் ராணுவ அதிகாரியைப் பார்த்து புன்முறுவல் செய்தாள். பிறகு என்னைப் பார்த்தாள். அவள் என்னைப் பற்றிப் பேசுவதாக எண்ணினேன். திடீரென்று நான் வாத்திய கோஷ்டியில் இல்லை. ஆனால் அவள் சோபாவுக்குப் பக்கத்து சோபாவில் உட்கார்ந்திருந்தேன். அவள் கையையும் பற்றிக்

கொண்டிருந்தேன். அது எப்படி நடந்தது?' என்று கேட்டு மௌனமானுன் ஆல்பர்ட்.

'அது வெறும் கற்பனை!' என்ருன் டெல்ஸாவ்.

'இல்லை. இல்லை. எப்படி என்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை...அப்படியே இருந்தாலும் நானோ ஏழை. எனக்கு இருக்க ஒரு இடமில்லை. நான் நடன சாலைக்குச் சென்ருல் சில சமயங்களில் இரவில் அங்கேயே தங்கி விடுவேன்.'

'என்ன? கொட்டகையிலேயா தங்கி விடுவீர்கள்? ஜன சந்தடியற்று, இருட்டாக இருக்குமே!'

'எனக்கு அதைப்பற்றி எல்லாம் கவலை யில்லை. பயமுமில்லை. சற்று பொறுங்கள்...எல்லோரும் போன பிறகு நான் அவள் வழக்கமாக உட்காரும் சோபா இருக்குமிடத்திற்குச் செல்வேன். அதிலேயே படுத்துத் தூங்குவேன். அதுவே என் மனதிற்குச் சந்தோஷத்தை அளித்து வந்தது. எவ்வளவோ இரவு நான் அந்த சோபாவில் படுத்துத் தூங்கியிருக்கிறேன்! சோபாவில் படுத்திருக்கும்போது பல எண்ணங்கள் உண்டாகும். ஆனுல் இனிமேல் சொல்ல முடியாது' என்ருன் ஆல்பர்ட். அப்போது டெல்ஸாவ் அவனையே பார்த்துக் கொண்டிருந்தான். இதைக் கண்டு 'என்ன அது?' என்று கேட்டான்.

'விசித்திரமாக இருக்கிறது' என்ருன் டெல்ஸாவ்.

'இல்லை. பொறுங்கள்' என்று கூறி மெல்லிய குரலில் டெல்ஸாவின் காதருகில் 'நான் அவள் கைகளில் முத்தமிட்டேன். அவள் அருகில் உட்கார்ந்து கண்ணீர் பெருக்கினேன். பல விஷயங்களைப் பேசினேன். அவள் பூசியிருந்த வாசனைப் பொருள்களை முகர்ந்தேன். அவள் குரலையும் கேட்டேன். ஒரு இரவிலேயே அவள் என்னிடம் பல வற்றைச் சொன்னுள். அதன் பிறகு நான் என் பிடிலைக் கையிலெடுத்து மெல்ல வாசித்தேன். வெகு நேர்த்தியாக வாசித்தேன். ஆனுல் எனக்குப் பயமாக யிருந்தது. அந்த முட்டாள்த்தனமானவற்றைக் கண்டு நான் பயப்படவில்லை. எனக்கு அதில் நம்பிக்கையுமில்லை. ஆனுல் என் மனதின் மீதுதான் எனக்குப் பயமிருந்தது' என்று கூறி டெல்ஸாவின் தலையைத் தொட்டான் ஆல்பர்ட். பிறகு 'என் நடவடிக்கைகளே எனக்கு பயத்தை உண்டு பண்ணிற்று. என் மூளையே தடுமாறுவதாகக் கருதினேன். ஒரு வேளை

அது ஒன்று மில்லாமலிருக்கலாம். நீங்கள் என்ன கிறீர்கள்?' என்று கேட்டான்.

சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தார்கள்.

'மேகங்கள் மறைக்கலாம்;
அப்படியும் சூரியன் நிலைத்து இருந்து வந்தான்;
நானும் வாழ்ந்தேன்; அதை அனுபவித்தேன்'

என்று ஆல்பர்ட் புன்முறுவல் செய்து பாடினான். 'அப்படித்தானே?' என்று பிறகு கேட்டான்.

மீண்டும் சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தார்கள்.

'ஹூம் பெட்ராவ் இதையெல்லாம் உங்களிடம் சொன்னால் எவ்வளவு நேர்த்தியாக இருக்கும்' என்றான் ஆல்பர்ட்.

டெல்ஸாவ் மௌனமாக ஆல்பர்ட்டின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். ஆல்பர்ட்டின் முகம் பயத்தால் வெளுத்திருந்தது.

'உங்களுக்கு ஜூரிஸ்டன் நடனப் பாட்டுத் தெரியுமா?' என்று ஆல்பர்ட் கேட்டான். பதிலுக்காகக் காத்திராமல் அவன் துள்ளி எழுந்தான். பிடிலை எடுத்து அந்தப் பாடலை வாசிக்கத் தொடங்கினான். அவன் தன்னையே மறந்து பெரிய வாத்திய கோஷ்டியுடன் சேர்ந்து வாசிப்பது போல் பிடிலில் பாட்டை இசைத்தான். புன்முறுவல் செய்து கால்களால் தாளம் போட்டான்.

'போதும் விளையாட்டு' என்று சொன்னான் பாட்டு முடிந்ததும் ஆல்பர்ட். பிறகு 'நான் போகிறேன். நீங்கள் என்னுடன் வரமாட்டீர்களா?' என்று கேட்டு மௌனமாக டெல்ஸாவின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

டெல்ஸாவ் ஆச்சரியத்துடன் 'எங்கே?' என்று கேட்டான்.

'அன்னா ஐவிநோவாவின் வீட்டிற்குப் போகலாம். அங்கே எல்லாம் வேடிக்கையாக யிருக்கும் ஜனங்கள், பாட்டு, கூத்து.'

முதலில் ஆல்பர்ட்டுடன் போக டெல்ஸாவ் தீர்மானித்தான். ஆனால் ஆல்பர்ட்டின் நிலையைக் கண்டு பிறகு அவனை அன்றிரவு போகவேண்டாம் என்றான்.

'போய் சிறிது நேரம் இருந்து திரும்பி விடலாம்.'

'வேண்டாம். நீங்கள் போகாமலிருப்பதுதான் நல்லது'.

ஆல்பர்ட் பெருமூச்சுவிட்டு பிடிலைக் கீழே வைத்தான். 'அப்படியானால் நான் இங்கே தங்க வேண்டியதுதான்'. என்று கூறி ஆல்பர்ட் மேஜையைப் பார்த்தான். அங்கு சாராயம் இல்லை. பிறகு இரவு வந்தனம் கூறிவிட்டு அந்த அறையிலிருந்து சென்றான்.

டெல்ஸாவ் வேலைக்காரனை மணி அடித்து அழைத்தான். வேலைக்காரன் ஜக்கார் வந்ததும் 'என் உத்தரவில்லாமல் ஆல்பர்ட்டை வெளியே போகவிடாதே! என்று கட்டளையிட்டான்.

## 6

மறுநாள் காரியாலயத்திற்கு விடுமுறை. டெல்ஸாவ் அதிகாலையிலேயே எழுந்து விட்டான். அவன் காபி அருந்திவிட்டு முன் ஹாலில் உட்கார்ந்து புத்தகம் படித்துக்கொண்டிருந்தான். ஆல்பர்ட் பக்கத்து அறையில் தூங்கிக்கொண்டிருந்தான்.

சாப்பாட்டு அறைக்கதவை மெள்ளத்திறந்து உள்ளே பார்த்தான் ஜக்கார் 'நீங்கள் சொன்னால் நம்பமாட்டீர்கள். அவர் குழந்தையைப்போல சோபாவில் படுத்துத் தூங்குகிறார். உண்மையில் அவர் ஒரு கலைஞர் தான்!' என்றான்.

நன்பகலுக்கு அறையிலிருந்து இருமும் சப்தம் கேட்டது.

ஜக்கார் மீண்டும் சாப்பாட்டு அறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான். உடனே ஜக்காரின் அன்பு ததும்பும் குரலும், ஆல்பர்ட்டின் கெஞ்சும் குரலும் டெல்ஸாவுக்குக் கேட்டது.

ஜக்கார் திரும்பி வந்ததும் 'என்ன?' என்று டெல்ஸாவ் கேட்டான்.

'முகம் சுத்தம் செய்யமாட்டேன் என்கிறார். சாராயம் வேண்டும் என்று கெஞ்சுகிறார். அவர் முகத்தைப் பார்த்தால் வேதனையுடனிருப்பவர் போல இருக்கிறது' என்றான் ஜக்கார்.

'வேண்டாம். நான் இந்த விஷயத்தைக் கவனித்துக் கொள்கிறேன்' என்று டெல்ஸாவ் தனக்குள்ளாகவே சொல்லிக்கொண்டான்.

ஆல்பர்ட்டிற்குச் சாராயம் கொடுக்கக்கூடாது என்று கட்டளையிட்டான். பிறகு மீண்டும் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினான். ஆனால் தன்னையறியாமலேயே சாப்பாட்டறையில் என்ன பேசப்படுகிறது என்பதை உற்றுக்கேட்டான். அங்கிருந்து பேச்சுக்குரல் கேட்கவில்லை. அடிக்கடி இருமல் சப்தம் மாத்திரம் கேட்டது. அத்துடன் காறி உமிழும் சப்தமும் கேட்டது. இரண்டுமணி நேரம் கடந்தது. டெல்ஸாவ் உடை அணிந்து கொண்டான். வெளியே போவதற்குமுன் ஆல்பர்ட்டைக் காணச் சென்றான்.

ஆல்பர்ட் ஜன்னலருகில் அசைவற்று உட்கார்ந்திருந்தான். கையை ஊன்றி அதில் தலையைச் சாய்த்துக்கொண்டிருந்தான். அவன் நாலாபக்கமும் பார்த்தான். அவனுடைய முகம் மஞ்சளாக இருந்தது. அவன் முகம் துக்கம் தோய்ந்து மாத்திரமல்ல, பரிதாபமாகவும் காணப்பட்டது. அவன் டெல்ஸாவை வரவேற்கும் முறையில் புன்முறுவல் செய்ய முயற்சித்தான். ஆனால் அவன் புன்முறுவல் செய்த போது மேலும் வருத்தம் தோய்ந்ததாக இருந்தது. அவன் வாய்விட்டு அழத் தயாராகயிருப்பது போலவும் தோன்றிற்று. அவன் மிகுந்த கஷ்டத்துடன் எழுந்து தலை குனிந்து வணங்கினான். 'தயவுசெய்து ஒரு கிண்ணம் சாராயம் கொடுங்கள். நான் மிகவும் பலவீனமானவன். தயவு செய்யுங்கள்' என்று கெஞ்சுவது போலக் கேட்டான்.

'சாராயத்திற்குப் பதிலாகக் காப்பி சாப்பிடுங்கள். அது உங்களுக்கு நல்லது' என்றான் டெல்ஸாவ்.

ஆல்பர்ட்டின் முகம் திடீரென்று குழந்தைத்தனத்திலிருந்து மாறிற்று. அவன் ஆத்திரத்துடன் மங்கிய பார்வையால் ஜன்னலுக்கு வெளியே பார்த்தான். பிறகு அப்படியே நாற்காலியில் சாய்ந்தான்.

'சாப்பிடுகிறீர்களா?'

'வேண்டாம். எனக்குப் பசியில்லை'.

'எனக்குத் தொந்தரவு கொடுக்காத விதம் வேண்டுமானால் பிடில் வாசியுங்கள்' என்று சொல்லி டெல்ஸாவ் பிடிலை எடுத்து மேஜைமீது வைத்தான்.

பிடிலை வெறுப்புடன் பார்த்துப் புன்முறுவல் செய்தான் ஆல்பர்ட். 'வேண்டாம். நான் மிகவும் பலவீனமாக

யிருக்கிறேன், என்னால் பிடில் வாசிக்க முடியாது' என்று சொல்லிப் பிடிலைத் தூரத் தள்ளினான்.

அதன் பிறகு டெல்ஸாவ், 'சிறிது உலாவப் போக லாமா? அல்லது மாலை நடனசாலைக்குப் போகலாமா?' என்று கேட்டான். அதற்கெல்லாம் ஆல்பர்ட் தலை வணங்கி மறுத்தான். எதற்கும் இசையாமல் மௌனமாக யிருந்தான்.

டெல்ஸாவ் வெளியே சென்றான். பலரைச் சந்தித் தான். நண்பர்களுடன் விருந்துண்டான். மாலை நடனம் பார்க்கக் கொட்டகைக்குப் போகுமுன் ஆல்பர்ட் என்ன செய்கிறான் என்பதைக் காண வீட்டிற்கு வந்தான்.

இருளடைந்த ஹாலில் ஆல்பர்ட் கையில் தலையை வைத்துக் கொண்டு கணப்பருகில் உட்கார்ந்திருந்தான். சுத்தமான உடை உடுத்தி யிருந்தான். தலை நன்றாக வாரி விடப்பட்டிருந்தது. ஆனால் அவனுடைய கண்கள் உணர் வற்று மங்கி யிருந்தன. காலையிலிருந்ததைவிட இப்போது அவன் மிகவும் பலவீனமாகக் காணப்பட்டான்.

'ஆல்பர்ட், சாப்பிட்டீர்களா?' என்று டெல்ஸாவ் கேட்டான்.

ஆல்பர்ட் வெறுப்புடன் டெல்ஸாவைப் பார்த்தான். பிறகு தலைகுனிந்து கொண்டான். டெல்ஸாவின் மனம் வேதனை யடைந்தது.

'உங்களைப்பற்றி நடனசாலை நிர்வாகியிடம் பேசினேன். உங்கள் பிடில் வாசிப்பைக் கேட்ட பிறகு சேர்த்துக் கொள்ளச் சம்மதித்தார்.'

'உங்கள் முயற்சிக்கு நன்றி. ஆனால் என்னால் பிடில் வாசிக்க முடியாது' என்று மெல்லிய குரலில் சொல்லி விட்டுத் தன் அறைக்குச் சென்றான் ஆல்பர்ட். கதவையும் சப்தம் செய்யாமல் மூடிக்கொண்டான்.

சிறிது நேரத்திற்குப் பிறகு கதவு மெள்ளத் திறக்கப் பட்டது. ஆல்பர்ட் கையில் பிடிலுடன் வெளியே வந்தான். பிடிலை டெல்ஸாவ் அருகில் வைத்து அவனை ஒருமுறை உற்றுப்பார்த்தான். பிறகு வேகமாக உள்ளே சென்று விட்டான்.

டெல்ஸாவ் தோள்களைக் குலுக்கிக்கொண்டு புன் முறுவல் செய்தான். 'இன்னும் நாம் என்ன செய்ய

வேண்டும்? எதற்காக என்மீது குறை கூறுவது?' என்று எண்ணினன்.

அன்று மாலே வெகு நேரம் பொறுத்தே டெல்ஸாவ் வீட்டிற்குத் திரும்பி வந்தான். உடனே ஜக்காரிடம் 'ஆல்பர்ட் எப்படி இருக்கிருர்?' என்று கேட்டான்.

'மிக மோசமாக இருக்கிருர். பெருமூச்சு விடுகிருர். அடிக்கடி இருமுகிருர். ஒன்றும் சொல்லமாட்டேன் என்கிருர். நான்கு ஐந்து முறை சாராயம் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார். கடைசியாக ஒரு கிண்ணம் சாராயம் கொடுத்தேன். இல்லாவிட்டால் அவர் அந்த குமாஸ்தா வின் கதியையே அடைந்திருப்பார்' என்ருன் ஜக்கார்.

'பிடில் வாசித்தாரா?'

'அதைத் தொடக்கூட இல்லே. பலமுறை பிடிலே எடுத்துக் கொடுத்தேன். ஆனல் கையில் வாங்கிக் கீழே வைத்துவிட்டார்...நல்லது. அவருக்குச் சாராயம்தானே கொடுக்கக் கூடாது என்று சொல்கிறீர்கள்?'

'இல்லே. இன்னும் ஒரு நாள் பொறுத்துப் பார்க்க லாம். இப்பொழுது அவர் என்ன செய்துகொண் டிருக்கிருர்?'

'முன் அறையில் அவர் கதவைத் தாளிட்டுக்கொண்டு உள்ளே இருக்கிருர்.'

டெல்ஸாவ் தன் படிப்பறைக்குச் சென்று பல பிரெஞ்சுப் புத்தகங்களேயும், ஜெர்மன் பாஷை கிறிஸ்துவ வேத புத்தகத்தையும் எடுத்து வந்தான். அவற்றை ஜக்காரிடம் கொடுத்து 'நாளே இந்தப் புத்தகங்களேக் கொண்டு போய் அவர் அறையில் வை. எக்காரணத்தைக் கொண்டும் அவரை வெளியே போகவிடாதே' என்ருன்.

மறுநாள் காலே ஜக்கார் வந்தான். 'இரவு முழுவதும் ஆல்பர்ட் தூங்கவில்லே. அறையில் குறுக்கும் நெடுக்கு மாக நடந்து கொண்டிருந்தார். வெளியே செல்ல ஜன்னலே யும், குளிக்கும் அறைக் கதவுகளேயும் திறந்து பார்த்தார். ஆனல் முன்னெச்சரிக்கையாக எல்லாக் கதவுகளேயும் நன்ருகத் தாளிட்டிருந்தேன். நான் தூங்குவது போலப் பாசாங்கு செய்து கொண்டே எல்லாவற்றையும் பார்த்துக் கொண் டிருந்தேன்' என்று டெல்ஸாவிடம் சொன்னன்.

நாளுக்கு நாள் ஆல்பர்ட்டின் முகம் வாட்டமடைந்து கொண்டே வந்தது. எப்பொழுதும் மௌனமாக யிருந்தான்.

டெல்ஸாவைக் கண்டு அவன் பயப்பட்டான். அவர்கள் சந்தித்த சமயம் ஆல்பர்ட்டின் முகத்தில் வேதனை படரும். அவன் புத்தகங்களையோ பிடிலையோ தொடக்கூடவில்லை. கேட்ட கேள்விக்குப் பதிலும் சொல்வதில்லை.

ஆல்பர்ட் வந்த மூன்றாவது நாள் டெல்ஸாவ் வெகு நேரம் கழித்து வீடு திரும்பினான். மிகவும் எளிதாகவும் அலட்சியமாகவும் கருதப்பட்ட ஒரு வேலைக்காக அவன் நாள் பூராவும் சுற்றி அலைந்தான். ஆனால் அவன் எவ்வளவு முயற்சித்தும் காரியம் கைகூடவில்லை. மேலும் அவன் சங்கத்திற்குச் சென்றான். சீட்டாட்டத்தில் ஏராளமாகப் பணம் தோற்றுவிட்டான். அதனால் அவன் ஆத்திரத்துடனிருந்தான்.

ஆல்பர்ட்டின் மோசமான நிலைமையை ஜக்கார் சொன்னான். அப்போது 'அவன் எப்படியாவது போகட்டும். அவன் இங்கே யிருக்கப் போகிறானா? என் சொல்படி நடக்கப் போகிறானா இல்லையா என்பதை நாளைக் கேட்டுத் தெரிந்து கொண்டு விடுகிறேன். அவன் விரும்பவில்லை என்றால் கவலையே இல்லை. நான் என்னால் முடிந்தது எல்லாம் செய்து பார்த்துவிட்டேன் என்று தோன்றுகிறது' என்றான் டெல்ஸாவ்.

''ஜனங்களுக்கு நன்மை செய்ய முயற்சிப்பதன் பலனைப் பார்! அவனுக்காக நான் வெளியில் சுற்றித் திரிகிறேன். இந்த மோசமானவனை என் வீட்டில் வைத்துக்கொண் டிருப்பதால் காலை வேளையில் யாரையும் அழைக்க முடியவில்லை. இவனைக் காணவேண்டும் என்று நான் ஓடோடியும் வருகிறேன். அவனோ என்னைத் தன் எதிரியாகப் பாவிக்கிறான். அவன் மனத்திருப்திக்காக கூண்டில் அடைபடுவது போல அறையில் புகுந்து தாளிட்டுக் கொள்கிறான். இதெல்லாவற்றையும்விட நான் சொல்வது ஒன்றைக்கூடக் கேட்கமாட்டேன் என்கிறான். அவர்கள் அனைவரும் அப்படித்தான். (அவர்கள் என்று டெல்ஸாவ் குறிப்பிட்டது அன்று அவன் சந்தித்துப் பேசியவர்களையேதான்) இவனால் எனக்கு இப்பொழுது என்ன ஆகவேண்டும்? அவன் என்ன நினைக்கிறான்? எதற்காகத் தொந்தரவு செய்கிறான்? அவனை இழுத்து வந்தேனே அந்தப் படுகுழியில் மீண்டும் விழவா? மானக்கேடான நிலைமையிலிருந்தானே அந்த இடத்திற்கா போக எண்ணு

கிறான்? திக்கற்ற நிலையி லிருந்தவனைக் காப்பாற்றி அழைத்துவந்தேனே, திரும்பவும் அதே நிலைக்கு ப்போகவா விரும்புகிறான்? உண்மையில் அவன் மிகவும் சீர்கேடான நிலைக்குப் போய்விட்டான். அதனாலேயே நல்லவிதமான வாழ்க்கையைக் கண்டதும் அவன் மனம் வேதனைப் படுகிறது.

"இல்லை. நான் சிறுபிள்ளைத்தனமாக நடந்துகொண்டு விட்டேன். நான் எப்படி மற்றவர்களைச் சீர்திருத்த முடியும்? என்னால் என்னைக் காப்பாற்ற முடியுமா என்பதைக் கடவுள்தான் அறிவார்" என்று டெல்ஸாவ் எண்ணினான். இந்த முடிவுக்கு வந்ததும் ஆல்பர்ட்டை உடனே அவன் விருப்பப்படி போக விட்டுவிட வேண்டும் என்று கருதினான். ஆனால் சிறிது நேரம் சிந்தித்த பிறகு அடுத்த நாள் வரை பொறுத்துப் பார்க்கலாம் என்று தீர்மானித்தான்.

நள்ளிரவில் முன் ஹாலில் மேஜை கீழே சாய்ந்த சப்தமும், பேச்சுக் குரலும், காலடிச்சப்தமும் கேட்டு டெல்ஸாவ் கண்விழித்தான். உடனே ஆச்சரியத்துடன் மெழுகு வத்தி ஒன்றை ஏற்றினான்.

'கொஞ்சம் பொறுங்கள். என் எஜமானரிடம் சொல்கிறேன்' என்று ஜக்கார் சொன்னான்.

ஆல்பர்ட் ஏதோ கோபமாகச் சொன்னான். டெல்ஸாவ் உடனே கையில் மெழுகுவத்தியுடன் முன் ஹாலுக்குச் சென்றான். இரவு உடையில் ஜக்கார் வாசல் கதவுப் பக்கம் நின்றுகொண்டிருந்தான். ஆல்பர்ட் கையில் தொப்பி, கோட்டுடன் ஜக்காரை அப்புறம் தள்ளிக் கொண்டே உரத்த குரலில் 'உன்னால் என்னை இங்கே அடைத்து வைத்திருக்க முடியாது. என்னிடம் எங்கு வேண்டுமானாலும் போக அத்தாட்சிப் பத்திரம் இருக்கிறது. நீ வேண்டுமானால் என்னைச் சோதனை செய்துகொள். உங்கள் வீட்டுப்பொருள் எதையும் நான் எடுத்துக்கொள்ளவில்லை. நான் நேரே போலீஸ் தலைமைக் காரியாலயத்திற்குப் போகிறேன்' என்று சொன்னான்.

டெல்ஸாவ் வந்ததைப் பார்த்த ஜக்கார் கதவைப் பாதுகாத்துக் கொண்டே 'மன்னிக்கவும். அவர் எழுந்து என் மேலங்கியிலிருந்த கதவின் சாவியை எடுத்துக்கொண்டார். புட்டியிலிருந்த சாராயம் அவ்வளவையும் பருகி

விட்டார். இது முறையா? இப்பொழுது அவர் வெளியே போக வேண்டுமாம். நீங்கள் இவரை வெளியே விடக் கூடாது என்று சொல்லி யிருக்கிறீர்கள். நான் இவரை விட்டுவிட முடியுமா? என்ருன்.

டெல்ஸாவ் வந்ததும் ஐக்கார் அம்மாதிரி சொன்னதும் ஆல்பர்ட் மேலும் ஆத்திரமடைந்தான். 'என்னை யாரும் அடைத்துவைக்க முடியாது. யாருக்கும் அதற்குத் துணிவு இருக்காது' என்று மேலும் உரத்த குரலில் சொன்ஞன்.

'ஐக்கார் விலகிக்கொள்' என்று ஐக்காரிடம் சொல்லி விட்டு ஆல்பர்ட்டைப் பார்த்து 'என்ருல் உங்களை அடைத்து வைக்கவும் முடியாது. அப்படிச்செய்யவும் நான் விரும்பவில்லை. ஆனுல் பொழுது விடியும் வரை இங்கே இருங்கள் என்றுமட்டும் கேட்டுக்கொள்கிறேன்' என்ருன் டெல்ஸாவ்.

'என்னை யாரும் அடைத்து வைத்திருக்க முடியாது. நான் போலீஸ் தலைமை அதிகாரியிடம் போகிறேன்' என்று டெல்ஸாவைப் பார்க்காமல் ஐக்காரிடம் உரத்த குரலில் சொன்ஞன் ஆல்பார்ட். திடீரென்று 'உதவிசெய்ய வாருங்கள்' என்று கத்திஞன்.

'எதற்காக இம்மாதிரி கத்துகிறீர்கள்? உங்களை யாரும் பிடித்து வைத்திருக்கவில்லை' என்று கூறி ஐக்கார் தெருக்கதவை நன்ருகத் திறந்துவிட்டான்.

ஆல்பர்ட் கூக்குரலிடுவதை நிறுத்திஞன். 'உன்ஞல் முடிந்ததா? என்னை இங்கே அடைத்து வைக்கப் பார்த் தாய்—முடிந்ததா?' என்று அவன் முணு முணுத்த வண் ணம் பூட்ஸை அணிந்து கொண்டான். யாரிடத்திலும் சொல்லிக்கொள்ளாமல் முணு முணுத்த வண்ணம் வெளியே சென்ருன். வெளிக் கதவுவரை அவனுக்கு வெளிச்சம் காட்ட ஐக்கார் விளக்கை எடுத்துப் போஞன். பிறகு திரும்பி வீட்டினுள் வந்தான்.

'நல்லது. கடவுள்தான் காப்பாற்றிஞர். என்ன நடக் கும் என்று யாருக்குத் தெரியும்? உள்ளே போய் வெள்ளி சாமான்களை எண்ணிப்பார்க்கிறேன்' என்று டெல்ஸா வைப் பாரத்துச் சொன்ஞன் ஐக்கார்.

டெல்ஸாவ் தலையசைத்தானே தவிர வாய்திறந்து பதில் சொல்லவில்லை. முந்திய இரண்டு நாட்கள் ஆல்பர்ட்

டுடன் கழித்ததை அவன் சிந்தித்துப் பார்த்தான். கடைசியாக அந்தத் துன்பம் நிறைந்த நாளையும் நினைவுபடுத்திக் கொண்டான். அவனுடைய தவறுதலாலேயே ஆல்பர்ட் அந்த நாட்களை அங்கு கழித்தான். அத்துடன் ஆல்பர்ட்டுடன் கழித்த இன்பமான நேரங்களும் அவன் நினைவுக்கு வந்தன. முதல்முறை சந்தித்ததுமே ஆல்பர்ட்டிடம் அவனுக்கு அனுதாபம் ஏற்பட்டது. ஆச்சரியமும் உண்டாயிற்று. ஆல்பர்ட்டிற்காக அவன் வருந்தினான்.' இப்பொழுது அவனுடைய நிலைமை என்ன ஆகும்? பணமோ, குளிருக்கான கம்பளி உடையோ, அவனிடம் இல்லை. இந்த நள்ளிரவில் தன்னந்தனியாக...என்று எண்ணினான். ஜக்காரை அழைத்து ஆல்பர்ட் பின்னால் போகச் சொல்லக் கருதினான். ஆனால் அதற்கும் காலம் கடந்துவிட்டது என்பதை உணர்ந்தான்.

'வெளியில் பனி அதிகமாக யிருக்கிறதா?' என்று ஜக்காரிடம் கேட்டான் டெல்ஸாவ்.

'ஆமாம். மூடுபனி பெய்கிறது. நான் உங்களுக்குச் சொல்ல மறந்துவிட்டேன். ஆனால் நாம் வஸந்த காலத்திற்கு முன்னதாகவே அதிகமாக விறகு வாங்கிவிட வேண்டும்' என்றான் ஜக்கார்.

'அது எப்படி? நம்மிடம் தான் சிறிது இருப்பதாகச் சொன்னாயே?' என்று கேட்டான் டெல்ஸாவ்.

மூடுபனி அதிகமாகப் பெய்து கொண்டிருந்தது. ஆனால் ஆல்பர்ட் அளவு மீறிச் சாராயம் பருகியிருந்ததால் அவனுக்குக் குளிர் தெரியவில்லை. தெருவை அடைந்ததும் அவன் மகிழ்ச்சியுடன் நாலா பக்கங்களிலும் பார்த்துக் கைகளைத் தேய்த்துக் கொண்டான். தெருவில் ஜனநடமாட்டமே இல்லை. வரிசையாக உள்ள வீதி விளக்குகள் மாத்திரம் அப்பொழுதும் எரிந்து கொண்டிருந்தன. வானம் ஒரு மாசு மறுவின்றிக் காணப்பட்டது. ஆனால் பனிப்படலம் தான் அதை மறைத்துக் கொண்டிருந்தது.

'ஹூம், இதோ!' என்று டெல்ஸாவ் வீட்டின் வெளிச்சம் தெரிந்த ஜன்னலைப் பார்த்துச் சொன்னான். கைகளை நிஜார் பையில் செருகிக் கொண்டான். அவன் மெள்ள நடந்தான். கால்கள் தள்ளாடின. வழக்கத்திற்கு மாறாக அவனது கால்களும் வயிறும் கனப்பதாகக் கருதினான். ஏதோ அவன் சிந்தனையைக் கிளறிற்று. கண்ணுக்குப் புலப்படாத சக்தி ஒன்று அவனை இப்படியும் அப்படியும் தள்ளிற்று. அப்படியும் அவன் அன்னு ஐவிநோவாவின் இல்லத்தை நோக்கிச் சென்றான்.

நூதனமான தொடர்பற்ற எண்ணங்கள் அவன் சிந்தனையில் தோன்றின. ஐக்காருடன் சச்சரவு செய்தது நினைவுக்கு வந்தது. பிறகு கடல், ரஷ்யாவுக்கு அவன் படகில் வந்தது, முதல் நாள் ஒரு நண்பனுடன் சந்தோஷமாக ஒரு சிறிய கடையைக் கடந்து சென்றது. திடீரென்று ஒரு பழக்கமான குரல் பாடுவது கேட்டது. அவற்றுடன் அவன் நடன சாலையில் பயங்கரமான இரவுகளைக் கழித்ததும் நினைவுக்கு வந்தது. தொடர் பற்ற இந்த சம்பவங்கள் அவனது சிந்தனையில் தெளிவாகத் தோன்றின. அவன் கண்களை மூடிக்கொண்டதும் எது உண்மை, எது நினைவு அலைகள் என்பதே அவனுக்குப் புலப்படவில்லை. என்ன நினைக்கிறோம், என்ன செய்கிறோம் என்பதும் அவனுக்குத் தெரியவில்லை. அவன் கால்கள் எப்படிப் போகின்றன என்பதும் அவனுக்குத் தென்படவில்லை. அவன் தள்ளாடித் தள்ளாடிக் கம்பத்திலும் சுவரிலும் மோதிக் கொண்டு நடந்தான். அவன் கண்முன் பல பழைய சம்பவங்கள் ஒன்றின்பின் ஒன்றாகத் தோன்றிக் கொண்டிருந்தன.

மூர்ஸ்சியா தெருவைக் கடந்து செல்லும் போது ஆல்பர்ட் எதன்மீதோ தடுக்கிக் கீழே விழுந்தான். அவனுக்கு உணர்வு வந்து கண் திறந்து பார்த்த சமயம் எதிரே பெரிய மாடி வீடுகள் காணப்பட்டன. அவன் எழுந்து நடந்தான்.

வானத்தில் ஒரு நக்ஷத்திரம் கூடக்காணப்படவில்லை. சந்திரனும் இல்லை. சூரியனும் இல்லை. வானமும் தெளிவாகத் தெரியவில்லை. அந்தத் தெருவில் விளக்குகளும் இல்லை. எல்லாமே நிழல் படம் போல ஆல்பர்ட்டிற்குக் காணப்பட்டன. தெரு முனையிலிருந்த வீட்டின் ஜன்னல்களிலிருந்து வெளிச்சம் வெளியில் பாய்ந்து வந்தது. அந்த

வீடு ஆல்பர்ட்டிற்கு வெகு அருகாமையிலும் தெளிவாகவும் அவன் எதிரே தென்பட்டது. ஆனால் வெளிச்சம் மறைந்தது. அவன் வீட்டின் முன் பக்கத்திற்குச் சென்றான்.

அங்கு ஒரே இருட்டாக யிருந்தது. பலருடைய காலடிச் சப்தம் கேட்டது. ஆல்பர்ட் வீட்டின் முன் பாகத்தை அடைந்த சமயம் பல நிழல் உருவங்கள் அங்கிருந்து மறைந்தன.

'நான் ஏன் இங்கே வந்தேன்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான் ஆல்பர்ட். ஏதோ ஒரு மறைமுகமான சக்தி அவனை வீட்டின் முன் ஹாலுக்கு இழுத்துச் சென்றது. அங்கு ஒரு விதமான மேடையிருந்தது. மேடையைச் சுற்றிப் பலர் மௌனமான உட்கார்ந் திருந்தார்கள்.

'யார் பேசப் போகிறார்கள்?' என்று ஆல்பர்ட் கேட்டான்.

அங்கிருந்தவர்களில் ஒருவரும் பதில் சொல்லவில்லை. மேடையை மாத்திரம் சுட்டிக் காட்டினார்கள். ஒல்லியாக உயரமான உருவம் ஒன்று மேடையில் காணப்பட்டது. அதைக் கண்டதுமே தன் நண்பன் பெட்ராவ் என்பதை ஆல்பர்ட் தெரிந்து கொண்டான். 'இவன் எப்படி இங்கே யிருக்கிறான்?' என்று எண்ணினான்.

'இல்லை, சகோதரர்களே' என்று யாரையோ சுட்டிக் காட்டி பெட்ராவ் பேசத் தொடங்கினான். நம்மிடையே ஒரு மனிதன் வாழ்ந்து வருவதை நீங்கள் தெரிந்துகொள்ள வில்லை. உங்களால் அவனைத் தெரிந்துகொள்ளவும் முடியாது. அவன் வெறும் வயிற்று வித்வான் இல்லை. யந்திரம் போல ஒரே பாட்டை இசைத்துக்கொண் டிருப்பவனு மல்ல. பித்தனோ ஒன்றுக்கும் உதவாதவனோ அல்ல. அவன் பெரிய மேதை. நீங்கள் தெரிந்து, அவனைப் பாராட்டாத காரணத்தால் அவன்—அந்தப் பெரிய சங்கீத மேதை—நாசமாகிக் கொண்டிருக்கிறான்' என்றான்.

பெட்ராவ் யாரைச் சொல்கிறான் என்பதை ஆல்பர்ட் உணர்ந்தான். ஆனால் உடனே மேடை மீதேறி அவனை மார்புடன் தழுவிக்கொள்ள முயற்சிக்கவில்லை. அவன் தலை குனிந்துகொண்டு நின்றான்.

'நாம் அனைவரும் அவனுக்குப் புனிதமான நெருப்பைப் போல் சேவை செய்ய வேண்டியவர்கள். ஆனால் நம்முடைய

நெருப்பிற்கு அவனைச் சுள்ளிபோல் பயன்படுத்திக்கொண்டோம். அவனே கடவுள் அவனுக்கு இட்ட கட்டளைகள் அனைத்தையும் நிறைவேற்றிவிட்டான். அதனால் அவனை சிறந்த மனிதன் என்றே அழைக்கவேண்டும். அவனை நீங்கள் அவமானப்படுத்தலாம். சித்திரவதைக்குள்ளாக்கலாம், வெறுக்கலாம். ஆனால் அவன் எதற்கும் அசையாது உங்கள் அனைவரிலும் உயர்ந்தவனாகவே யிருப்பான். அவனை நேசிப்பதும் வெறுப்பதும் அவனுக்கு ஒன்றுதான். எல்லாவற்றையும்விட அவனுக்கு ஆண்டவன் அளித்ததைக்கொண்டு நமக்குப் பயன்படுகிறான். அவன் ஒன்றையே நேசிக்கிறான். உலகத்திலேயே விவாதத்திற்கிடமில்லாத அழகை நேசிக்கிறான். ஆமாம், அவன் அப்படிப்பட்டவன்தான். அவனை மண்டியிட்டு 'வணங்குங்கள். எல்லோரும் மண்டியிட்டு வணங்குங்கள்' என்று மேடையில் பேசியவன் உரத்த குரலில் சொன்னான்.

அதே சமயம் கூட்டத்தின் ஒரு மூலையிலிருந்து ஒரு குரல் கேட்டது. 'அவனுக்கு நான் மண்டியிட்டு வணங்க விரும்பவில்லை'

அந்தக் குரல் டெல்ஸாவினுடையது என்பதை ஆல்பர்ட் தெரிந்துகொண்டான்.

'அவனிடத்தில் சிறந்த குணங்கள் எங்கே யிருக்கின்றன்து? எதற்காக நாங்கள் அவனுக்குத் தலை வணங்க வேண்டும்? அவன் பெருந்தன்மையாகவும், நேர்மையுடனும் நடந்துகொண்டானா? அவனால் சமூகத்திற்கு ஏதாவது பயனுண்டா? அவன் எப்படிப் பணம் கடன் வாங்கினான். அதைத் திருப்பிக் கொடுக்கவில்லை என்பதும் எங்களுக்குத் தெரியும். தன் சகாவின் பிடிலைத் திருடிச் சென்று அடமானம் வைத்ததும் எங்களுக்குத் தெரியாதா?' என்றது அக்குரல்.

'கடவுளே இவனுக்கு எல்லாம் எப்படித் தெரிந்தது?' என்று முணுமுணுத்த வண்ணம் ஆல்பர்ட் மேலும் தலை குனிந்துகொண்டான்.

'தகுதியற்றவர்களை அவன் பணத்திற்காக எவ்வளவு புகழ்ந்தான்? அவனை நடனசாலையிலிருந்து வெளியேற்றியது எங்களுக்குத் தெரியாதா? அன்னா ஐவிஞேவா அவனைப் போலீஸில் பிடித்துக் கொடுக்க முயற்சித்ததும் தான் தெரியாதா?' என்றது மீண்டும் அக்குரல்.

'கடவுளே, அதெல்லாம் உண்மைதான். ஆனால் என்னைக் காப்பாற்றுங்கள். நான் அவ்விதமெல்லாம் செய்தேன் என்பது உங்கள் ஒருவருக்குத்தான் தெரியும்'' என்று முணுமுணுத்தான் ஆல்பர்ட்.

'வெட்கம்; வெட்கம், அவனைப் பிடியுங்கள். அந்த மேதையின்மீது குற்றம் சொல்ல இவனுக்கு என்ன உரிமை யிருக்கிறது? இவன் அவனுடைய நிலையிலிருந்து வாழ்ந்திருக்கிறானா? அல்லது அவனுடைய ஆனந்தத்தைத் தான் இவன் அனுபவித்திருக்கிறானா?' என்று மேடையிலிருந்து பேசியவன் கேட்டான்.

'உண்மைதான்!' என்று முணுமுணுத்தான் ஆல்பர்ட்.

மேடையிலிருந்து பேசியவன் மீண்டும் 'மனிதனுடைய உயர்ந்த சக்தியைக் காட்டுவது அவனுடைய கலைதான். ஒரு சிலரால்தான் அவனைத் தேர்ந்தெடுக்க முடியும். தேர்ந்தெடுத்தவனை உயர்ந்த நிலையில் வைக்கவும் அவர்களால்தான் இயலும். அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டவன் சுய உணர்வுடன் இருப்பது மிகவும் கடினம். மற்ற போராட்டங்களைப் போல கலையிலும் ஒரு கதாநாயகன் ஏற்படுகிறான். அவன் அந்த உயர்ந்த நிலையை அடைவதற்காகத் தன்னையே தியாகம் செய்து கொள்கிறான். அந்த நிலையை அடைய முடியாமலே அவன் நாசமாகிறான்'' என்றான் மேடையிலிருந்தவன்.

ஆல்பர்ட் தலைநிமிர்ந்து உரத்த குரலில் 'உண்மைதான் உண்மைதான்' என்று கத்தினான். ஆனால் அவன் குரல் மேலே எழாமல் அப்படியே அடங்கிவிட்டது.

மேடையிலிருந்தவன் ஆல்பர்ட் பக்கம் திரும்பி 'இது உனக்குச் சம்பந்த மில்லாதது' என்று ஆத்திரமாகக் கூறினான். பிறகு 'ஆமாம். அவனை அவமானப்படுத்துங்கள். வெறுத்துத் தள்ளுங்கள். ஆனால் அப்படியும் அவன் உங்களில் சிறந்தவன். சந்தோஷமாக வாழ்க்கை நடத்தியவன்' என்றான்.

ஆல்பர்ட் மகிழ்ச்சியுடனேயே இந்தச் சொல்லைக் கேட்டான். அதற்குமேல் அவனால் மௌனமாகயிருக்க முடியவில்லை. மேடையின்மீது பாய்ந்து ஏறிப் பேசிக்கொண்டிருந்தவன் கையைப்பற்றி முத்தமிட முயற்சித்தான்.

'போய்விடு. இங்கிருந்து போய்விடு. உன்னை யார் என்று எனக்குத் தெரியாது. உன் வழியே போ. இல்லா

விட்டால் அங்கு போக முடியாது' என்றான் மேடையிலிருந்தவன்.

'சாராய போதை உன்னை என்ன பாடுபடுத்துகிறது பார். உன்னால் அங்கே போக முடியாது' என்று கூட்டுத் தெருவின் முனையிலிருந்த போலீஸ்காரன் சொன்னான்.

ஆல்பர்ட் நின்றான். தன்னுடைய பலம் முழுவதையும் உபயோகித்து தள்ளாடாமலிருக்க முயற்சித்த வண்ணம் பக்கத்துத் தெருவில திரும்பிச் சென்றான்.

அங்கிருந்து சிறிது தூரத்தில்தான் அங்கு ஜஸினோவாவின் வீடு இருந்தது. அவள் வீட்டு முன் ஹாலில் எரிந்து கொண்டிருந்த விளக்குகளின் வெளிச்சம் வெளியில் பனி படிந்த தரைமீது பாய்ந்து பிரகாசமாக யிருந்தது. வீட்டின் முன் பக்கம் வண்டிகள் நின்றிருந்தன. மெல்லிய கைகளால் வீட்டின் இரும்புக் கம்பிகளைப் பிடித்துக் கொண்டே படிகளில் ஏறினான் ஆல்பர்ட். கதவை அடைந்ததும் மணியை அசைத்தான்.

கதவு திறக்கப்பட்டதும் தூங்கி வழிந்துகொண்டிருந்த வேலைக்காரியின் முகம் தென்பட்டது. அவள் ஆல்பர்ட்டைக் கோபமாகப் பார்த்து 'நீங்கள் உள்ளே வர முடியாது. உங்களை உள்ளேவிட வேண்டாம் என்று எஜமானியம்மாள் கண்டிப்பாகச் சொல்லியிருக்கிறார்!' என்று கூறி அவள் வேகமாகக் கதவைச் சாத்தினாள்.

வாத்திய கோஷ்டியின் இன்னிசையும், பெண்களின் குரலும் கேட்டது. ஆல்பர்ட் வெளியிலேயே உட்கார்ந்தான். தலையைச் சுவற்றில் சாய்த்துக் கண்களை மூடிக் கொண்டான். உடனே அவனுடைய மனக்கண் முன் கடந்தகால நிகழ்ச்சிகள் பல தொடர்பற்றுக் காட்சி யளித்தன. அவை அவனுடைய உள்ளத்தைத் தூண்டுவனவாகவும், புது வேகத்துடனும் காணப்பட்டன. மேலும் அவனைச் சுதந்திரமான, அழகு பொருந்திய கனவுலகத்திற்கு அழைத்துச் சென்றன. 'ஆமாம், அவன் சிறந்தவன். சந்தோஷமாக யிருப்பவன்' என்று மேடைப் பிரசங்கி கூறியது அவனது கற்பனையினூடே நினைவுக்கு வந்தது.கதவிற்கு அடுத்த பக்கத்திலிருந்து நடனப்பாட்டுக் கேட்டது. அந்தப் பாட்டும் அவனைச் சந்தோஷமானவன் சிறந்தவன் என்று கூறுவது போலிருந்தது. விடியற்காலை பிரார்த்தனைக்காக அருகிலிருந்த மாதா கோயிலில்

மணியடித்தார்கள். அதுவும் அவனைச் சிறந்தவன், சந்தோஷமானவன் என்று கூறிற்று.

'நான் மீண்டும் ஹாலுக்குப் போகிறேன். பெட்ராவ் இன்னும் ஏதாவது சொல்வான்' என்று ஆல்பர்ட் எண்ணினான்.

ஆனால் அப்பொழுது ஹாலில் ஒருவர்கூட யில்லை. பெட்ராவ் நின்ற மேடையில் ஆல்பர்ட் நின்று பிடில் வாசித்துக் கொண்டிருந்தான். பெட்ராவ் அவனைப் பற்றிச் சொன்னதையே அவன் பிடிலில் இசைத்தான்.

பிடிலோ கண்ணாடியால் செய்யப்பட்டிருந்தது. அதை இரண்டு கைளாலும் பற்றி மெள்ள மார்பில் வைத்துக் கொண்டு வாசித்தான். அதிலிருந்து எழுந்த நாதம் போல் ஆல்பர்ட் அதுவரை கேட்டதே யில்லை. மிக இனிமையாகவும், நேர்த்தியாகவும் இருந்தது. பிடிலை அவன் மார்பில் அணைத்துக் கொண்ட சமயம் அதிலிருந்து மேலும் இனிமையாகவும், நேர்த்தியாகவும் நாதம் எழுந்தது. பிடிலின் நாதம் அதிகரித்த சமயம் நிழல் உருவங்கள் மறைந்தன. சுவர்களிலும், ஹாலிலும் கண்ணாடி விளக்குகள் ஏற்றப் பட்டன. ஆனால் பிடில் உடைந்து போய் விடாதபடி மெள்ளவும் ஜாக்ரதையாகவும் வாசிக்க வேண்டியது அவசியமாக யிருந்தது.

கண்ணாடி பிடிலை ஆல்பர்ட் வெகு நேர்த்தியாக வாசித்தான். அப்பொழுது அவன் வாசித்தது போல் அதற்கு முன் யாரும் கேட்டே யிருக்க மாட்டார்கள். அவன் சோர்வடையும் சமயம் அருகாமையில் ஒரு சப்தம் கேட்டது. அது மணியின் நாதம். ஆனால் அது 'ஆம்' என்று சொல்லிற்று. அது அசைந்தாடிய வண்ணம் 'அவனைக் காண கேவலமாகத் தோன்றலாம், நீங்கள் அவனை வெறுக்கலாம். அப்படியும் அவன் உங்களைவிடச் சிறந்தவன். சந்தோஷமாக யிருப்பவன்' என்று கூறிற்று.

இந்தப் பழக்கப்பட்ட சொற்கள் அப்போது விவேகமுள்ளதாகவும், புதிதாகவும், உண்மையாகவும் ஆல்பர்ட்டிற்குத் தோன்றிற்று. அவன் பிடில் வாசிப்பதை நிறுத்தினான். அசைவற்றிருக்க முயற்சித்துக் கொண்டே கைகளை மேலே தூக்கி, வானத்தை நோக்கினான். அவன் சிறப்பாகவும், சந்தோஷமாகவும் இருப்பதாகக் கருதினான்.

ில் ஒருவரும் இல்லாதிருந்தும் மார்பை மேலே

தூக்கிக்கொண்டு கர்வத்துடன் தலை நிமிர்ந்து தன்னைப் பார்க்கட்டும் என்று மேடையில் நின்றான்.

திடீரென்று யாரோ ஒருவன் அவனைத் தொட்டான். அவன் திரும்பிப் பார்த்த சமயம் மங்கலான ஒளியில் அவனைத் தொட்டது ஒரு மங்கை என்பதை உணர்ந்தான். அவள் ஆல்பர்ட்டைக் கவலையுடன் பார்த்தான். அவன் செய்வதை வேண்டாம் என்று தடுப்பது போலத் தலை யசைத்தாள்.

உடனே ஆல்பர்ட் தான் செய்வது தவறுஎன்று உணர்ந்தான். அவன் தன் செயலுக்கு வெட்கமடைந்தான். 'எங்கே?' என்று அவனைத் தொட்டவளைக் கேட்டான்.

அவள் மீண்டும் ஆல்பர்ட்டை உற்றுப் பார்த்தாள். வருத்தத்துடன் தலையசைத்தாள். அவள் ஆல்பர்ட் காதலித்தவளே தான். வேறு யாருமில்லை. அவளுடைய உடையும் அதே விதமாகத்தான் இருந்தது. வெண்மையான கழுத்தில் விலையுயர்ந்த கற்கள் பதித்த பதக்கம் அணிந்து கொண்டிருந்தாள். அவள் ஆல்பர்ட்டின் கையைப்பற்றி ஹாலிலிருந்து வெளியே அழைத்து வந்தாள். 'வெளியே போக வழி அந்தப்பக்கம் இருக்கிறது' என்றான் ஆல்பர்ட்.

ஆனால் அவள் பதில் சொல்லாமல் புன்முறுவல் செய்து அவனை அழைத்துக்கொண்டு நடந்தாள். ஹாலின் வாயிற்புறத்தில் சந்திரனையும் தண்ணீரையும் ஆல்பர்ட் கண்டான். வழக்கம் போல் தண்ணீர் கீழ் பாகத்திலோ, சந்திரன் வட்டமாகவோ வானத்திலோ இல்லை. சந்திரனும் தண்ணீரும் ஒன்றாகவும் எல்லாயிடங்களிலும் காணப் பட்டன. வானம், பூமி, சுற்றுப்புறம்—எல்லாயிடத்திலும் இருந்தது. ஆல்பர்ட் தன்னைப் பிடித்துக்கொண்டிருப்பவளுடன் தண்ணீரிலும் சந்திரனிலும் குதித்தான். உலகத்தில் வேறு யாரையும்விட தான் நேசித்தவளை இப்பொழுது கட்டித் தழுவிக் கொள்ளலாம் என்று ஆல்பர்ட் எண்ணினான். அவளைக் கட்டித் தழுவிய சமயம் அவனுடைய உள்ளம் பொங்கிப் பூரித்தது.

'இது கனவல்லவே' "என்று ஆல்பர்ட் தன்னையே கேட்டுக் கொண்டான். ஆனால் இல்லை. அது உண்மைக்கும் மேலாக இருந்தது. உண்மையாகவும் பழைய சம்பவங்களுடனும் சேர்ந்திருந்தது. அதன் பிறகு அவன் தான் அனுபவித்த இன்பமும், சந்தோஷமும் மீண்டும் கிடைக்

காது'' என்று கருதினன். 'நான் எதற்காகக் கண்ணீர் வடிக்கிறேன்' என்று அவளைக் கேட்டான் ஆல்பர்ட்.

அவனை மௌனமாகவும் கவலையுடனும் அவள் பார்த்தாள். அவள் பார்வையின் அர்த்தத்தை ஆல்பர்ட் உணர்ந்தான்.

'நான் உயிரோ டிருக்கும்போது இது எப்படி?' என்றன் ஆல்பர்ட்.

அவள் ஆடாமல் அசையாமல் பதில் கூறுமல் அவனையே பார்த்தாள்.

'இதுதான் மிக மோசமானது. நான் உயிரோடிருக்கிறேன் என்பதை அவளுக்கு எப்படிச் சொல்வது? கடவுளே நான் உயிரோடிருக்கிறேன். இதை எனக்கு உணர்த்து' என்றன் ஆல்பர்ட்.

'அவன் சிறந்தவன், சந்தோஷமானவன் என்று ஒரு குரல் சொல்லிற்று. ஆனல் ஏதோ ஒன்று ஆல்பர்ட்டை மேலும் மேலும் அழுத்திற்று. அது தண்ணீரா, சந்திரனு, அவளை அணைத்துக்கொண் டிருப்பதா, அவன் கண்ணீர் பெருக்குவதா—என்பது அவனுக்குத் தெரியாது. ஆனல் விரைவிலேயே எல்லாம் முடியப்போகும் சமயத்தில் அவனல் அவசியமானவற்றைச் சொல்ல இயலவில்லை.

அன்ன ஐஸிஞேவாவின் வீட்டிலிருந்து இரண்டு விருந்தாளிகள் வெளியே வந்தனர். அவர்கள் வெளியே படுத்திருந்த ஆல்பர்ட்டின் மீது தடுக்கிக் கொண்டனர். இருவர்களில் ஒருவன் மீண்டும் வீட்டினுள் சென்று அன்ன ஐஸிஞேவாவை அழைத்துக் கொண்டு வந்தான்.

'இது மனிதத் தன்மை யற்றது. ஒருவன் பனியில் விறைத்துப் போகும் வண்ணம் விட்டிருக்கக் கூடாது' என்றன் விருந்தாளி.

'ஐயோ, இவன் ஆல்பர்ட் அல்லவா? அவனல் எனக்குப் போதும் போதுமென்ருகி விட்டது' என்று விருந்தாளிகளிடம் கூறி வேலைக்காரியை நோக்கி 'அனுஷ்கா, இவனை எடுத்துச் சென்று ஏதாவது ஒரு அறையில் படுக்கவை' என்ருள் அன்ன ஐஸிஞேவா.

ஆல்பர்ட்டை அறைக்கு எடுத்துச் செல்லும்போது அவன் சுய உணர்வற்ற நிலையில் 'நான் உயிரோடிருக்கிறேனே, என்னை ஏன் புதைக்கிறீர்கள்' என்று கேட்டான்.

(1858)

# 2. மூன்று ஜீவன்கள்

இலை உதிர்காலம். சாலையில் இரண்டு வண்டிகள் வேகமாகப் போய்க்கொண்டிருந்தன. முன் வண்டியில் இரண்டு பெண்மணிகள் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் ஒருத்தி நோயாளி; அவள் மெலிந்து, முகம் வெளுத்திருந் தாள். மற்றவள் வேலைக்காரி. அவள் பருமனாகவும், ரோஜாமலர் போன்ற நிறத்துடனு மிருந்தாள். வேலைக் காரியின் குட்டையான கூந்தல் தொப்பியில் மறைந் திருந்தது. அவளது சிவந்த கைகளில் கிழிந்த உறை அணிந்திருந்தாள். அதை அவள் அடிக்கடி இழுத்து விட்டுக் கொண்டிருந்தாள். அவளது பருவத்தினால் மலர்ந்த உடல் கம்பளியினால் மறைந்திருந்தது. அவ ளுடைய கறுத்த விழிகள் ஒரு சமயம் ஜன்னல் வழியாக நிலங்களையும், மறு சமயம் எஜமானியையும் பார்த்தன. வண்டி வேகமாகப் போனதால் அவள் மூலையில் ஆடி அசைந்து கொண்டிருந்தாள். அவளுடைய மூக்கிற்கு நேராக எஜமானியம்மாளின் தொப்பி ஆடிக்கொண் டிருந்தது. சாமான்கள் வேலைக்காரியை நசுக்கின. அவ ளுடைய மடியில் ஒரு நாய்க்குட்டி படுத்திருந்தது. கால்கள் பெட்டிகளின் மேலே இருந்தன. சாமான்களும், கால் களும் வண்டியின் கதவில் உராய்ந்து கொண்டிருந்தன.

எஜமானியம்மாள் சாய்ந்து உட்கார்ந்திருந்தாள். அவ ளுடைய கைகள் மார்பின் மீதிருந்தன. கண்கள் மூடிக் கொண் டிருந்தன. அடிக்கடி மெள்ள இருமினாள். அவள் தலையில் வெள்ளை இரவுத் தொப்பி யிருந்தது. மெலிந்த வெண்மையான கழுத்தில் நீலநிறக் கைகுட்டை கட்டி யிருந்தது. தொப்பிக்கடியில் சிவந்த அடர்த்தியான வாசனைத் தைலம் தடவிய கூந்தல் நீண்டு தொங்கிற்று. அவளுடைய வெளுத்த உடலில் மரணத்தின் சாயல் காணப்பட்டது. முகம் வாட்டத்துடனும் அழுக்குடனும் யிருந்தது. ஆனால் முகத்திலும் உடலிலும் வீக்கம் தென் பட்டது. உதடுகள் உலர்ந்தும் துடித்துக் கொண்டு மிருந்தன. பிரயாணக் கோட்டு அவள் மார்புமீது

கிடந்தது. அவளுடைய கண்கள் மூடியிருந்தாலும். முகத்தில் சோர்வும்,ஆத்திரமும்,நோயால் அவதிப்படுவதும் தெரிந்தது.

வேலைக்காரன் ஒருவன் வண்டியின் முன்பக்கம் ஓரமாக உட்கார்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். தபால் வண்டிக்காரன் அடிக்கடி உரக்கக் கத்தி நான்கு பெரிய குதிரைகளையும் விரட்டினான். சில சமயங்களில் திரும்பிப் பின் வண்டிக்காரனிடம் பேசினான். மணல் நிறைந்த வீதியில் வண்டிச் சக்கரங்கள் தங்கள் அடையாளத்தைப் பதித்துக்கொண்டு சென்றன. வானம் சாம்பல் நிறமாக யிருந்தது. பயிர் நிலங்களிலும், சாலையிலும் பனி படிந்திருந்தது. வண்டி நிறைய சாமான்களிருந்தன. அத்துடன் செண்டின் வாசனையும் தூசியும் தும்பும் நிறைந்திருந்தது. நோயாளியான எஜமானி சாய்ந்தவண்ணமே கண்களைத் திறந்தாள். அவளுடைய கறுத்த விழிகள் நேர்த்தியாகவும் ஒளி பொருந்தியதாகவும் இருந்தன.

'மீண்டும்' என்று சொல்லி எஜமானியம்மாள் தன் மெல்லிய அழகான கையால் வேலைக்காரியின் அங்கியின் முனையைத் தள்ளினாள். அது அவளுடைய காலில் தீண்டியதால் அவளுக்கு வேதனையாக யிருந்தது. வேலைக்காரி மதுரஷா தன் மேலங்கியை இரு கைகளாலும் வாரிக்கொண்டு வண்டியில் மேலும் நகர்ந்து உட்கார்ந்தாள். பருவத்தின் எழிலுடனிருந்த அவள் முகம் மேலும் ரத்தச் சிவப்பாக மாறிற்று.

எஜமானியம்மாள் இரு கைகளையும் ஊன்றி எழுந்து நன்றாக உட்கார முயற்சித்தாள். ஆனால் அவளால் முடியவில்லை. அவளுடைய வாய் கோணிற்று, முகம் விகாரமாக மாறிற்று. பார்வையும் நிலை குத்தி நின்றது "நீ எனக்கு உதவி செய்யலாம்...வேண்டாம். கவலைப்படாதே. நானே எழுந்து உட்கார்ந்து கொள்கிறேன். எனக்குப் பின்னால் பெட்டியையோ சாமான்களையோ வைக்காதே... வேண்டாம். உனக்கு ஒன்றும் தெரியாமலிருக்கும் போது என்னைத் தொடாதே' என்றாள். அவள் கண்களை மூடிக் கொண்டாள். பிறகு திடீரென்று புருவத்தை உயர்த்தி, கண்களைத் திறந்து மதுரஷாவைப் பார்த்தாள்.

மதுரஷா அவளைப் பார்த்துத் தன் சிவந்த உதட்டைக் கடித்துக்கொண்டாள்.

எஜமானியம்மாள் ஒரு பெருமூச்சு விட்டாள். அது முடிவதற்குள் இருமல் வந்துவிட்டது. அவள் வேறு பக்கம் திரும்பி முகத்தை மறைத்துக் கொண்டாள். இரு கைகளாலும் மார்பை அழுத்தினாள். இருமல் நின்றதும் மீண்டும் அவள் கண்களை மூடிக்கொண்டாள். முன்போலவே அசைவற்றிருந்தாள்.

வண்டி கிராமத்தில் நுழைந்தது. மதுரஷா தனது பலம் பொருந்திய கையைக்கம்பளியிலிருந்து எடுத்துச் சிலுவைச் சின்னம் செய்து கொண்டாள்.

'என்ன இது?' என்று கேட்டாள் எஜமானியம்மாள்.

'வண்டி நிற்குமிடம் அம்மா' என்றாள் மதுரஷா.

'நீ ஏன் சிலுவைச் சின்னம் செய்து கொண்டாய் என்றுதான் கேட்கிறேன்?'

'இங்கே ஒரு மாதா கோயில் இருக்கிறது அம்மா.'

எஜமானியம்மாள் மெள்ள ஜன்னல் பக்கம் திரும்பித் தன்மீது சிலுவைச் சின்னம் செய்துகொண்டாள். கண்களை அகல விரித்துக் கிராமத்து மாதா கோயிலைப் பார்த்தாள்.

வண்டி நிலையத்தில் வண்டி நின்றது நோயுடனிருக்கும் எஜமானியம்மாளின் கணவனும் வைத்தியரும் பின் வண்டியிலிருந்து இறங்கி முன்னிலிருந்த வண்டிக்கு வந்தார்கள். எஜமானியம்மாளின் நாடியைப் பரிசோதித்த வண்ணம் 'எப்படி யிருக்கிறது?' என்று வைத்தியர் கேட்டார்.

'பிரயாணத்தினால் களைத்துப்போய் விடவில்லையே. வெளியே வர விரும்புகிறாயா?' என்று நோயாளி எஜமானியம்மாளின் கணவன் கேட்டான்.

மதுரஷா அவர்கள் பேச்சில் குறுக்கிடாமலிருக்கும் பொருட்டு இன்னும் ஓரமாக நகர்ந்து கொண்டாள்.

'எல்லாம் அப்படியே தான் இருக்கிறது. என்னால் வெளியே வரமுடியாது' என்றாள் எஜமானியம்மாள்.

சிறிது நேரம் மனைவியின் அருகில் நின்றிருந்த பிறகு கணவன் பிரயாணிகள் தங்கும் விடுதிக்குச் சென்றான். மதுரஷாவும் வண்டியிலிருந்து குதித்து மணலில் முன்னங்காலால் நடந்து பிரயாண விடுதியின் வாசல் பக்கம் சென்றாள்.

'என் உடம்பு மோசமாக யிருப்பதாகத் தோன்றினாலும் அதற்காக நீங்கள் சாப்பிடாமலிருந்து விடாதீர்கள்'

என்று அருகில் நின்றிருந்த டாக்டரிடம் புன்முறுவல் செய்து சொன்னாள் எஜமானியம்மாள்.

'அப்படிப்பட்ட எண்ணமே எனக்கு ஏற்படவில்லை' என்று சொல்லிவிட்டு வைத்தியர் அங்கிருந்து பிரயாணிகள் தங்கும் விடுதிக்கு வேகமாகச் சென்றார்.

'அவர்கள் அனைவரும் ஆரோக்கியத்துடன் இருக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு யாரைப் பற்றியும் அக்கறையில்லை. கடவுளே' என்றாள் எஜமானியம்மாள்.

வைத்தியரைக் கண்டதும் நோயாளி எஜமானியம்மாளின் கணவன் புன்முறுவல் செய்தான். கைகளைத் தேய்த்துக்கொண்டு 'என்ன எட்வர்ட் ஐவானேவிச், சாப்பாட்டுக் கூடையை எடுத்துவரச்சொல்லி யிருக்கிறேன். அதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' என்று கேட்டான்.

'நல்ல யோசனை தான்!' என்றார் வைத்தியர்.

'அவள் உடம்பு எப்படி யிருக்கிறது?' என்று கணவன் பெருமூச்சு விட்டுக் கேட்டான். அவனுடைய புருவங்கள் மேலே சென்றன.

'அவளால் இத்தாலி தேசம் போய்ச்சேர முடியாது என்று முன்பே சொல்லி யிருக்கிறேன். இப்படிப்பட்ட காற்றிலும் பனியிலும் அவள் மாஸ்கோவரை யாவது போக கடவுள் தான் கருணைகாட்ட வேண்டும்.'

'நாம் என்ன செய்வது? கடவுளே, கடவுளே!' என்று கணவன் கைகளால் முகத்தை மூடிக்கொண்டான். பிறகு சாப்பாட்டுக் கூடையை எடுத்து வந்தவனிடம் 'இங்கே கொண்டு வா' என்றான்.

'அவள் வீட்டிலேயே தங்கியிருக்க வேண்டும்' என்றார் வைத்தியர் தோள்களைக் குலுக்கிக் கொண்டே.

'நான் என்ன செய்வது? அவளை வீட்டிலேயே தங்கச் செய்ய நான் செய்த முயற்சிகள் உங்களுக்கு நன்றாகத் தெரியும். பணச் செலவைப் பற்றிச் சொன்னேன். குழந்தைகளை விட்டு வருவதையும் கூறினேன். என் வியாபார விஷயத்தையும் சொன்னேன். அவள் கேட்டால்தானே? அவள் ஆரோக்கியமாக யிருப்பதுபோல வாழ்க்கை முழுவதும் வெளிநாடுகளில் பிரயாணம்செய்யத் திட்டம் போடுகிறாள். அவளுடைய நிலையை எடுத்துச் சொல்லவும் பயமாயிருக்கிறது. அதுவே அவளைக் கொன்றுவிடலாம்.'

'ஆனால் அவளை கொன்றுகி விட்டது. இதை நன்றாக் கவனத்தில் வைத்துக் கொள்ளுங்கள், வாஸிலி டிமிட்ரி. சுவாசப் பையில்லாமல் ஒருவன் உயிருடன் இருக்கமுடியாது. புதிய சுவாசப்பை வளராது. இது மிகவும் வருத்தப் படக்கூடியது. ஆனால் என்ன செய்வது? அவளுடைய முடிவு அமைதியாகவும் நல்லவிதமாவும் ஏற்படும்படி பார்த்துக்கொள்வதுதான் நம்மிருவருடைய வேலை அதற்குப் பாதிரியார் ஒருவர் தேவை.'

'ஐயோ கடவுளே, என்னுடைய நிலைமையைச் சற்று சிந்தித்துப் பாருங்கள். அவளுடைய விருப்பத்தையும் அவளிடம் சொல்லுங்கள். அதனால் என்ன ஆகும் என்று அவளிடம் என்னால் சொல்ல முடியாது. அவள் எவ்வளவு நல்லவள் தெரியுமா?'

'வழி பிரயாணத்திற்கு லாயக்கானதாக மாறும் வரை அவளைப் பொறுத்திருக்கும்படி சொல்லிப் பாருங்கள். இல்லாவிட்டால் பிரயாணத்தின்போது ஏதாவது கெடுதலான சம்பவம் ஏற்படலாம்' என்று கூறி வைத்தியர் தலையை அசைத்தார்.

'அக்யுஷா, அக்யுஷா' என்று விடுதியின் எஜமானனுடைய மகள் தலையில் துணியைப்போட்டு மூடிக்கொண்டு வெளியில் பூட்ஸ் காலால் தரையில் தட்டினாள். 'வா, நோயுடனிருக்கும் சீமாட்டியைப் பார்க்கலாம். அவளை சுவாசப்பைக் கோளாறுக்காக வெளி நாடுகளுக்கு அழைத்துப்போவதாகக் கூறுகிறார்கள். இப்படிப்பட்ட வியாதிக்காரர்கள் எப்படி யிருப்பார்கள் என்று நான் பார்த்ததே கிடையாது'.

இரு பெண்களும் வெளிப் பக்கம் குதித்துச் சென்றார்கள். இருவரும் கை கோத்துக்கொண்டு வண்டியின் திறந்த கதவின் அருகில் சென்று நின்று உள்ளே பார்த்தார்கள். நோயாளி எஜமானியம்மாள் அவர்கள் பக்கம் திரும்பிப் பார்த்தாள். ஆனால் அவர்களுடைய எண்ணத்தை அறிந்ததும் அவள் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

இரு பெண்களும் திரும்பி நடந்துகொண் டிருக்கும் போது விடுதி எஜமானனின் மகள் 'அக்யுஷா, அவள் எவ்வளவு அழகாக யிருந்திருக்க வேண்டும்? இப்பொழுது

எப்படி யிருக்கிருள் பார்த்தாயா? பார்க்கவே பயமாக யிருக்கிறது. அப்படித்தானே?' என்று கேட்டாள்.

'ஆமாம். எவ்வளவு மெலிந்திருக்கிருள். மீண்டும் ஒரு முறை அப்படிப் போவதுபோல் சென்று அவளைப் பார்க்கலாமா? அவள் முகத்தை திருப்பிக் கொண்டுவிட்டாள். நான் நன்ருகப் பார்க்கவில்லை...ஒரே மண்ணுக யிருக்கிறது' என்ருள் அக்யுஷா.

'ஆமாம். ஒரே மண் தான்!' என்று சொன்ஞள் மாஷா. இரு பெண்களும் விடுதியின் வாசலுக்கு ஓடிஞர்கள்.

'பார்த்தவர் பயப்படும்படியாக நான் இருக்கவேண்டும்! எவ்வளவு விரைவில் நான் வெளி நாடுகளுக்குச் செல்கிறேஞே அவ்வளவும் நல்லது. நாஞும் விரைவாகக் குணமாகி விடுவேன்.

அச்சமயம் எதையோ மென்று கொண்டு வாஸிலி டிமிட்ரி அங்கே வந்தான். 'உடம்பு எப்படி யிருக்கிறது?' என்று மனைவியிடம் கேட்டான்.

''எப்பொழுதும் இதே கேள்விதாஞ? அவர் மாத்திரம் சாப்பிடுகிருர்'' என்று எண்ணிஞள் எஜமானியம்மாள். பிறகு பற்களைக் கடித்துக்கொண்டே 'அப்படியேதான்!' என்ருள்.

'இந்தக் காற்றிலும் பனியிலும் பிரயாணம் செய்தால் உன் உடம்பு மோசமாகி விடலாம். அப்படித்தான் எட்வர்ட் இவாஞேவிச் சொல்கிருர். நாம் வீட்டிற்குத் திரும்பி விடுவது நல்லதல்லவா? நீ என்ன நினைக்கிருய்?' என்று கேட்டான், வாஸிலி டிமிட்ரி.

அவள் கோபத்துடன் மௌனமாக இருந்தாள்.

'சில நாட்கள் பொறுத்திருந்தால் காற்றும் பனியும் குறையலாம். வழியும் பிரயாணத்திற்கு லாயக்கானதாக மாறலாம். அதற்குள் உன் உடம்பு சற்று குணமாகிவிடும். நாம் அனைவரும் சேர்ந்து பிரயாணம் செய்யலாம்!'

'மன்னிக்கவும். இத்தனை நாட்கள் வரை நீங்கள் சொன்னதைக் கேட்கவில்லை? பெர்லினை நாம் அடைந்து விட்டால் நான் குணமாகி விடுவேன்' என்ருள் எஜமானியம்மாள்.

'நாம் என்ன செய்வது? நீ சொல்வது முடியாத காரியம் என்று உனக்கே தெரியும். ஆஞல் ஒரு மாதம் வீட்டில் தங்கிஞல் பூரணமாகக் குணமாகி விடுவாய்.

அதற்குள் நானும் என் வியாபாரத்தை முடித்துக்கொண்டு திரும்பி விடுகிறேன். பிறகு உன்னையும் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு போகிறேன்.'

'குழந்தைகள் ஆரோக்யமாக யிருக்கின்றன. என் உடம்பு தான் சரியாக இல்லை.'

'இந்தக் காற்றிலும் பனியிலும் பிரயாணம் செய்தால் வழியிலேயே உன் உடம்பு கெட்டுவிடும்....நீ வீட்டிலிருந்தால்...'

'வீட்டிலிருந்தால் என்ன? வீட்டில் உயிர் விடவா?' என்று ஆத்திரமாகக் கூறினாள். 'உயிர் விடவா' என்று அவள் சொல்லும் போது அந்த வார்த்தையே அவனுக்குப் பயத்தை உண்டு பண்ணிற்று. 'என்ன செய்வது?' என்று கேள்வி கேட்பது போலக் கணவனை முறைத்துப் பார்த்தாள். திடீரென்று அவளுடைய வாய் குழந்தைகளுடையதைப் போல திறந்து கொண்டது. கன்னங்களில் கண்ணீர் வழிந்தோடிற்று. வாஸிலி டிமிட்ரி தன் முகத்தைக் கைக்குட்டையால் மறைத்துக் கொண்டு மௌனமாக அங்கிருந்து சென்றான்.

'இல்லை, நான் மேலும் பிரயாணம் செய்வேன்' என்று சொல்லி அவள் கைகளைக் கட்டிக்கொண்டு வானத்தைப் பார்த்தாள். பிறகு 'கடவுளே இதெல்லாம் எதற்கு?' என்றாள். அவளுடைய கண்களிலிருந்து நீர் ஆறாகப் பெருகிற்று. அவள் வெகு நேரம் பிரார்த்தனை செய்தாள். ஆனால் அவள் மார்பில் முன்போலவே வலி ஏற்பட்டது. ஏதோ மார்பை அழுத்துவது போலவும் தோன்றிற்று. வானமும், பூமியும், எங்கும் மங்கலாக இருந்தது. பனி குறையவில்லை. தெரு, வீட்டின் கூரை, வண்டி, வண்டிக்காரனுடைய தோல்கோட்—எல்லாம் பனி படிந்திருந்தது.

## 2

**வ**ண்டி தயாராகிவிட்டது. ஆனால் வண்டிக்காரன் தான் இன்னமும் சுற்றி அலைந்து கொண்டிருந்தான். அவன் வண்டிக்காரர்கள் தங்கும் இடத்திற்குச் சென்றான். அங்கு புழுக்கமாகவும், மூச்சுத்திணறும் படியும், இருட்டாகவும், ரொட்டி, சூப் முதலியவை தயாரிப்பதன்

வாசனையுடனும் இருந்தது, பல வண்டிக்காரர்கள் அங்கு உட்கார்ந்திருந்தார்கள். சமையல்காரன் ரொட்டி தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தான். அடுப்பிற்கு அருகாமையில் நோயாளி ஒருவன் படுத்திருந்தான்.

'தியாடார் மாமா, தியாடார் மாமா' என்று நோயாளியைக் கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வந்தான் வாலிப வண்டிக்காரன். அவன் கோட்டை உதறி, இடுப்புப் பட்டையை இழுத்துக் கொண்டான்.

'தியாடாரிடம் உனக்கு என்ன வேண்டும்? உனக்காக வண்டிக் காத்துக் கொண்டிருக்கிறது' என்றான் ஒரு வண்டிக்காரன்.

'என் பூட்ஸ் கிழிந்து போய்விட்டது. அவருடையயதைக் கேட்க வந்தேன். அவர் தூங்குகிறாரா?' என்று கேட்டுக் கொண்டே அந்த வாலிபன் நோயாளி படுத்திருக்குமிடத்திற்குச் சென்றான்.

'என்ன அது?' என்று மெல்லிய குரலில் கேட்டுக் கொண்டே நோயாளி எழுந்தான். அவனுடைய முகத்தில் எலும்புகள் தெரிந்தன. சிவந்த தாடியும் காணப்பட்டது. அவன் உடல் மெலிந்தும், வெளுத்துமிருந்தது. அழுக்குப் படிந்த கோட்டையும் சொக்காயையும் அணிந்து கொண்டிருந்தான்.

'எனக்குக் குடிக்க ஏதாவது கொடுங்கள். உனக்கு என்ன வேண்டும்?' என்று நோயாளி வாலிபனைக் கேட்டான்.

வாலிபன் அவனுக்கு ஒரு கோப்பை தண்ணீர் எடுத்துக் கொடுத்தான். 'இதோ பாருங்கள் மாமா. புது பூட்ஸ் உங்களுக்கு இனித் தேவைப்படாது என்று நினைக்கிறேன். அதை எனக்குக் கொடுக்க மாட்டீர்களா? நீங்கள் எங்கும் வெளியே போக மாட்டீர்கள் என்றும் நம்புகிறேன்'.

நோயாளி மீசையைத் தள்ளிக்கொண்டு ஆவலுடன் தண்ணீரைப் பருகினான். அவனுடைய தாடி தூசி படிந்திருந்தது. குழி விழுந்த கண்களால் அவன் வாலிபனைப் பார்த்தான். தண்ணீரைப் பருகிய பிறகு மீசையையும் வாயையும் துடைக்கக் கையைத் தூக்கினான். ஆனால் அவனால் அது முடியவில்லை. கோட்டின் முனையில் மீசையையும், வாயையும் துடைத்துக் கொண்டான். மௌனமாக அவன்

மூக்கினுல் பலமாக மூச்சு விட்டான். தன் பலம் முழுவதையும் உபயோகித்து வாலிபனையே பார்த்துக் கொண்டிருந்தான்.

'ஒரு வேளை நீங்கள் பூட்ஸை வேறு யாருக்காவது கொடுப்பதாகக் கூறியிருக்கிறீர்களோ என்னவோ! அப்படி யானுல் வேண்டாம். பனியில் நான் கிழிந்த பூட்ஸை அணிந்தே என் வேலையைச் செய்யப் போகவேண்டியிருக் கும். "மாமாவிடம் நான் பூட்ஸைக் கேட்பேன். அவருக்கு அது தேவைப்படாது" என்று எண்ணினேன். ஆனுல் உங்களுக்குத் தேவையாக யிருக்கிறதா? அப்படியானுல் சொல்லுங்கள்?' என்று கேட்டான் வாலிபன்.

நோயாளியின் தொண்டையிலிருந்து ஏதோ சப்தம் வெளிப்பட்டது. உடனே அவனுக்கு இருமல் வந்து விட்டது. அதனுல் அவன் பெரிதும் கஷ்டப்பட்டான்.

'தேவைதான்!' என்று எதிர்பாராத வகையில் அறை முழுதும் கேட்கும்படி சமையற்காரி சொன்னுள். 'அடுப் படியிலிருந்து எழுந்து அவன் ஒரு மாதமாகிறது. எப்படி இருமுகிருன் பார். அதைப் பார்த்தலே மனம் வேதனைப் படுகிறது. அவனுக்கு பூட்ஸால் என்ன ஆகவேண்டும்? அவனைப் புதிய பூட்ஸுடன் புதைக்க மாட்டார்கள். அதை உபயோகிக்க வேண்டிய காலம் மலையேறிவிட்டது. நான் இம்மாதிரி சொல்வதற்குக் கடவுள் என்னை மன்னிப் பாராக! எப்படி இருமுகிருன், பார். அவனை வேறு இடத்திற்காவது, அடுத்த அறைக்காவது அழைத்துப் போய்விட வேண்டும். நகரத்தில் வைத்தியசாலை இருப்ப தாகக் கூறுகிருர்கள். இந்தச் சமயத்தில் அவனை அதிக தூரம் அழைத்துச் செல்வது நன்ருக யிருக்குமா? நான் சொல்ல ஒன்றுமில்லை. இதைத் தவிர வேறு அறையில்லை. இதைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும் என்று எல்லோ ரும் எண்ணுகிருர்கள்' என்ருள் சமையற்காரி.

'சர்ஜி வா, உனக்காகக் காத்துக்கொண் டிருக்கிருர்கள்' என்று வண்டிக்காரர்களின் தலைவன் கூறினுன்.

வாலிப வண்டிக்காரன் சர்ஜி வெளியே போக எத்தனித் தான். ஆனுல் நோயாளி இருமிக்கொண் டிருந்தான். அவ னுடைய இருமல் சிறிது குறைந்ததும் ஏதாவது பதில் சொல்வான் என்று காத்துக்கொண் டிருந்தான்.

'சர்ஜி, என் பூட்ஸுகளை எடுத்துக்கொள்' என்று இருமுவதைக் கஷ்டத்துடன் நிறுத்திக்கொண்டே சொன்ஞன் தியாடார். 'ஆனுல் ஒன்று. நான் இறந்துவிட்டால் என் கல்லறைமீது வைக்க ஒரு கல்லை வாங்கு' என்ருன்.

'நல்லது மாமா. நான் பூட்ஸை எடுத்துக்கொள்கிறேன் கல்லறை மீது வைக்க ஒரு கல்லை வாங்கி விடுகிறேன்' என்ருன் சர்ஜி.

'அவன் சொன்னதைக் கேட்டீர்களா?' என்று அங்கிருப்பவர்களிடம் சொன்ஞன் தியாடார். உடனே இருமல் தொடர்ந்து வந்தது. அதனுல் அவன் மூச்சுத் திணறிக் கொண்டு குனிந்தான்.

'கேட்டுக் கொண்டுதான் இருந்தோம் போ சர்ஜி உனக்காக ஆள் வந்துகொண் டிருக்கிருன். உன் வண்டியில் நோயாளியான ஒரு சீமாட்டி இருக்கிருள். அது நினைவிருக்கிறதா?' என்று வண்டிக்காரர்கள் சொன்ஞர்கள்.

சிறிதும் தாமதம் செய்யாமல் சர்ஜி, தனது கிழிந்த பெரிய பூட்ஸுகளைக் கழட்டி பெஞ்சியின் கீழ் போட்டான். பிறகு தியாடாரின் புதிய பூட்ஸை எடுத்து அணிந்து கொண்டான். அது அவனுக்குச் சரியாக இருந்தது. பிறகு அவன் பூட்ஸைப் பார்த்துக் கொண்டே தன் வண்டியை நோக்கி நடந்தான்.

'எவ்வளவு நேர்த்தியான பூட்ஸ். அதை நான் துடைக்கட்டுமா?' என்று ஒரு வண்டிக்காரன் சர்ஜியிடம் சொன்ஞன். அவன் வண்டிச் சக்கரங்களுக்கு எண்ணெய் போட்டுக் கொண்டிருந்தான். சர்ஜி மௌனமாக வண்டியில் ஏறி உட்கார்ந்தான்.

'அவர் உனக்கு பூட்ஸை இனுமாகக் கொடுத்தாரா?' என்று கேட்டான் வண்டிக்காரன்.

'உனக்கு ஏன் பொருமையாக இருக்கிறது?' என்று கூறி கம்பளியில் கால்களை மூடிக்கொண்டான் சர்ஜி. அவன் மேலும் 'விலகிப் போ' என்று சொல்லிச் சேணத்தைக் கையாலெடுத்து இழுத்து, குதிரைகளை சாட்டையாலடித்து விரட்டிஞன். பனி நிறைந்த சாலையில் வண்டி போகத் தொடங்கிற்று.

நோயாளியான வண்டிக்காரன் தியாடார் அடுப்பங்கரையிலேயே விடப்பட்டான். அவனை அங்கிருந்து வேறு

இடத்திற்கு அழைத்துச் செல்ல முடியவில்லை. அவன் இருமிக்கொண்டே யிருந்தான். அவனுடைய இருமல் நின்றபோது அறையில் மௌனம் குடிகொண்டது.

அன்றிரவு வெகுநேரம் வரை பலர் அந்த அறைக்கு வந்து சாப்பிட்டுவிட்டுச் சென்றார்கள். நோயாளியான தியாடார் சிறிதும் சப்தம் செய்யவில்லை. இரவு வெகு நேரமானதும் சமையற்காரி நாட்ஸயா தனது ஆட்டுத் தோல் போர்வையை எடுக்க அடுப்பின் மேல்பாகத்திற்கு ஏறினாள். அதை எடுத்துக்கொண்டு கீழே குதித்தாள்.

அப்போது தியாடார் 'நாட்ஸயா, என்மீது கோபப் படாதே. வெகு விரைவிலேயே உன் இடத்தைக் காலி செய்துவிடுவேன்' என்றான்.

'நல்லது, நல்லது. அதைப் பற்றிக் கவலைப்படா தீர்கள். ஆனால் உங்களுக்கு என்ன செய்கிறது சொல் லுங்கள்.' என்றாள் நாட்ஸயா.

'என் உடம்பிலிருப்பது அத்தனையும் எங்கோ போய் விட்டதாகத் தோன்றுகிறது. அது என்ன என்று கடவு ளுக்குத் தான் தெரியும்'

'இருமும் போது உங்கள் தொண்டை வலிக் கிறதா?'

'என் உடல் பூராவும் வலிக்கிறது. என்னுடைய கடைசி நேரம் வந்து கொண்டிருக்கிறது. அதனால்தான் அப்படி யிருக்கிறது. ஐயோ ஹூம்' என்றான் தியாடார்.

'உங்கள் கால்களை நன்றாகப் போர்த்திக் கொள் ளுங்கள்' என்று கூறி நீண்ட மேலங்கியை இழுத்து விட்டாள் நாட்ஸயா.

விடி விளக்கு அறையில் மங்கலாக எரிந்து கொண் டிருந்தது. நாட்ஸயாவும், சுமார் பத்து வண்டிக்காரர் களும் தரையில் குறட்டை விட்ட வண்ணம் தூங்கிக் கொண்டிருந்தார்கள். நோயாளியான தியாடார் இரவு முழுதும் இருமிக்கொண்டே யிருந்தான். பொழுது விடியும் சமயம் வேறு பக்கம் திரும்பிப் படுத்தான். பிறகு அவன் அசைவற்றுக் கிடந்தான்.

மறு நாள் காலை கண் விழித்ததும் நாட்ஸயா 'இரவு நான் ஒரு விசித்திரமான கனவு கண்டேன். தியாடார் அடுப்படியிலிருந்து எழுந்து மரம் வெட்டக் கிளம்பினார் "வா நாட்ஸயா?" என்று என்னையும் கூப்பிட்டார். "நான்

ஏதாவது உதவி செய்யட்டுமா?'' என்று நான் கேட்டேன். ஆனால் அவர் அதற்குள் கையில் கோடாலியை எடுத்து மரத்தை வெட்டத் தொடங்கினார். வெட்டப் பட்ட பகுதியிலிருந்து மரத்துண்டுகள் நாலா பக்கங்களிலும் சிதறின. "நீங்கள் நோயுடன் படுத்திருக்க வில்லையா?'' என்று அவரிடம் கேட்டேன். அவர் பதில் சொல்லாமல் கோடாலியை வேகமாக வீசினார். எனக்குப் பயமாகப் போய் விட்டது. நான் அழுதுகொண்டே கண் விழித்தேன். அவர் உயிருடன் இருக்கிறாரா இல்லையா என்பதே எனக்குச் சந்தேகமாகி விட்டது. 'தியாடார் மாமா'' என்று நோயாளியைக் கூப்பிட்டாள்

தியாடார் மௌனமாக அசைவற்றுப் படுத்திருந்தான்.

'ஒரு வேளை அவர் இறந்திருக்கலாம். நான் போய்ப் பார்க்கிறேன்' என்றான் நாட்ஸயா சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு வண்டிக்காரன்.

மெலிந்த கைகளும். சிவந்த முடியும் உடைய தியாடார் அசைவற்றுப் படுத்திருந்தான். அவன் முகம் வெளுத்துப் போயிருந்தது. உடல் சில்லிட்டிருந்தது.

அதைப் பார்த்த வண்டிக்காரன் 'நான் போய் வண்டி நிலைய அதிகாரியிடம் சொல்கிறேன். அவர் இறந்து விட்டார் என்றே தோன்றுகிறது' என்றான்.

தியாடாருக்கு உறவினர்களே இல்லை. அவன் வெகு தூரத்திலுள்ள ஒரு ஊரிலிருந்து அங்கு பிழைப்பிற்காக வந்திருந்தான். மறுநாள் அவனை காடுகளுக்கு அப்பாலுள்ள புதிய கல்லறையில் புதைத்தார்கள்.

நாட்ஸயா பல இடங்களுக்கும் சென்று தான் கண்ட கனவைக் கூறிக்கொண்டிருந்தாள். தியாடார் இறந்ததை முதலில் பார்த்ததும் அவள் தான் என்று சொல்லிக் கொண்டாள்.

**வ**சந்த காலம் வந்தது. பனி படிந்திருந்த வீதிகளில் ஆறு போல் நீர் ஓடிற்று. ஜனங்கள் வீதிகளில் நடக்கும் போது அவர்களுடைய ஆடைகள் பல நிறங்களில் காணப் பட்டன. குரல்கள் உச்ச நிலையிலும் இருந்தது. மதிள்

சுவருக்குப் பின்னுலிருந்த மரங்களின் கிளைகள் மலர்களின் வாசத்துடன் காற்றையும் மெள்ள வீசிற்று. இலைகளி லிருந்து பனித்துளிகள் சொட்டுச் சொட்டாகக் கீழே விழுந்தன. குருவிகள் கத்திக்கொண்டு இறக்கைகளை விரித்து பறந்தன. சூரியனின் ஒளிபட்டு வீடுகள், தெருக் கள், மரங்கள்—எல்லாம் மின்னின. எங்கும் சந்தோஷம் நிரம்பியிருந்தது. மனிதர்கள் உள்ளங்களில் வாலிபத்தின் துடிப்பு நிறைந்திருந்தது.

ஒரு முக்கிய தெருவில் பெரிய வீட்டின் முன் வைக் கோல் சிதறிக் கிடந்தது. அந்த வீட்டினுள் தான் வெளி தேசம் செல்லவேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்த நோயாளியான எஜமானியம்மாள் படுத்திருந்தாள்.

கதவுகள் மூடப்பட்ட அறையில் நோயாளியின் கண வனை வாஸ்லி டிமிட்ரியும் ஒரு வயதான மாதும் நின்றிருந் தனர். ஒரு சோபாவில் பாதிரியார் உட்கார்ந்திருந்தார். அவர் கையில் எதையோ வைத்து, மேலங்கியால் மூடிக் கொண் டிருந்தார். அறையின் ஒரு மூலையில் நோயாளியின் தாயார் நாற்காலியில் உட்கார்ந்து அழுதுகொண் டிருந்தாள். அவள் அருகில் கையில் சுத்தமான கைக்குட்டையுடன் ஒரு வேலைக்காரி நின்றிருந்தாள். மற்ருெரு வேலைக்காரி நோயா ளியின் தாயாரின் தலையில் எதையோ வைத்துத் தேய்த்து ஊதிக்கொண் டிருந்தாள்.

வாஸ்லிடிமிட்ரி தன் அருகில் நின்றிருந்த சகோதரி யிடம், "கர்த்தர் உங்களுக்குக் கருணை புரிவாராக! உங்க ளிடத்தில் அவளுக்குப் பூரணமான நம்பிக்கை யிருக்கிறது. அவளிடம் எப்படிப் பேசி, விஷயத்தைச் சொல்ல முடியு மோ" அப்படியே சொல்லுங்கள் என்று கூறி மூடியிருந்த கதவைத் திறக்கப் போனுன்.

அப்போது அவனுடைய சகோதரி அவனைத் தடுத் தாள். பலமுறை கைகுட்டையால் கண்களைத் துடைத்துக் கொண்டு தலை யசைத்தாள். 'நல்லது நான் அழுதுகொண் டிருந்ததாக இப்பொழுது தெரியாது என்று நம்புகிறேன்' என்று சொல்லிக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனுள்.

வாஸ்லி டிமிட்ரி பெரிதும் கவலையுடனிருந்தான். அவன் திட்டங்களெல்லாம் சிதறிவிட்டன போலவும் காணப் பட்டது. நோயாளியின் தாயார் அருகில் சென்ருன். ஆனுல்

சிறிது தூரத்திலேயே திரும்பி பாதிரியாரை நோக்கி நடந்தான். அவர் வாஸ்லி டிமிட்ரியைப் பார்த்தார். புருவத்தை மேலே தூக்கி ஒரு பெருமூச்சு விட்டார். பிறகு பார்வையைத் தாழ்த்திக்கொண்டார்.

'கடவுளே கடவுளே!' என்று கத்தினன் வாஸ்லி டிமிட்ரி.

'என்ன செய்வது?' என்று கேட்டு மீண்டும் பாதிரியார் புருவத்தை மேலே தூக்கிப் பெருமூச்சு விட்டார்.

'அவளுடைய தாயார் இங்கே இருக்கிருள். அவளால் மகளின் பிரிவைத் தாள முடியாது. அவள் தன் மகளை மிகவும் நேசித்து வந்தாள். அவளைச் சமாதானப்படுத்தி இங்கிருந்து போய்விடச் சொல்லுங்கள்' என்ருன்.

பாதிரியார் எழுந்து நோயாளியின் வயதான தாயார் அருகில் சென்ருர். 'அது உண்மைதான். தாய்உள்ளம் அப்படித்தான் இருக்கும். ஆனுல் கடவுள் கருணை வடிவானவர்!' என்ருர் பாதிரியார்

வயதான மாதின் முகம் திடீரென்று மாறிற்று. அவளுக்கு விக்கல் ஏற்பட்டது.

'கடவுள் கருணை வடிவானவர். நான் வசிக்குமிடத்தில் ஒரு நோயாளி இருந்தாள். அவள் உங்கள் பெண்ணைவிட மிக மோசமான நிலையிலிருந்தாள். ஒரு சாதாரண வியாபாரி அவளைச் சில நாட்களுக்குள்ளாகவே குணப்படுத்தி விட்டான். அதுவும் சாதாரண பச்சிலை மூலிகைகளால். அந்த வியாபாரி இப்பொழுது மாஸ்கோவில் இருக்கிருன். நான் வாஸ்லி டிமிட்ரியிடம் இதைச் சொல்லி யிருக்கிறேன். அவனை அழைத்துப் பார்க்கலாம். அதனுல் உங்கள் மகளுக்குச் சிறிது நன்மை ஏற்படலாம். கடவுளும் கருணை செய்யலாம்.'

'இல்லை. என் மகள் அதிக நாட்கள் உயிருடன் இருக்கமாட்டாள். எனக்குப் பதிலாக அவளைக் கடவுள் அழைத்துச் செல்கிருர்' என்று விக்கிக் கொண்டே வயதான மாது சொல்லி மயக்க மடைந்தாள்.

வாஸ்லி டிமிட்ரி கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அந்த அறையிலிருந்து வெளியே ஓடினுன்.

வழியில் அவன் முதலில் ஆறு வயதுள்ள அவனது மகனைக் கண்டான். பையன் தன் சகோதரியைத் துரத்திக் கொண்டு ஓடினுன்.

வாஸ்லி டிமிட்ரி வேலைக்காரியிடம் 'குழந்தைகளை அவர்களது தாயார் இருக்குமிடத்திற்கு அழைத்துப் போகக்கூடாதா?' என்று கேட்டான்.

'வேண்டாம். அவற்றைப் பார்க்க அவர் விரும்ப வில்லை. குழந்தைகளைக் கண்டால் அவர் மனம் வேதனைப் படும்' என்றாள் வேலைக்காரி.

பையன் ஓடுவதை விட்டு நின்று தகப்பனார் முகத்தைப் பார்த்தான். பிறகு கூக்குரலிட்டுக் கொண்டே ஓடினான். ஓடிக்கொண்டிருக்கும் தன் சகோதரியைக் காட்டி 'அவள் கறுப்புக் குதிரையாம் அப்பா' என்றும் கத்தினான்.

அடுத்த அறையில் நோயாளியின் அருகில் வாஸ்லி டிமிட்ரியின் சகோதரி உட்கார்ந்திருந்தாள். நோயாளி அதிக நாட்கள் உயிருடன் இருக்கமாட்டாள் என்பதை அவளிடம் சாமர்த்தியமாகச் சொல்லிக்கொண் டிருந்தாள். வைத்தியர் ஜன்னலருகில் மருந்தைக் கலந்துகொண் டிருந்தார்.

நோயாளி வெள்ளை ஆடை அணிந்து கொண்டு தலை காணியின் உதவியுடன் உட்கார்ந்திருந்தாள். தன் அருகில் இருப்பவளையே பார்த்தாள்.

'அன்பே, என்னைக் குழந்தைபோல் பாவித்துவிடாதே; நான் உண்மை கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவள். எனக்கு எல்லாம் தெரியும். நான் அதிக நாட்கள் உயிருடன் இருக்கமாட்டேன் என்பதும் எனக்கு நன்றாகத் தெரியும். இத்தாலியிலிருந்தால் இதற்குள் என் கணவருக்கு நான் இறந்த செய்தி கிடைத்திருக்கலாம். ஒருவேளை நான் குணமாகியுமிருக்கலாம். எல்லோரும் இப்படித்தான் சொன்னார்கள். ஆனால் இப்பொழுது என்ன செய்வது? இதுதான் கடவுளின் விருப்பம் போலும்! நாம் அனைவரும் அநேக பாபங்களைச் செய்திருக்கிறோம். எனக்கு அது தெரியும். ஆனால் கருணைவடிவான கடவுள் அனைவரையும் மன்னிப்பார். என் பாபங்களையும் மன்னிப்பார் என்றே நம்புகிறேன். நானே இதை உணர முயற்சித்து வருகிறேன். நான் பல பாபச் செயல்களுக்குப் பதில் சொல்லியாக வேண்டும். ஆனால் நான் எவ்வளவுதான் வேதனைப்படுவது? என்னுடைய வேதனையைப் பொறுத்துக் கொள்ள நான் முயற்சித்து வருகிறேன்...' என்றாள் நோயாளி.

'அப்படியானல் பாதிரியாரைக் கூப்பிடட்டுமா? உன் மனதிலுள்ளதை அவரிடம் சொல்லிய பிறகு உனக்கு நிம்மதி ஏற்படலாம்.'

நோயாளி தலையை அசைத்துத் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள். 'பாபியான என்னைக் கடவுள் மன்னிப்பாராக' என்ருள்.

வாஸ்லி டிமிட்ரியிடம் வந்து அவன் சகோதரி 'உண்மையில் அவள் தேவதைதான்' என்ருள். அவள் கண்களில் நீர் ஆருகப் பெருகிற்று. வாஸ்லி டிமிட்ரி கோவென்று அழுதான்.

பாதிரியார் அறையினுள் சென்ருர். நோயாளியின் தாயார் அப்பொழுதும் மயக்கத்துடன் படுத்திருந்தாள். ஐந்து நிமிஷத்திற்குப் பிறகு பாதிரியார் அறையிலிருந்து வெளியே வந்தார். வேத புத்தகத்தை ஒரு கையில் வைத்துக்கொண்டு, தலை முடியைத் தள்ளி சரிசெய்துகொண்டார். 'கடவுள் அருளால் அவள் இப்பொழுது நிம்மதியாக இருக்கிருள். உங்களைப் பார்க்க விரும்புகிருள்' என்று வாஸ்லி டிமிட்ரியிடம் சொன்ஞர்.

வாஸ்லி டிமிட்ரியும், அவனது சகோதரியும் நோயாளியின் அறைக்குச் சென்ருர்கள். நோயாளி மௌனமாக அழுதுகொண்டிருந்தாள். அவளுடைய பார்வை கர்த்தரின் சிலைமீதே யிருந்தது.

* 'நல் வாழ்த்து' என்று வாஸ்லி டிமிட்ரி தன் மனைவியிடம் சொன்ஞன்.

'நன்றி. இப்பொழுது என் மனம் நிம்மதியாக யிருக்கிறது!' என்று சொல்லி நோயாளி புன்முறுவல் செய்தாள். 'கடவுள் எவ்வளவு கருணையுள்ளவராக யிருக்கிருர்! அவருடைய சக்தி மிகவும் அற்புதமானது' என்று சொல்லி அவள் மீண்டும் கர்த்தரின் சிலையையே பார்த்தாள். அவளுடைய கண்களிலிருந்து நீர் பெருகிற்று.

திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள் போல் அவள் தன் கணவனை அருகில் வரும்படி சைகை காட்டிஞள்.

---

* ரஷ்யாவில் மரணப்படுகையிலிருப்பவர்கள் பாதிரியாரிடம் தம் பாபங்களைச் சொல்லி ஆசி பெற்றதும் அவர்களை வாழ்த்துவது வழக்கம்.

'நான் கேட்டதை நீங்கள் செய்ய விரும்பவில்லை' என்று அவள் மெல்லிய குரலில் சொன்னாள். அவள் குரலில் அதிருப்தி காணப்பட்டது.

வாஸ்லி டிமிட்ரி தலை குனிந்து அவள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தான். 'என்ன கேட்டாய்?' என்று அவன் கேட்டான்.

'இந்த வைத்தியர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று நான் பலமுறை சொல்ல வில்லையா? சில சாதாரண பெண்கள் என்போன்ற நோயாளிகளைக் குணப்படுத்திவிடலாம். பாதிரியார் சொன்னார்......ஒரு வியாபாரி இருக்கிறானும். அவனை அழைத்துவர ஆட்களை அனுப்புங்கள் '

'யாருக்காக அவனை அழைப்பது?'

'கடவுளே. உங்களுக்கு எதுவுமே புரிவதில்லை' என்றாள் நோயாளி. அவள் முகம் மாறிற்று. கண்களையும் மூடிக்கொண்டாள்.

வைத்தியர் வந்து நோயாளியின் கையைப் பற்றி நாடியைப் பரிசோதித்தார். நாடித் துடிப்பு அடங்கிக்கொண்டிருந்தது வைத்தியர் வாஸ்லி டிமிட்ரியின் முகத்தைப் பார்த்தார் நோயாளி அதைக் கவனித்துவிட்டாள். நாலா பக்கமும் தன் பார்வையை செலுத்தினாள். வாஸ்லியின் சகோதரி முகத்தைத் திருப்பிகொண்டு அழத் தொடங்கினாள்.

'அழாதே உன்னையும் சித்திரவதை செய்துகொண்டு என் மனதையும் நோகச் செய்யாதே. என் கடைசி நேரத்தில் முகத்தைத் திருப்பிக்கொள்ளாதே' என்றாள் நோயாளி.

'நீ தேவதைதான்' என்று சொல்லி வாஸ்லியின் சகோதரி நோயாளியின் கையில் முத்தம் ஈந்தாள்.

'அங்கில்லை. என் நெற்றியில் முத்தமிடு. இறந்தவர்களைத்தான் கையில் முத்தமிடுவார்கள். கடவுளே. கடவுளே!' என்று கத்தினாள் நோயாளி.

அன்று மாலையே நோயுடன் போராடிய மாது பிணமானாள். அவளுடைய சடலம் வீட்டின் முன் ஹாலில் வைக்கப்பட்டிருந்தது. மாதா கோயிலிலிருந்து சிலர் வந்து தோத்திரப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தார்கள். வெள்ளி விளக்குத் தண்டில் மெழுகுவத்தி எரிந்து கொண்டிருந்தது. அதன் ஒளி இறந்தவளின் வெளுத்த முகத்தில்

படர்ந்திருந்தது. அவளுடைய கைகள் பெரிய மெழுகு வத்தி போலிருந்தன.

தோத்திரப் பாடல்களைப் பாடுபவர்கள் அதன் அர்த்தம் தெரியாமலே பாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய குரல்கள் சந்தடியின்றி யிருந்த அறையிலிருந்து வெளிப்பட்டு மறைந்தது. சிற்சில சமயம் அருகாமையிலிருக்கும் அறையிலிருந்து குழந்தைகளின் கூக்குரலும், கால்களை உதறும் சப்தமும் கேட்டது.

'முகத்தை மறைத்துக்கொள்பவர்கள் துன்பத்திற்குள்ளாவார்கள். யாருடைய ஆவியை எடுத்துக்கொள்கிறுரோ அவர்கள் இறந்து, மீண்டும் மண்ணுக்குச் சென்றுவிடுகிறுர்கள். அனுப்பும் ஆவியை அவர் உற்பத்தி செய்கிறுர். கடவுளின் பெருமை என்றும் நிலைத்து நிற்கும்' என்று தோத்திரப் பாடல் பாடுபவன் சொன்ஞன்.

இறந்தவளின் முகம் கம்பீரமாகவும், கண்டிப்பானதாகவும் காணப்பட்டது. அவளுடைய புருவமோ, உதடுகளோ சிறிதும் அசையவில்லை. அவள் ஒரு நிலையில் இருப்பதுபோல் தோன்றிஞள். ஆஞல் அப்பொழுதாவது அவள் அந்த புனிதமான சொற்களின் அர்த்தத்தை அறிவாளா?

## 4

ஒரு மாதத்திற்குப் பிறகு வாஸ்லி டிமிட்ரியின் மனைவியினுடைய கல்லறைமீது பெயர் பொறிக்கப்பட்ட கல் போட்டு மூடப்பட்டது. ஆஞல் இறந்த வண்டிக்காரன் தியாடார் கல்லறைமீது பெயர் பெறிக்கப்பட்ட கல் போட்டு மூடப்படவில்லை. கல்லறையின்மீது புல் முளைத்திருந்தது. அதுவே ஒருவன் உயிருடன் வாழ்ந்ததற்கான அறிகுறியாக இருந்தது.

ஒருநாள் பிரயாணிகள் தங்கும் விடுதிக்கு சர்ஜி வந்தான். அவனிடம் சமையற்காரி 'சர்ஜி, அது மிகவும் பாபம். தியாடார் மாமாவின் கல்லறையின் மீது போட்டு மூட ஒரு கல்லை இன்னும் வாங்கவில்லை. ஆஞல் இது பனிக்காலம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறுய். நீ ஏன் உன் வாக்கைக் கப்பாற்றக் கூடாது? நீ சொன்னதை நானும்தான் கேட்டுக் கொண்டிருந்தேன். அவர் ஒருமுறை

வந்து உன்னைக் கல்வாங்கி மூடும்படி சொல்லிவிட்டார். அப்படிச் செய்யாவிட்டால் மீண்டும் அவர் வந்து உன்னை மூச்சுத் திணறும்படி அழுத்திவிடுவார்' என்றாள்.

'நான் சொன்னதிலிருந்து பின்வாங்கவில்லை. நான் சொன்னபடி கல்லை வாங்கி மூடுவேன். அதற்காக ஒன்றரை ரூபிள் கொடுக்கவும் தயாராக இருக்கிறேன். அதை நான் மறக்கவும் இல்லை. நான் நகரத்திற்குப் போகும்போது அதை வாங்கி வருவேன்' என்றான் சர்ஜி.

'அவருடைய தலைப்பக்கம் ஒரு சிலுவையாவது நட்டிருக்க வேண்டும். அது செய்யாதது பெரிய தவறுதான். நீ அவருடைய பூட்ஸை அணிந்து கொண்டிருக்கிறாய்' என்றான் ஒரு வண்டிக்காரன்.

'எங்கிருந்து ஒரு சிலுவை கொண்டுவருவேன்? மரத்திலிருந்து அதை என்னால் செய்யமுடியாதே.'

'என்ன சொல்கிறாய்? ஒரு மரத்திலிருந்து வெட்ட முடியாதா? அதிகாலையில் கையில் கோடாலியை எடுத்துக் கொண்டு காட்டிற்குப் போ. ஒரு சிறு ஆஷ் மரத்தை வெட்டு. அதைக் கொண்டு ஒரு சிலுவை செய்யலாம். காட்டின் காவல்காரனுக்குச் சிறிது சாராயம் வாங்கிக் கொடு. மரத்தை வெட்ட அவன் தடை சொல்லமாட்டான். இம்மாதிரி விஷயங்களில் சிறிது பணம் செலவாவதைப் பார்க்கக்கூடாது. என் வண்டியின் நுகத்தடி உடைந்து விட்டது. அதற்காகக் காட்டிற்குப் போய் ஒரு மரத்தை வெட்டிக்கொண்டு வந்தேன். என்னை யாரும் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை.'

பொழுது விடியும் சமயம் கையில் கோடாலியுடன் சர்ஜி காட்டிற்குச் சென்றான்.

அப்பொழுது பனி பெய்துகொண்டிருந்தது. கிழக்கு வெளுத்துக்கொண்டு வந்தது. அதன் மங்கலான வொளி காடு முழுவதும் பரவியிருந்தது. காலடியிலிருக்கும் புல்லோ, மரங்களிலுள்ள இலைகளோ அசையவில்லை. சில சமயங்களிலேயே ஏதாவது ஒரு பறவை சிறகடிப்பதும், கூவுவதும் சப்தம் கேட்டது. மற்றபடி காடு முழுதும் மௌனம் குடிகொண்டிருந்தது.

திடீரென்று காட்டின் இயற்கைத் தன்மைக்குப் புறம்பான சப்தம் கேட்டது. உடனே அடங்கிற்று. மீண்டும் கேட்டது. பிறகு தொடர்ந்து ஒரு மரத்தின் அடி பாகத்

திலிருந்து சப்தம் எழுந்துகொண்டே யிருந்தது. அதனால் அம்மரத்தின் கிளைகளும் இலைகளும் அசைந்தன. மரத்தின் மீது உட்கார்ந்திருந்த குருவி ஒன்றிரண்டு முறை இடம் மாறி உட்கார்ந்தது. பிறகு அதிலிருந்து எழுந்து சென்று வேறு ஒரு மரத்தின்மீது உட்கார்ந்துகொண்டது.

மரத்தைக் கோடாலி வெட்டிக்கொண்டே இருந்தது. கோடாலி விழும் இடத்திலிருந்து மரத்தின் சிதள்கள் மேலெழுந்து பறந்தன. வெட்டும் சப்தம் காடு முழுதும் எதிரொலித்தது. திடீரென்று மரம் அடி பாகத்துடன் நடுங்கிற்று. மறுகணம் சாய்ந்து கீழே விழுந்தது. உடனே எங்கும் மௌனம் குடிகொண்டது. மரம் கிளைகள் முறிய பனி படிந்த தரைமீது அசைவற்றுக் கிடந்தது.

கோடாலியால் வெட்டப்படும் சப்தமும், காலடிச் சப்தமும் அடங்கிற்று. குருவி கத்திக்கொண்டே உயரப் பறந்தது. மரங்கள் கீழே விழுந்திருக்கும் மரத்தையும், புதிதாகத் தங்களுக்குக் கிடைத்த அருமையான இடத்தையும் கண்டு மகிழ்ச்சியடைந்தன.

சூரியனுடைய முதல் கிரணம் மேகத்திரையைக் கிழித்துக்கொண்டு தரையில் பாய்ந்தது. பனி மெல்ல மறையத் தொடங்கிற்று. சூரிய கிரணம்பட்டு பனித் துளிகள் மின்னின. வானம் விரைவாக வெளுத்துக் கொண்டே வந்தது. சிறிது நேரத்திலேயே வானத்தை மறைத்துக்கொண்டிருந்த மேகத்திரை அடியோடு விலகியது. பறவைகள் கூட்டமாக வான வீதியில் பறந்தன. சந்தோஷமாகக் கத்தின. உயிருடனிருந்த மரங்களின் இலைகளும், கிளைகளும் கீழே உயிரற்று விழுந்து கிடக்கும் மரத்தைக் கண்டு கிடைப்பதற்கு அருமையான இடம் கிடைத்ததற்காகச்சந்தோஷமாகக்காற்றில் அசைந்தாடின.

(1858)

# 3. மனித சுபாவம்

[இளவரசர் நிகோலாயின் குறிப்பிலிருந்து]

*8 ஜூலை 1857*

நேற்றிரவு லூஸிரனுக்கு வந்து சேர்ந்தேன். இந்த ஊரிலேயே சிறந்த ஓட்டலெனக் கருதப்படும் ஷிவஜரா வில் தங்க ஏற்பாடு செய்துகொண்டேன்.

லூஸிரன் ஒரு புராதனமான நகரம், காண்டனின் தலைநகரமாகவும் இருந்து வருகிறது. அது லூஸிரன் நதிக் கரையில் இருக்கிறது. சுவிஜர்லாந்திலேயே அது மிகவும் நேர்த்தியான நகரம் என்று முர்ரே கூறுகிறார். "லூஸிரன் நகரத்தில் முக்கியமான மூன்று சாலைகள் சந்திக்கின்றன. அந்த நகரத்திலிருந்து ஒரு மணி நேரப் படகுப் பிரயா ணத்தில் ரிகிமலைக்குப் போய்ச் சேரலாம். மலை மீதிருந்து உலகிலேயேமிகவும் உன்னதமான காட்சியைக்காணலாம்."

இது உண்மையோ பொய்யோ, பிரயாணிகளுக்கு வழி காட்டி போல் பயன் படக்கூடிய புத்தகங்கள் அவ்விதம் தான் கூறுகின்றன. எல்லா தேசங்களிலிருந் தும், முக்கியமாக ஆங்கில நாட்டிலிருந்து ஜனங்கள் அந்த ஊருக்கு வந்த வண்ண மிருக்கின்றனர்.

பழைய கூரை போட்ட வளைவு வாராவதி யிருந்த இடத்திலேயே ஐந்து அடுக்கு மாடி வரிசையில் வஜஷி ராவ் ஓட்டலும் சமீபத்தில்தான் கட்டியிருந்தார்கள். ஏராளமாக வரும் ஆங்கிலேயர்களின் செல்வாக்கினாலும், அவர்களுடைய தேவை, மனப் போக்கு, பணம் ஆகிய வற்றைக் கொண்டே பழைய வாராவதியைத் தகர்த் தெறிந்தார்கள். அந்த இடத்தில் வரிசையாகவும் நேர்த்தி யாகவும் ஐந்து அடுக்கு மாடி வீடுகளாகக் கட்டினார்கள். வீடுகளின் முன்னால் இரண்டு வரிசை சின்ன மரங்கள் நட்டிருந்தார்கள். அதன் மத்தியில் உட்காருவதற்காகப் பல பெஞ்சிகள் போட்டார்கள். இது உலாவுவதற்கும், குதிரை சவாரி செய்வதற்கும் பிரத்யேகமாகப் பயன்

பட்டது. இங்கு ஆங்கில நாட்டு மாதர்கள் சுவிஜர்லாந்து தேச ஓலைத் தொப்பிகளை அணிந்து கொள்வார்கள். ஆண்களோ பருத்தும், நல்ல உடை அணிந்தும் தங்கள் மனதிற்கு மகிழ்ச்சியை அளிக்கும் வேலையில் ஈடுபடச் செல்வார்கள். வரிசையான வீடுகளும், சிறு மரங்களும், உலாவவும், குதிரை சவாரி செய்யவும் பிரத்யேகமாக இடம் இருப்பதும் ஆங்கிலேயர்களுக்கு வேறு இடங்களில் நன்றாக யிருக்கலாம். ஆனால் மிகவும் நூதனமான, பெருந்தன்மையும், விவரிக்க முடியாத இன்பமும், இணக்கமான குணங்களும் வாய்ந்த இந்த நகரம் அவர்களுடைய போக்கிற்கு ஒவ்வாதது.

நான் என் அறைக்குச் சென்று நதிக்கரைப் பக்கமுள்ள ஜன்னலைத் திறந்தேன் எதிரே இருந்த நதியின் தண்ணீரும், மலைகளும், வானமும் என் மனதைக் கலக்கின. நான் கண்ட காட்சியை யாரிடமாவது சொல்ல வேண்டும் என்று தோன்றிற்று. அச்சமயம் நான் யாரை யாவது கட்டித் தழுவி, அவரைக் கிள்ளி, சிரிப்பு மூட்டி— அதிசயமான வகையில் ஏதாவது செய்யவேண்டும் என்று கருதினேன்.

அப்பொழுது ஆறு மணி ஆகியிருந்தது. நாள் முழுவதும் மழை பெய்து கொண்டிருந்தது. அப்பொழுது மழை நின்று மேகம் கலையத் தொடங்கிற்று. எரிந்து கொண்டிருக்கும் கந்தகத்தைப் போல நீல நிறத்துடன் நதி காட்சியளித்தது. நதியில் கரும் புள்ளிகள் போல் பல படகுகள் சென்றன. அவை தண்ணீரில் அலையைக் கிளப்பிய வண்ணம் கடலை நோக்கி வளைந்து செல்லும் நதியையும், இரு பக்கங்களிலும் பச்சைப் பசேல் என்ற புல் தரையையும் மரஞ் செடிகளையும் பின்னால் விட்டுச் சென்றன. மலைகளை மறைத்திருந்த மேகக் கூட்டங்கள் விலகி, ஒன்றின் பின் ஒன்றாக வேகமாகச் சென்று கொண்டிருந்தன. மலைக்கும், நதிக்கும் மரஞ்செடி கொடிகளுக்கும் மத்தியில் இடிந்த கோட்டைகள் இருந்தன. மலைக்குப் பின்னாலிருந்து மாலைக் கதிரவனின் பொன்னிறமான கிரணம் மேகத் திரையைக் கிழித்துக்கொண்டு எங்கும் பிரகாசித்தது. நதியோ, வானமோ, மலையோ ஒரே நிறத்துடன் இல்லை. எல்லாமே பல வர்ணங்களுடன், விநோதமாகவும் ஒற்றுமையுடனும் நேர்த்தியாகவும் காட்சியளித்தன. அதே சமயம்

என் ஜன்னலுக்குக் கீழே செயற்கை முறையில் அமைக்கப்பட்ட மரஞ் செடிகளும் உலாவும் இடங்களும், வரிசையான வீடுகளும் இயற்கையுடன் போட்டி போட்டு இது மனிதனுடைய துன்ப மயமான, கீழ்த்தரமான படைப்பு என்று சொல்வது போலக் காட்சி அளித்தன. வரிசையாகயிருந்த வீடுகளையும் இடித்துத் தள்ளி கண்களுக்குக் கீழே மூக்கின் அழகைக் கெடுக்கும் கறுப்புப் புள்ளியைப் போல் அகற்றிவிட வேண்டும் என்று எண்ணினேன். ஆனால் உல்லாசமாகப் பொழுதைப் போக்க வந்த கணக்கற்ற ஆங்கிலேயர் காரணமாக அவை இருந்த இடத்தில் அசைவற்றிருந்தன. அவர்கள் கண்களுக்குப் புலப்படாத ஒரு இன்பத்தை நோக்கி விரைந்து சென்றார்கள். நானும் இந்த முடிவற்ற இயற்கையின் அழகைக் கண்டு களிக்கவும், என் மனதைச் சந்தோஷமாக வைக்கவும் ஒரு வழியைக் கண்டு பிடித்தேன். சாப்பாட்டு நேரம் வரை தனியாக உட்கார்ந்திருந்தேன். ஆனால் இயற்கைக் காட்சிகளைப் பார்த்துக்கொண்டே யிருக்கும்போது ஒரு இன்பமான வேதனை மனதில் தோன்றி விடுகிறது.

ஏழரை மணிக்குச் சாப்பிட அழைத்தார்கள். நேர்த்தியாகச் சிங்காரிக்கப்பட்ட அறையில் இருநூறு பேர்கள் சாப்பிட பெரிய இரண்டு மேஜைகள் போடப்பட்டிருந்தன. சில விநாடிகளுக்குள்ளாக அந்த அறையில் ஆடைகள் கசகசவென்று சப்திக்க மெள்ளக் காலடி எடுத்து வைத்துப் பெண்களும் ஆண்களும் வேலைக்காரர்களும் அங்கு வந்து கூடினார்கள். விலையுயர்ந்த ஆடைகள் அணிந்த ஆண் பெண்கள் தங்கள் இடங்களில் உட்கார்ந்து கொண்டனர்.

சுவிஜர்லாந்துக்கு உல்லாசமாக நாட்களைக் கழிக்க வருபவர்களில் பெரும்பான்மையோர் ஆங்கிலேயர். அதனால் அவர்கள் மனப் போக்குப்படியே உணவு வகைகளும் மற்றவையும் இருந்தன. எங்கும் வெள்ளை உடையும் வெள்ளைப் பற்களும்—இயற்கையாக உள்ளதும், செயற்கையாக அமைக்கப்பட்டதும்—வெள்ளைக் கைகளுமாகக் காணப்பட்டன. ஆனால் அவர்களில் பெரும்பான்மையோருடைய முகங்கள் வெகு அழகாக யிருந்தன. அது அவர்களுடைய ஆரோக்கியத்தையும், சுற்றுப்புறமிருப்பவைகளில் விருப்பமில்லாதிருப்பதையும் எடுத்துக் காட்டிற்று. மோதிரங்கள் அணிந்த வெண்மையான விரல்கள்

கழுத்துப் பட்டையைச் சரி செய்யவும், மாமிசத்துண்டைத் துண்டிக்கவும், மதுக் கிண்ணத்தை எடுக்கவுமே பயன் பட்டன. அதைத்தவிர ஆண்களுடைய செயல்கள் மனதின் எழுச்சியை வெளிப்படுத்தவே இல்லை. சிற்சில சமயங் களில் அவர்கள் தங்களைச் சேர்ந்தவர்களில் சிறப்பாக இருக்கும் உணவு வகையையோ,மதுவையோ, ரிகி மலையின் காட்சியையோ பற்றி மெள்ளப் பேசிக் கொள்வார்கள். தனித்தனியே வந்திருக்கும் ஆண்களும் பெண்களும் பக்கத்தில் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாலும் ஒருவர் முகத்தை மற்றவர் பார்க்காமலிருந்தார்கள். அந்த இருநூறு பேர்களில் இருவரோ மூவரோ தான் காலநிலை பற்றியும், ரிகி மலைக்குச் சென்று வந்தது பற்றியும் பேசினார்கள்.

முள்கரண்டியும், கத்தியும் தட்டுகளில் உராய்ந்தன. சாப்பாடுசிறிதே உண்டிருந்தார்கள். காய்கறிகளையும் விதை வகைகளையும் அளவுக்கு மீறிச் சாப்பிட்டார்கள். வேலைக் காரர்கள் அங்கு நிலவிய மௌனத்தைக் குலைக்காத வகையில் சாராயம் வேண்டுமா என்று ஒவ்வொருவரையும் மெள்ளக் கேட்டார்கள். இப்படிப்பட்ட விருந்துகள் பயத்தையும், அமைதியின்மையையும் கடைசியாக மன வேதனையையும் உண்டு பண்ணும். நான் ஏதோ தவறு செய்து விட்டதாகவும், அதற்காக எனக்குத் தண்டனை அளிக்கப்படுவதாகவும் கருதுவேன். நான் சிறு பையனாக இருக்கும்போது இம்மாதிரியான விருந்துகளுக்குச் சென்றால் நாற்காலியில் உட்காரச் சொல்லி 'இதிலேயே உட்கார்ந்திரு' என்று பெற்றோர் கூறுவர். அதே சமயம் என் சகோதரர்கள் அடுத்த அறையில் சந்தோஷமாகப் பேசி ஆடிப் பாடுவதைக் கேட்டு இளமை ரத்தம் பாயும் என்னுடைய உள்ளத்தில் ஆத்திரம் ஏற்படும். இம்மாதிரி யான விருந்துகளில் கலந்துகொண்ட சமயம் என் உள்ளத்தில் தோன்றும் வேதனையை எதிர்த்துப் போராடு வேன். ஆனால் என் எதிர்ப்பு பயனற்றதாகவே போகும். நான் பதுமைபோல் உட்கார்ந்திருப்பேன். என் முகத் திலும் மரக்கட்டையின் தோற்றமே காணப்படும். நான் எதையும் விரும்பமாட்டேன். எதைப்பற்றியும் சிந்திக்க மாட்டேன். என்ன நடக்கிறது என்பதையும் கவனிக்க

மாட்டேன். முதலில் நான் என் பக்கத்திலிருப்பவருடன் பேச முயற்சிப்பேன். ஆனால் ஆயிரக்கணக்கான இடங்களில் பல்லாயிரக்கணக்கானவர்களிடமிருந்து ஒரு பதிலும் கிடைக்காது. ஆனால் அவர்கள் அனைவருமே முட்டாள்களாகவோ, உணர்ச்சி யற்றவர்களாகவோ இருக்க மாட்டார்கள். அதற்கு மாறாக அவர்களில் பலருக்கு என்னைப் போன்று ரகசியமான வாழ்க்கையும், நிறைவேறாத ஆசையும், மனதைக் கவரக்கூடிய அனுபவமும் ஏற்படலாம். அப்படியானால் அவர்கள் ஏன் மனிதன் மற்றொருமனித ஜீவனுடன் கலந்து பழகிசந்தோஷம் அனுபவிப்பதை மனத்திடையே அடக்கிக் கொள்கிறார்கள்?

பாரிஸ் நகர ஓட்டலில் இதற்கு மாறான நிலைமை இருந்து வந்தது. வெவ்வேறு தேசத்தைச் சேர்ந்த நாங்கள் இருபது பேரும் விளையாடக் கூடுவோம். ஒவ்வொருவரும் தட்டுத்தடுமாறி வேடிக்கையாகவும், கருத்து மிக்கதாகவும் பேசிக்கொள்வோம். எங்களுக்குப் பாஷையைப் பற்றிய கவலையே ஏற்படவில்லை.அவர்கள் எவ்வளவு தவறுதலாகப் பேசினாலும் பொருட்படுத்த மாட்டோம். ஒவ்வொருவரும் அவர்களுக்குத் தோன்றியதைச் சொல்வார்கள். எங்களில் அரசியல்வாதிகளும், வேதாந்திகளும், உல்லாசமாக பொழுதைக் கழிப்பவர்களும் இருந்தார்கள். ஆனால் எல்லோரும் ஒன்றாகவே பழகிவந்தோம். சாப்பாட்டிற்குப் பிறகு நாங்கள் மேஜைகளை அகற்றிவிட்டுத்தூசி படிந்த கம்பளத்தின்மீது இரவு வெகுநேரம் வரை நடனமாடிக் கொண்டிருப்போம். புத்திசாலித்தனத்துடனோ மரியாதையுடனோ இல்லாமல் நாங்கள் அனைவரும் மனிதர் என்ற முறையில் காதல் விளையாட்டையும் விளையாடுவோம். ஸ்பானிஷ் தேசத்து சீமாட்டி அவளுடைய வீரதீரச் செயல்கள் நிறைந்த வாலிபனுடனும், தெய்வீகக் காதல் நாடகத்தை எதிர்த்து ஒரு இத்தாலி தேசப் பாதிரியார், ஒரு அமெரிக்க வைத்தியர், நீண்ட சிகையுடைய வாலிப நாடகாசிரியார், பியானோ வாத்தியம் வாசிக்கும் ஒரு யுவதி ஆகியோர் சேர்ந்து வெகு நேர்த்தியான பாட்டை நடனத்திற்காகப் பாடுவார்கள். பியானோவிலும் வாசிப்பார்கள். மற்ற நாங்கள் அனைவரும் எல்லோரும் மனித இனம், நண்பர்கள் என்ற முறையில் உண்மையாகப் பழகி நடனமாடுவோம். ஒவ்வொருவர் வாழ்க்கையையும் சொல்லிக் கொள்வோம்.

ஆனால் ஆடம்பரமான ஆடைகளும், விலையுயர்ந்த நகை களும் அணிந்துகொண்டு விருந்திற்கு வரும் இந்த ஆங்கி லேயர்களில் எத்தனைபேர்சந்தோஷமாக வாழ்க்கை நடத்தி மற்றவர்களையும் சந்தோஷமாக வைக்கிறார்கள் என்ற சந்தேகம் ஏற்படும். மேலும் அழகான அந்த மாதர்களின் பக்கத்தில் வீற்றிருக்கும் நண்பர்கள் காதலர்களைப் பற்றி யாவது அவர்களுக்குத்தெரியுமா என்பதும் சந்தேகம்தான். அம்மாதிரி ஏன் இருக்கிறார்கள் என்பது கடவுளுக்குதான் தெரியும். மற்றவர்களுக்குச் சந்தோஷத்தை அளிப்பது வெகு எளிதாக யிருந்தும் அவர்கள் அதைக் கொடுப்பது மில்லை. கொடுக்கவேண்டும் என்ற ஆவலோ எண்ணமோ கூட அவர்களுக்கு இருக்கிறதா என்பதும் சந்தேகம்தான்.

வழக்கத்தைப் போலவே அன்று சாப்பிடும்போதும் வெறுப்புடனேயே இருந்தேன். சாப்பிட்டு மது அருந்திய பிறகு உற்சாகமின்றி நகரத்தைச் சுற்றிப் பார்க்கப் புறப் பட்டேன். தெருக்கள் குறுகலாகவும் குப்பை கூளங்க ளுடனும் விளக்குகளின்றியும் இருந்தன. கடைகளை மூடிக்கொண்டிருந்தார்கள். சாராய போதையுடன் என் எதிரே தொழிலாளிகள் வந்துகொண் டிருந்தார்கள். தலை யில் ஒன்றுமில்லாமல் பெண்கள் தண்ணீர் மொண்டுவரச் சென்றார்கள். சிலர் தலையில் தொப்பியுடன் சுவரில் சாய்ந்து போவோர் வருவோரைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தனர். இதனால் என் உற்சாகம் மேலும் குறைந் ததே தவிர அதிகரிக்கவில்லை.

தெருக்கள் மேலும் இருளடைந்தன. நான் எதையும் பார்க்காமல் எதைப் பற்றியும் சிந்திக்காமல் கலங்கிய மன துடன் ஓட்டலில் போய் படுத்துக்கொள்ள திரும்பினேன். எக்காரணமுமின்றி என் மனம், புது இடத்திற்கு வந்தது போலும், சிறுபிள்ளைத்தனமாகவும் நான் தனியாக யிருப்ப தாகவும் கருதி வேதனை யடைந்திருந்தது.

என்னைச் சுற்றியிருப்பது எதையும் கவனியாமல், தரையைப் பார்த்துக்கொண்டே ஓட்டலை நோக்கி நடந் தேன். அச்சமயம் திடீரென்று புதுமையாகவும் இனிமை யாகவும் பாடும் குரல் கேட்டது. இசைக் கருவியின் இனிய நாதமும், மனதைக் கவரும் குரலும் என் உள்ளத்தை ஒளி பெறச்செய்து, மகிழ்ச்சி ஊட்டுவது போல இருந்தன. என் உறக்கநிலை மாறி என்னைச் சுற்றியிருப்பவற்றைக் கவனிக்

கத் தொடங்கினேன். இரவின் அழகும் நதியின் வசீகரத் தன்மையும் முன்பு எனக்கு வெறுப்பாக யிருந்தது. இப்பொழுது அவை எனக்கு நேர்த்தியாகவும் மகிழ்ச்சியை உண்டு பண்ணுவதாகவும் காட்சியளித்தன. என்னை யறியாமலேயே நான் வானத்தைப் பார்த்தேன். கரு மேகங்கள் நிறைந்த வானத்தில் சந்திரன் நிலவைப் பரப்பி உதயமாகிக் கொண்டிருந்தான். நீல நிற நதியில் அவனது நிலவுபட்டுத் தண்ணீர் மின்னிக் கொண்டிருந்தது. தூரத்தி லிருந்த பனி மூடிய மலை, நிலவில் வெகு நேர்த்தியாகக் காட்சி யளித்தது. தவளைகளின் கத்தலும் இராப் பறவைகளின் அரவமும் எதிர் கரையிலிருந்து கேட்டன. ஆனால் என் கவனத்தைக் கவர்ந்த இனிமையான குரல் வந்த யிடம் இருளடைந்திருந்தது. வீதியின் மத்தியில் மக்கள் கூட்டமாகக் கூடியிருந்தார்கள். அவர்களுக்குச் சிறிது தூரத்தில் குள்ளமான ஒருவன் கறுப்பு உடை அணிந்து கொண்டு நின்றிருந்தான். அவனுக்குப் பின்னால் நிழல் உருவங்களைப் போல் மனிதர்களும், புராதனமான மாதா கோயிலும், நீல வானமும் இருந்தன.

நான் கூட்டத்தை நோக்கி நடந்தேன். பாடுபவரின் குரலும் வாத்தியத்தின் நாதமும் எனக்கு நன்றாகக் கேட்டன. கெயிட்டர் வாத்தியத்தின் இனிமையான நாதம் எனக்குத் தெளிவாகக் கேட்டது. அத்துடன் அங்கே கூடியிருந்தவர்கள் சங்கீதத்தை ரசிக்காமல் வேறு ஏதோ பேசிக் கொண்டிருப்பதும் தெளிவாகக் கேட்டது.

ஒரு நேர்த்தியான பாட்டை வாத்தியக் கருவியில் இசைத்துக் கொண்டே பாடகன் பாடினான். சில சமயம் உச்ச நிலையிலும், சில சமயம் தாழ்வாகவும் பாடினான். அது சாதாரணப் பாடல் என்று சொல்லக் கூடாது. மிகவும் நேர்த்தியான, மனதைக் கவரக் கூடிய பாட்டு. அது என்ன பாட்டு என்று எனக்குப் புரியவில்லை. ஆனால் அப்பாட்டு வெகு நேர்த்தியாக யிருந்தது. பின்புறம் நீல நதி, வானத்திலே சந்திரன், நாலாபுறமும் மக்கள் நின்று கொண்டிருந்தனர். மத்தியில் தனிமையாக அந்தக் குள்ள மனிதன் நின்றிருந்தான். இந்தக் காட்சி எனக்குப் புதுமையாகவும், நேர்த்தியாகவும் காணப் பட்டது.

குழப்பமான நிலைமைக்கும், வாழ்க்கையின் சுயேச்சையான தன்மைக்கும் திடீரென்று காரணம் தெரியத் தொடங்கிற்று. அது என் மனதில் புதிதாக ஒரு மலர் பூத்து, அதிலிருந்து மனதைக் கவரும் வாசனை ஏற்பட்டது போலத் தோன்றிற்று. கண நேரத்திற்கு முன்னால் எனக்கு உலகத்தில் அனைத்தின்மீதும் வெறுப்பும் சலிப்பும் ஏற்பட்டிருந்தது. இப்போது அந்த நிலை அடியோடு மாறி வாழ்க்கையில் பற்றும், நம்பிக்கையும், சந்தோஷமும் இருப்பதாக உணர்ந்தேன். 'எனக்குத் தேவையானது என்ன? நான் எதை விரும்புகிறேன்?' என்று நான் என்னை யறியாமலே கேட்டுக் கொண்டேன். 'இங்கு என்னைச் சுற்றி எல்லாமே யிருக்கின்றன. உன் பலம் கொண்ட மட்டும் அதைப் பருகி, அதை அனுபவித்துப் பார். மகிழ்ச்சி கொள். இதைவிட உனக்கு வேறு என்ன வேண்டும்? இவை அனைத்தும் உன்னுடையது தான். எல்லாம் நல்லவைதான்' என்றது என்மனம்.

நான் மேலும் கூட்டத்தை நெருங்கினேன். பாடுபவன் டைரோல் என்ற ஊரைச் சேர்ந்தவனைப் போல் காணப் பட்டான். அவன் ஓட்டல் ஜன்னல்களுக்கு முன்னால் ஒரு காலை வைத்து நின்றிருந்தான். அவன் தலை நிமிர்ந்து, கெயிடர் வாத்தியத்தில் பாட்டை இசைத்துப் பாடிக் கொண்டிருந்தான். அவன் எதிரிலிருந்த ஜனங்கள் பாட்டைக்கேட்காமல் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். என் மனதில் மாறுதலை ஏற்படுத்தியதற்காகப் பாடகனுக்கு என் நன்றியை மனதினுள்ளேயே தெரிவித்துக் கொண்டேன். அவன்மீதும் எனக்குப் பற்று உண்டாயிற்று.

அவன் பழைய கறுப்பு உடை அணிந்திருந்தான். தலை முடி குட்டையாகவும் கறுப்பாகவும் இருந்தது. தலையில் சாதாரண பழையதொப்பி அணிந்துகொண்டிருந்தான். அவனுடைய உடையில் ஒருவிதக் கவர்ச்சியும் இல்லை. ஆனால் அவனுடைய தோற்றம் சந்தோஷமாக யிருக்கும் குழந்தையைப் போலிருந்தது. அவனுடைய செய்கை வேடிக்கையாக யிருந்தாலும் மனதைக் கவரக் கூடியதாகக் காணப்பட்டது.

ஓட்டலின் மாடியில் பிரகாசமான விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. மாடியின் முன் பக்கத்தில் மாதர்கள் நேர்த்தியான பட்டாடை உடுத்தி விலையுயர்ந்த நகைகள்

அணிந்து கொண்டு நின்றிருந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் வெள்ளை உடை உடுத்தி ஆண்களும், வேலைக்காரர்களும் இருந்தார்கள். தெருவில் பாதி வட்ட வடிவில் மக்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பின் பெரிய வீடுகளும் குட்டையான மரங்களும், வேலைக்காரர்களும், பெண்களும் நின்றிருந்தார்கள். வழியில் போவோர் சிறிது நின்று பார்த்து விட்டு நடந்தார்கள். சிலர் கூட்டத்துடன் நின்று கொண்டார்கள். அவர்கள் அனைவருக்கும் எனக்கேற்பட்ட உணர்ச்சியே உண்டாகி யிருப்பதாகக் கருதினேன். அனைவரும் மௌனமாக நின்று பாட்டையே கேட்டுக் கொண்டிருந்தார்கள். பாடகன் பாடும்போது எங்கும் சந்தடியின்றி யிருந்தது. அவன் பாட்டை நிறுத்திய சமயம் தூரத்திலிருந்து பாய்ந் தோடும் நதியின் சப்தமும், தொழிலாளிகள் சுத்தியால் தட்டுவதும், இராப் பறவைகளின் அரவமும் கேட்டது. தவளைகளின் கத்தலும்,

இருளடைந்த தெருவில் அந்தக்குள்ளமான பாடகன், பாடும் இராப் பறவையைப் போல் நின்றிருந்தான். அவன் பாட்டிற்குப்பின் பாட்டாகப் பாடிக்கொண்டே போனான். நான் அவன் அருகில் நின்றிருந்தபோதும் அவனுடைய பாட்டு எனக்கு மகிழ்ச்சியையே அளித்தது. அவனுடைய மெல்லிய குரல் எனக்கு இனிமையாக யிருந்தது. அவன் இயற்கையாகவே இனிமையான குரலைப் பெற்றிருப்பதாகக் கருதினேன். ஒவ்வொரு பாட்டையும் ஒவ்வொரு அடியையும் வெவ்வேறு ராகத்தில் பாடினான். ஒவ்வொரு ராகமும் ஒவ்வொரு விதத்தில் இனிமையாக இருந்தது.

ஓட்டல் மாடியிலும், வீடுகளிலும் தெருவிலும் நின்று பாட்டைக் கேட்டவர்களிடமிருந்து அடிக்கடி பாராட்டுக் குரல் கேட்டது. மாடிகளிலும் ஜன்னல்களிலும் ஜனங்கள் வந்து சேர்ந்து கொண்டே யிருந்தார்கள். ஓட்டலின் விளக்குகள் மேலும் பிரகாசமாக எரியத் தொடங்கிற்று. ஆண்களும் பெண்களும் ஓட்டல் மாடியிலிருந்து குனிந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். தெருவிலே செல்பவர்கள் கூடப் பாட்டைக் கேட்டு நின்றார்கள். மரத்தடியில் நிழல் உருவங்களைப் போல் மக்கள் கூடியிருந்தார்கள்.

கூட்டத்திலிருந்து விலகி என் அருகில் ஒரு சீமான் நின்றிருந்தான். அவனுக்குச் சிறிது தூரத்தில் அவ

னுடைய வேலைக்காரன் நின்றிருந்தான். சீமான் சுருட்டுப் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் பாட்டை ஆழ்ந்து ரசிப்பவன் போலக் காணப்பட்டான் ஒவ்வொரு அடியைப் பாடும் போதும் அவனது முகத்தில் மாறுதல் காணப் பட்டது. அவன் அடிக்கடி தன் வேலைக்காரனைத் திரும்பிப் பார்த்தான். அந்தப் பார்வையில் 'அவன் எப்படிப் பாடு கிறான்!' என்று சொல்வது போல இருந்தது.

வேலைக்காரனுடைய புன்முறுவல் தோன்றிய முகத் தைப்பார்த்து அவனுக்குப் பாட்டு சந்தோஷத்தை அளிப்ப தாகக் கருதினேன். அவன் தன் எஜமானனுடைய கேள் விக்குப் பதிலளிப்பவன் போல, தோள்களைக் குலுக்கி உற்றுப் பார்த்துத் தன் ஆச்சரியத்தை வெளிப்படுத்தினான். சீமானை விட வேலைக்காரனே சங்கீதத்தை நன்கு ரசிப்ப தாகத் தோன்றிற்று.

பாடகன் சிறிது நேரம் பாடுவதை நிறுத்தித் தன் தொண்டையைச் சரிசெய்து கொண்டிருந்தான். அச்சமயம் நான் சீமானுடைய வேலைக்காரனிடம் பாடகன் யார், அவன் எந்த ஊரிலிருந்து வந்திருக்கிறான் என்று கேட் டேன்.

'அவன் வெயில் காலத்தில் இரண்டு முறை வருவான். ஆர்கு என்ற பிரதேசத்தைச் சேர்ந்தவன்.....பிச்சைக் காரன்' என்றான் வேலைக்காரன்.

'இவனைப்போல் இங்கு பலர் இருக்கிறார்களா?'

'ஹூம். ஆமாம்.' என்று எங்கோ கவனமாக நான் கேட்டதைப் புரிந்து கொள்ளாமல் முதலில் கூறினான். பிறகு நான் கேட்டதைத் தெரிந்து கொண்டதும் 'இல்லை. எனக்குத் தெரிந்து இவன் ஒருவன்தான். வேறு யாருமே இல்லை' என்றான்.

அதே சமயம் பாடகன் தன் கையிலிருந்த கெயிட்டர் வாத்தியத்தைச் சுருதி சேர்த்தான். ஜெர்மன் மொழியில் ஏதோ சொன்னான். அவன் சொன்னது எனக்குப் புரிய வில்லை. ஆனால் அதைக் கேட்டுக் கூட்டத்திலிருந்தவர்கள் சிரித்தார்கள்.

'அவன் என்ன சொன்னான்?' என்று சீமானுடைய வேலைக்காரனிடம் கேட்டேன்.

'அவனுடைய தொண்டை உலர்ந்து விட்டதாம். சிறிது சாராயம் வேண்டுமாம்.'

'ஹூம். அவனுக்குச் சாராயத்தின்மீது விருப்பம் போலிருக்கிறது.'

'ஆமாம். இப்படிப்பட்டவர்கள் அப்படித்தான்' என்று சொல்லி வெறுப்புடன் தன் கையைப் பார்த்துக் கொண்டான்.

பாடகன் தொப்பியை எடுத்து மேலே காட்டினான். பிறகு தன் வாத்தியத்துடன் ஓட்டல் பக்கம் சென்றான். அவன் தலை நிமிர்ந்து ஓட்டல் மாடியில் நின்றிருக்கும் ஆண் பெண்களை நோக்கி, பாதி இத்தாலி, பாதி ஜெர்மன் மொழி கலந்து 'ஐயாமார்களே, சீமாட்டிகளே, நான் ஏதாவது சம்பாதிக்க நினைப்பதாகக் கருதாதீர்கள் நான் மிகவும் ஏழை' என்றான்.

அவன் சிறிது நேரம் மௌனமாக யிருந்தான். ஆனால் யாரும் அவனுக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. பிறகு அவன் கெயிட்டர் வாத்தியத்தை எடுத்து மார்பில் அணைத்துக் கொண்டு 'இப்பொழுது உங்களுக்கு ரிகி பாட்டைப் பாடுகிறேன்' என்றான்.

மாடிகளிலும், ஓட்டலிலும் இருந்தவர்கள் மௌனமாக அடுத்த பாட்டை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். தெருவில் இருந்தவர்கள், பாடகன் வெளிப்படையாகத் தன் நிலைமையைக் கூறி மாடியிலிருந்தவர்களிடம் ஏதாவது கொடுக்கும்படி கேட்டும், அவர்கள் கொடுக்காததைக் கண்டு நகைத்தார்கள். நான் சில நாணயங்களை அவனிடம் கொடுத்தேன். அவன் அதைத் தன் கோட்டுப் பையால் போட்டுக் கொண்டான். பிறகு அவன் தொப்பியைத் தலையில் வைத்துக்கொண்டு கிராமியப் பாடலான ரிகியை இனிமையாகப் பாடத் தொடங்கினான். இந்தப் பாட்டு அவன் கடைசியாகப் பாடிய பாட்டையும் விட வெகு நேர்த்தியாக இருந்தது. கூட்டமும் அதிகரித்தது. கூட்டத்திலிருந்து பாராட்டுக் குரல்களும் கை தட்டலும் கேட்டன.

பாடகன் ரிகி பாட்டைப் பாடி முடித்தான். மீண்டும் அவன் கெயிட்டரை அக்குளில் வைத்துக்கொண்டு தொப்பியைக் கையில் எடுத்தான். ஓட்டல் மாடிப் பக்கமும் ஜன்னல்கள் பக்கமும் சென்று தொப்பியைக் காட்டி 'ஏதாவது கொடுங்கள்' என்று கேட்டான். அவன் குரலில் குழந்தைகளின் ஆத்திரமும், வெறுப்பும் காணப்பட்டது.

மாடியிலும், ஜன்னல்களிலு மிருந்தவர்கள் பதுமைபோல் அசைவற்றிருந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் விளக்குகள் மேலும் பிரகாசமாக எரிந்துகொண் டிருந்தன. அவர்களில் சிலர் மெல்லிய குரலில் பக்கத்திலிருந்தவர்களுடன் பேசினார்கள். அவர்கள் எதிரே கையில் தொப்பியும் வாத்தியமும் வைத்துக்கொண்டு நின்றிருக்கும் பாடகனைப் பற்றியே பேசியிருக்கலாம். மேலும் அவர்கள் பாடகனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். மாடியிலிருந்த ஒரு யுவதி கொல்லென்று சிரிப்பது கேட்டது.

தெருவிலிருந்த கூட்டத்தினர் உரக்கப்பேசிச் சிரித்தார்கள். அவர்களுடைய சிரிப்பொலி வரவர அதிகரித்தது. பாடகன் மூன்றும் முறையாக மேலும் மெல்லிய குரலில் கேட்டான். உடனே தொப்பியை நீட்டிய கையை பின்னுக் கிழுத்துக்கொண்டு திரும்பினான். அங்கே கூடியிருந்த நூற்றுக் கணக்கானவர்களில் ஒருவர்கூட ஒரு செப்புக் காசையும் அவனுக்குக் கொடுக்கவில்லை. கூட்டத்தினர் கேலியாகச் சிரித்துக்கொண்டே யிருந்தார்கள். பாடகன் வெட்கத்தால் மேலும் குன்றிப் போனான். அவன் கெயிட்டர் வாத்தியத்தைக் கையிலெடுத்துக் கொண்டு, தொப்பியைக் கழட்டி 'சீமான்களே, சீமாட்டிகளே வந்தனம்' என்று கூறித் தொப்பியை அணிந்து கொண்டான்.

கூட்டத்தினர் மீண்டும் சிரித்தனர். மாடியிலும் ஜன்னல்களிலும் நின்றிருந்த ஆண் பெண்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டே அங்கிருந்து மறைந்தார்கள். உலாவுவதற்கான இடத்தில் மீண்டும் மரங்கள் காட்சியளித்தன. பாடும்போது ஜனங்கள் சந்தடி செய்யாமலிருந்தார்கள். அதே போன்ற நிலை மீண்டும் ஏற்பட்டது. ஓரிருவரைத் தவிர மற்றவர்கள் மெள்ள நடந்தார்கள். இருந்த இரண்டொருவரும் தூரத்தில் நின்று பாடகனைப் பார்த்து சிரித்தார்கள். பாடகன் தனக்குத் தானே ஏதோ சொல்லிக்கொண்டான். அவன் திரும்பி நகரத்தை நோக்கி மெள்ள நடந்தான். அப்பொழுது அவன் மேலும் குள்ளமாகி விட்டான் போலத் தோன்றிற்று. தெருவில் நின்று பாடகனைப் பார்த்துகொண்டிருந்தவர்கள் அவனைப் பின் தொடர்ந்தார்கள். சிறிது தூரத்தில் நடந்துகொண்டே நகைத்தார்கள்,

என் மனம் குழப்பமடைந்தது. இவைகெல்லாம் என்ன என்றே எனக்கு விளங்கவில்லை. நான் அசைவற்று நின்று நகரத்தை நோக்கி வேகமாகப் போகும் அந்தப் பாடகனையே பார்த்துக் கொண்டிருந்தேன். அவன் பின்னால் நகைத்துக்கொண்டே போகிறவர்களையும் கவனித்தேன். எனக்கு என்னவோ போலிருந்தது. வெட்கமும், துக்கமும் என்னை வாட்டின. நானே கூட்டத்தின் மத்தியில் பாடிய பாடகனுகவும், கூட்டத்தினரை நான் கேட்டு அவர்கள் ஒன்றும் கொடுக்காமல் என்னைப் பார்த்து நகைப்பது போலவும் கருதினேன். நானும் திரும்பிப்பாராமல் வேகமாக நடந்து என் ஓட்டலுக்குச் சென்றேன். என் மனதில் தோன்றிய எண்ணங்களை விவரிக்க இயலாது. ஆனால் என் மனதை ஏதோ பாரம் அழுத்துவதாகவும் தீர்க்க முடியாத பிரச்னை ஒன்று மனதில் ஆட்கொண்டிருப்பதாகவும் தோன்றிற்று.

பிரகாசமாக விளக்குகள் எரியும் ஓட்டலின் முன் ஹாலில் நுழைந்தபோது முதலில் ஒரு வேலைக்காரனைச் சந்தித்தேன். அடுத்ததாக ஒரு ஆங்கிலேயக் குடும்பத்தினரைக் கண்டேன். உயரமாகவும் அழகாகவும் உள்ள ஒருவர், முகத்தில் ஆங்கில நாட்டுப் பாணியில் தாடி வைத்துக்கொண்டிருந்தார். ஆங்கில நாட்டுப் பாணியிலேயே உடை உடுத்தி தலையில் கறுப்பித் தொப்பி அணிந்து கொண்டிருந்தார். அவர் கையில் வளைத் தடியுடன் ஒரு மாதின் கையைப் பற்றிக்கொண்டு மெள்ள நடந்தார். அவருடன் நடந்த பெண்மணி பட்டாடையும், நேர்த்தியான தொப்பியும் அணிந்து கொண்டிருந்தாள். அவர்களுக்குப் பின்னால் அழகான யுவதி ஒருத்தி சுவிஜர்லாந்தின் ஓலைத் தொப்பியைப் போட்டுக் கொண்டு நீண்ட சுருட்டையான கூந்தல் பின்னால் அசைந்தாட நடந்து சென்றாள். அவர்களுக்கு முன்னால் பத்து வயதுள்ள ஒரு பெண் நடந்து போனாள். அவள் முகம் ரோஜா மலரைப் போல் சிவந்திருந்தது. பூ வேலை செய்த கவுன்போட்டுக் கொண்டிருந்தாள்.

'மிக நேர்த்தியான இரவு' என்று அந்தச் சீமாட்டி நான் அவர்களைக் கடந்து செல்லும் போது சொன்னாள்.

'ஹாம்' என்று பேசவும் விருப்ப மில்லாதவனைப் போல் அந்த சீமான் சொன்னான். அவர்களுடைய வாழ்க்

கையில் ஒரு குறைவும் இல்லாதவர்களைப் போல் தோன்றினர். எல்லாமே அவர்களுக்கு எளிதாகவும் சுத்தமாகவும் இருப்பதாகக் காணப்பட்டது. அவர்களுடைய வாழும் முறைமைக்கு மாறாக உள்ள அனைத்தையும் வெறுப்புடனேயே நோக்கினர். வெளியில் உலாவச் சென்றவர்கள் திரும்பியதும் நிம்மதியாகப் படுக்கச்செல்ல விரும்புவார்கள் என்ற நோக்கத்துடனேயே வேலைக்காரன், அவர்களுக்கு வழி விட்டு விலகி நின்றான். அவை அப்படியே நடைபெறலாம். அம்மாதிரி எண்ணுவதும் அவர்கள் உரிமை தான். ஆனால் ஒரு ஏழைப் பாடகனிடம் அவர்கள் நடந்து கொண்ட முறையைத் தான் எதிர்க்கிறேன். பாவம் அவன் பசியுடன் இருக்கலாம். அவன் அவமானம் தாங்க முடியாமலேயே கூட்டத்திலிருந்து வெளியேறி யிருக்கலாம். இதுதான் என் மனதை அழுத்திக் கொண்டிருந்த பாரம் என்பதை உணர்ந்தேன். அதனால் பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்த அனைவர்மீதும் எனக்குக் கோபம் உண்டாயிற்று. இருமுறை ஆங்கிலேயர் முன் குறுக்கும் நெடுக்குமாக நடந்தேன். ஒவ்வொரு முறையும் அவர்களுக்கு வழி விடாமலும் இடித்துக்கொண்டும் நடந்தேன். பிறகு ஓட்டல் படிகளிலிருந்து இருள் சூழ்ந்திருக்கும் தெருவிற்கு வந்தேன். பாடகன் சென்ற திக்கை நோக்கி விரைவாகச் சென்றேன்.

எனக்கு முன்னால் மூவர் சென்று கொண்டிருந்தனர். அவர்களைக் கடக்கும் போது பாடகனைப் பார்த்தார்களா என்று கேட்டேன். அவர்கள் சிரித்துக் கொண்டே பாடன் சென்ற திக்கைச் சுட்டிக் காட்டினார்கள். பாடகன் முன்னால் நடந்து போய்க் கொண்டிருந்தான். அவன் அருகில் யாருமே செல்லவில்லை. ஆத்திரமாக அவன் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். நான் அவனை நெருங்கி எங்காவது சென்று சிறிது சாராயம் பருகலாம் என்று சொன்னேன்; என்னை வெறுப்புடன் பார்த்துக் கொண்டே பதில் சொல்லாமல் அவன் நடந்தான். ஆனால் நான் சொன்னதைப் புரிந்து கொண்டதும் நின்றான்.

'நல்லது. நீங்கள் அன்புடன் கூப்பிடும் போது வராமலிருப்பேனா? இங்கே ஒரு ஓட்டல் இருக்கிறது. நல்ல இடம். நாம் இருவரும் போகலாம்' என்று அப்பொழுதும் திறந்து

வைத்திருந்த மதுக் கடையைச் சுட்டிக் காட்டினான்.

அவன் 'நல்ல இடம்' என்று குறிப்பிட்டதும் இந்த இடத்திற்குப் போகவேண்டாம். அவன் பாட்டைக் கேட்டார்களே அந்த சுஜராவ் ஓட்டலுக்குப் போகலாம் என்று சொல்வது போலத் தோன்றிற்று. நான் அவனை சுஜராவ் ஓட்டலுக்கு அழைத்தபோது அவர் வர மறுத்தான். நான் வற்புறுத்தியதன் பேரில் அவன் வேண்டா வெறுப்பாக வருவது போல் நடந்தான். ஆனால் அவன் உள்ளத்தில் மகிழ்ச்சி ஏற்பட்டது போல கெயிட்டர் வாத்தியத்தை ஆட்டிக்கொண்டே பின்னால் வந்தான். நான் பாடகன் அருகில் சென்று பேசியதைப் பலர் உற்றுக் கவனித்தனர். அவர்கள் தங்களுக்குள் விவாதித்த வண்ணம் மீண்டும் பாடகன் பாடப் போகிறான் என்ற எண்ணத்தில் எங்கள் பின்னாலேயே ஓட்டலுக்கு வந்தார்கள்.

ஓட்டலின் முன் புறத்தில் ஓட்டல் சிப்பந்தியைச் சந்தித்தேன். அவனிடம் ஒரு புட்டி சாராயம் கொண்டு வரச் சொன்னேன். அவன் என்னையும் பாடகனையும் பார்த்துப் புன்முறுவல் செய்து விட்டு வேகமாக ஓடினான். சிப்பந்திகளின் தலைவனிடம் நான் சாராய புட்டி ஒன்று வேண்டும் என்றேன். அவன் பாடகனைக் கால் முதல் தலைவரை ஒரு முறை பார்த்தான். பிறகு ஒரு சிப்பந்தியிடம் எங்களை இடது பக்கத்திலிருக்கும் ஒரு அறைக்கு அழைத்துப் போகச் சொன்னான்.

அந்த அறை சாதாரண நிலையில் உள்ளவர்கள் மது அருந்துவதற்காக என்று ஏற்பட்டது. அங்கு மர மேஜைகளும் பெஞ்சுகளுமே யிருந்தன. ஒரு கூன் விழுந்த மாது தட்டுகளைச் சுத்தம் செய்துகொண் டிருந்தாள். எங்கள் தேவைகளைக் கேட்டறிய வந்த சிப்பந்தி பாடகனைப் புன்முறுவல் செய்து பார்த்தான். பிறகு தட்டுகளைச் சுத்தம் செய்து கொண்டிருந்த மாதிடம் கண்களால் பேசினான். அவன பாடகனைவிடத் தான் உயர்ந்தவன் என்று நினைப்பதை நாங்கள் தெரிந்துகொள்ள விரும்பினான். ஆனால் எங்கள் மனம் புண்படும்படி நடந்துகொள்ளவில்லை.

'சாதாரண சாராயம்தானே?' என்று பாடகனைப் பார்த்துப் புருவத்தை நெறித்துக் கேட்டான். இடது கையிலிருந்த துணியை வலது கையில் மாற்றிக்கொண் டான்.

'ஷாம் பைன்...எடுத்து வா' என்று உயர்ந்த சாராயத்தின் பெயரைச் சொன்னேன். சிப்பந்தியை அலட்சியமாகப் பார்த்தேன். நான் உயர்ந்த சாராயத்தின் பெயரைச் சொன்னதோ அவனை அலட்சியமாகப் பார்த்ததோ சிப்பந்தியை அசைக்கவில்லை. அவன் நின்ற இடத்தை விட்டு அசையாமல் கர்வத்துடன் கையில் கட்டியிருந்த பொன் கடிகாரத்தைப் பார்த்தான். பிறகு அசைந்து ஆடிக் கொண்டு மெள்ள அங்கிருந்து சென்றான். மறுகணமே சாராயபுட்டியை எடுத்துக்கொண்டு வந்தான். அவனுடன் இரண்டு சிப்பந்திகளும் வந்தார்கள். அந்த இரண்டு சிப்பந்திகளும் தட்டுகளைச் சுத்தம் செய்யும் பெண்மணியின் அருகில் சென்று உட்கார்ந்தார்கள். எங்கள் இருவரையும் அவர்கள் புன்முறுவல் செய்து குழந்தைகள் தன் பெற்றோரைப் பார்ப்பதுபோல பார்த்துக் கொண் டிருந்தார்கள். தட்டுகளைச் சுத்தம் செய்து கொண்டிருந்த பெண்மணி தான் எங்களை அலட்சியமின்றி, அனுதாபத்துடன் பார்ப்பதுபோல் தோன்றிற்று.

சிப்பந்திகளின் பார்வை என்னை நிம்மதியாக யிருக்க விடவில்லை. அவமானமாகவும் இருந்தது. அப்படியும் நான் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் பாடகனுடன் நல்லவிதமாகப் பேச முயற்சித்தேன். விளக்கு வெளிச்சத்தில் பாடகனை நன்றாகப் பார்க்க முடிந்தது. அவன் கட்டை குட்டையாக யிருந்தான். அவனுடையமுடி கறுப்பாக யிருந்தது. பெரிய கண்களும் சிறிய கவர்ச்சிகரமான வாயும் இருந்தது. குட்டையான முடியைப்போலவே தாடியும் சிறிதாகவே இருந்தது. எளிய ஆடையே உடுத்தியிருந்தான். வெயிலில் அடிபட்டு அவன் முகம் கறுத்திருந்தது. ஒரு தொழிலாளியைப்போல் காணப்பட்டான். அவன் தெருவில் அலைந்து வியாபாரம் செய்பவனைப்போல் இருந்தானே ஒழிய ஒரு கலைஞனைக் காணப்படவில்லை. அவனுடைய ஒளி பொருந்திய பெரிய கரிய விழிகளும், நேர்த்தியான சின்ன வாயுமே அவன் ஒரு கலைஞன் என்பதற்கு அடையாளமாக யிருந்தது. தோற்றத்தைக்கொண்டு அவனுக்கு இருபத்தைந்திலிருந்து நாற்பது வயது வரை சொல்லலாம். ஆனால் அவனுக்கு முப்பத்தியெட்டு வயதாகிறதாக அவன் சொன்னான்.

அவனுடைய வாழ்க்கையைப் பற்றிக் கூறினான்.

அவனுக்கு வாழ்க்கையில் பற்றும், நேர்மையான குணமும் இருந்தது. அவன் ஆர்கு பிரதேசத்தைச் சேர்ந்தவன். சிறு வயதிலேயே அவனுடைய தாய் தந்தையரை இழந்துவிட்டான். அவனுக்கு வேறு உறவினர் யாரும் இல்லை. சொந்தமாக என்று அவனுக்கு ஒன்றும் இல்லை. ஒரு சமயம் அவன் தச்சு வேலை கற்றுக் கொண்டான். ஆனால் விரல்களில் ஒருவித வியாதி ஏற்பட்டதன் காரணமாக அவனால் தச்சுவேலையைச் செய்ய முடியவில்லை. அவனுக்குச் சங்கீதத்தில் சிறு வயது முதலே பற்று இருந்து வந்தது. அதனால் அவன் பாடிக்கொண்டே ஊர்முழுதும் சுற்றிவந்தான். வெளிநாட்டினர் அவனுக்கு ஏதாவது கொடுத்தார்கள். அதனால் பாடுவதையே அவன் தொழிலாகக் கொண்டான். கிடைத்த பணத்தில் ஒரு கெயிட்டர் வாத்தியத்தையும் வாங்கினான். கடந்த பதினெட்டு வருஷங்களாக அவன் சுவிஜர்லாந்து, இத்தாலி முதலிய தேசம் முழுவதும் சுற்றி அலைந்தான். அவனுடைய உடைமைகள் கெயிட்டர் வாத்தியமும், பணம் வைப்பதற்கான ஒரு சிறு பையுமே தான். இப்பொழுது அந்தப் பணப் பையில் ஒன்றரை பிராங்குகளே இருந்தன. அதை அவன் இரவு தங்கவும் சாப்பாட்டிற்காகவும் வைத்திருந்தான்.

ஒவ்வொரு வருஷமும் அவன் சுவிஜர்லாந்திலுள்ள உயர்ந்த ஓட்டல்களுக்குச் செல்வான். இத்தாலி தேசத்திற்குப் போவான். அங்கெல்லாம் அவன் நடந்தே சென்று பாடிப் பிழைத்து வந்தான். ஆனால் இப்பொழுது அவனால் நடந்து செல்ல இயலவில்லை. கால்களில் நரம்புத் தளர்ச்சி வியாதி ஏற்பட்டு நடப்பதே கஷ்டமாகி விட்டது. மேலும் பனி காலங்களில் அவனுக்கு உடம்பு சரியில்லாமல் போய்க் கொண்டிருந்தது. அதனால் அவனுடைய குரலும் கெட்டுக் கொண்டே வந்தது. கண் பார்வையும் குறைந்து கொண்டிருந்தது. அப்படியிருந்தும் அவன் இப்பொழுது இத்தாலிக்குச் சென்றுகொண்டிருந்தான். பொதுவாக அவனுக்கு அந்த நாடோடி வாழ்க்கை பிடித்திருந்தது.

'உறவினர் ஒருவரும் இல்லாதபோது சொந்த ஊருக்கு ஏன் போகிறாய்?' என்று நான் கேட்டேன். அவன் அதற்குப் புன்முறுவல் செய்து 'சர்க்கரை நல்லது. குழந்தைகளுக்கு அது இனிப்பாக யிருக்கிறது' என்றான்.

அவன் சொன்னதை என்னால் புரிந்து கொள்ள முடிய

வில்லை. அங்கேயிருந்த சிப்பந்திகள் அவன் சொல்வதைக் கேட்டுக் கொல்லென்று சிரித்தார்கள்.

'எனக்கு ஏதும் கிடைக்கும் என்று நான் போகவில்லை. அந்த எண்ணமும் எனக்கு இல்லை. ஏதோ என்னை அங்கு பற்றி இழுக்கிறது. என்னயிருந்தாலும் அது என் சொந்த ஊரல்லவா, பிறந்த இடமில்லையா?' என்முன் பாடகன்.

அவன் மீண்டும் சுய திருப்தி ஏற்பட்டவனைப்போல் புன்முறுவல் செய்தான். சிப்பந்திகளும் அவன் சொன்னதைக் கேட்டுச் சந்தோஷமடைந்து முழு மனதுடன் சிரித்தார்கள். தட்டுகளைச் சுத்தம் செய்து கொண்டிருந்த பெண்மணி மாத்திரம் தன் பெரிய கரிய விழிகளால் பாடகனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். கழைக் கூத்தாடிகள், மாயா ஜால வேலைகள் செய்பவர்கள், எல்லாருமே தங்களைக் கலைஞன் என்று சொல்லிக் கொள்வது எனக்குத் தெரியாது. அதனுல் நான் பலமுறை பாடகனை கலைஞன் என்று அழைத்தேன். ஆனுல் அவன் அம்மாதிரி அழைக்கப்பட்ட சமயங்களில் சரியாகப் பதிலே சொல்லவில்லை. கலைஞன் என்று தன்னைக் கருதியதாகவும் தெரியவில்லை.

அவன் பாடும் பாடல்களை அவனே இயற்றியதா என்று கேட்டேன். அதற்கு அவன் ஆச்சரியத்துடன் 'நான் எப்படி இயற்ற முடியும்? அவை அனைத்தும் டைரால் பிரதேசத்துப் பழைய பாடல்கள்!' என்முன்.

'அந்த ரிகி பாட்டு பழைய பாட்டு அல்லவே?'

'அது பதினைந்து வருஷங்களுக்கு முன்னுல் இயற்றியது. இத்தேசத்திற்கு உல்லாசமாக நாட்களைக் கழிக்க வருபவர்களை உத்தேசித்து ஜெர்மன் தேசத்துக் கவி ஒருவர் அதை இயற்றினுர். அப்பாட்டு மிக நேர்த்தியாக இல்லையா?' என்று அவன் பாட்டை பிரஞ்சு மொழியில் சொல்லத் தொடங்கினுன்.

'நீங்கள் ரிகி மலைமீது போக உங்களுக்கு செருப்பு தேவையில்லை. (வெகு தூரம்வரை படகில் போவதால்) நதியைக் கடக்கக் கையில் ஒரு பெரிய கொம்பை எடுத்துக் கொள்ளுங்கள். ஆரம்பத்தில் ஒரு டம்ளர் சாராயம் பருகுங்கள். அதிகமாகக் குடித்து விடாதீர்கள். மது அருந்துவதற்கு முன் அதற்கான பணத்தைச் சம்பாதித்துக் கொள்ளுங்கள்.'

இது வெகு நேர்த்தியான பாட்டு' என்று சொல்லி அவன் பாட்டைக் கூறி முடித்தான்.

சிப்பந்திகளும் பாட்டு நேர்த்தியானது என்று கருதி யிருக்க வேண்டும். அதனால்தானே என்னவோ அவர்கள் எங்கள் அருகில் நெருங்கி வந்து உட்கார்ந்தார்கள்.

'ஆமாம். இந்தப் பாட்டின் இசையை யார் அமைத்தது?'' என்று கேட்டேன்.

'யாருமில்லை. பாடும்போதே இசை அமைந்து விடுகிறது. வெளி தேசத்தவருக்குப் புதிதாகப்பாட ஏதாவது ஒரு பாட்டு இருக்க வேண்டும்.'

ஐஸ் கொண்டுவந்ததும் அதைக் கிண்ணத்தில் போட்டு உயர்ந்த ரக சாராயத்தையும் ஊற்றி பாடகனிடம் கொடுத்தேன். அதைப் பெற்று அவன் அருகில் உட்கார்ந்திருந்த ஓட்டல் சிப்பந்திகளை கலக்கத்துடன் பார்த்தான். பிறகு சாராயத்தைப் பருகக் கிண்ணத்தை வாயருகில் எடுத்துச் சென்றான். நாங்கள் அனைவரும் பாடகனுடைய ஆரோக்யத்திற்கென்று சாராயம் பருகினோம். அவன் பாதிக் கிண்ணம் சாராயம் பருகினான். பிறகு அவன் எதையோ நினைத்துக்கொண்டு புருவத்தை மேலே உயர்த்தினான்.

'இப்படிப்பட்ட உயர்ந்த சாராயத்தைப் பருகி வெகு நாட்களாகின்றன. இத்தாலி தேசத்தில் சாராயம் மிகவும் நன்றாக யிருக்கும். இது அதையும்விட நன்றாக யிருக்கிறது. ஹூம். இத்தாலி தேசமே! அங்கே வசிப்பது மிக நேர்த்தியாக யிருக்கும்' என்றான் பாடகன்.

'ஆமாம். அத்தேசத்தவர்களுக்கு சங்கீதத்தை ரசிக்கவும், பாடகனைப் பாராட்டவும் தெரியும்' என்று அன்று மாலை அவனுக்கு சுஜராவ் ஓட்டலில் ஏற்பட்ட ஏமாற்றத்தை நினைவுபடுத்தச் சொன்னேன்.

'இல்லை. அங்கு நான் ஒருவனுக்குக்கூட சங்கீதத்தினால் ஒரு மகிழ்ச்சியை உண்டு பண்ணியதில்லை. உலகத்திலேயே இத்தாலி தேசத்தவர்கள் சிறந்த பாடகர்கள். சங்கீத ரசிகர்கள். அவர்களைப் போல் வேறு யாரும் இருக்க முடியாது. அங்கு நான் டைரோல் கிராமியப் பாட்டையே பாடுவேன். அது அவர்களுக்குப் புதுமையானது.'

'இத்தாலி தேசப் பணக்காரர்கள் தாராள மனப்பான்மையுடன் நடந்துகொள்வார்களா?' நான் அங்கு போனது கிடையாது. ஆனால் இங்கே பெரிய பணக்காரர்கள் வந்து

தங்கும் ஓட்டலில் பாடகனுடைய பாட்டைத்தான் கேட்கிறார்கள். ஒருவன்கூட அவனுக்கு ஒன்றும் கொடுக்கவில்லை' என்று சுஜராவ் ஓட்டலிலிருந்தவர்கள் நடந்து கொண்ட விதத்தைச் சுட்டிக் காட்டினேன். அத்துடன் நான் தயாள குணத்துடன் நடந்ததையும் மறைமுகமாகச் சொன்னேன்.

நான் எதிர்பார்த்ததற்கு மாறாக என் கேள்வி அவனுடைய சிந்தனையைக் கிளறிற்று. நான் சொன்னதின் உட்கருத்தை அவன் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ஆனால் அவனுடைய பாட்டு நன்றாக யில்லாமலும், கேட்பவர்கள் மனதைக் கவர்ந்து, அவர்கள் பரிசு வழங்கும் வண்ணம் இல்லை என்று நான் கூறுவதாகக் கருதினான்.

'ஒவ்வொரு சமயமும் நிறையக் கிடைக்கும் என்று எதிர்பாக்கக் கூடாது. சில சமயங்களில் என் குரல் கெட்டு விடும். நானும் களைத்துப் போயிருப்பேன். இன்று நான் ஒன்பது மணி நேரம் தொடர்ந்து நடந்து கொண்டே பாடினேன். இம்மாதிரி தொடர்ந்து பாடிக் கொண்டே நடப்பது முடியாத காரியம். பெரிய பணக்காரர்கள் கிராமியப் பாடல்களைக் கேட்க விரும்ப மாட்டார்கள்' என்றான் பாடகன்.

'அது எப்படியாவது இருக்கட்டும். அவர்கள் எப்படி உனக்கு ஏதும் கொடுக்காமல் இருக்கலாம்?'

நான் சொன்னதன் கருத்தை அவன் தெரிந்துகொள்ளவில்.

'காரணம் அது இல்லை. இங்கு எங்கு பார்த்தாலும் போலீஸ்காரர்கள் நிரம்பியிருக்கிறார்கள். அது தான் அவர்கள் கொடுக்கத் தடையாக யிருக்கிறது. இந்த ஜன நாயக தேசத்தின் சட்டப்படி யாரும் தெருவில் பாடக் கூடாது. இத்தாலி தேசத்திலோ அப்படியில்லை. நம் விருப்பம்போல் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பாடலாம். இங்கு அவர்கள் விரும்பும் வரை பாடச் சொல்லிக் கேட்பார்கள். விருப்பமில்லை யென்றால் உடனே போலீஸில் பிடித்துக் கொடுத்துச் சிறையிலடைத்து விடுவார்கள்.'

'அது எப்படி? முடியுமா?'

'முடியும். அவர்கள் ஒருமுறை எச்சரித்த பிறகு பாடினால் போதும். உடனே சிறையிலடைத்து விடு வார்கள். நான் மூன்று மாதம் சிறையிலிருந்தேன்' என்று சொல்லிப் புன்முறுவல் செய்தான். அவன் வாழ்க்கையில் இதுவும் ஒரு சந்தோஷ சம்பவம் போலக் கருதினான்.

'ஹாம். இது மிக மோசமானது. எதற்காகச் சிறைச் சாலைக்குச் சென்றாய்?'

'அது புதிய ஜனநாயகச் சட்டம் காரணமாக ஏற் பட்டது. ஏழைகள் எப்படியாவது பிழைக்கட்டும் என்று அவர்கள் கருதுவதில்லை. என் கை கால் முடமாகயில்லா விட்டால் நான் ஏதாவது வேலைசெய்தே வாழ்க்கை நடத்த வேண்டும். ஆனால் நான் பாடுவதால் யாருக்காவது கெடுதல் ஏற்படுகிறதா? அவர்கள் சட்டத்தின் அர்த்தம் என்ன? பணக்காரர்கள் எப்படி வேண்டுமானாலும் வாழலாம். ஆனால் என்னைப்போன்ற ஏழைகள் ஒரு நாளைக்கடத்து வதுகூட மிகவும் கஷ்டம். ஜனநாயக தேசத்தில் இப்படிப் பட்ட சட்டம் இருப்பது அவசியமா? அப்படியானால் நமக்கு ஜனநாயகமே வேண்டாம். ஆனால் நமக்கு...நமக்கு வேண்டு வது...நமக்கு இயற்கையான கட்டுதிட்டங்களே வேண் டும்' என்றான் பாடகன்.

நான் அவன் கிண்ணத்தில் சாராயத்தை ஊற்றினேன். 'நீ சாராயமே பருகவில்லையே!' என்றேன்.

அவன் கையில் சாராயக் கிண்ணத்துடன் தலைகுனிந்து வணங்கினான். 'நீங்கள் எதை விரும்புகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். எனக்கு அளவுமீறி சாராயத்தைக் கொடுத்துப் பிறகு என்ன நடக்கிறது என்று பார்க்க நினைக்கிறீர்கள். ஆனால் உங்கள் எண்ணம் ஈடேறாது' என்று அவன் தலையை அசைத்து விரலை ஆட்டினான்.

'உன்னை அளவுக்கு மீறி சாராயம் பருகச் செய்வதில் எனக்கு என்ன லாபம்? உன் மனம் திருப்தியடையச் செய்யவே நான் விரும்புகிறேன்.'

'நான் சொன்னதைத் தவறாக எண்ணியதற்காக வருந்துபவனைப் போல் எழுந்து என் கையைப் பற்றினான்.

'இல்லை. அப்படி நினைக்கவில்லை. விளையாட்டுக்காகவே சொன்னேன' என்று சொல்லி சாராய போதை ஏறிய கண்களால் என்னைப் பார்த்தான்.

பிறகு அவன் பயந்த குரலில் புரியாத சொற்களை உபயோகித்து நான் நல்லவன் என்று கூறினான்.

நானும் அவனும் பேசிக்கொண்டே சாராயம் பருகினோம். ஓட்டல் சிப்பந்திகளும் எங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். எங்களை அவர்கள் விநோதப்பொருளாக நினைப்பது போல் கருதினேன். பாடகனுடன் பேசிக்கொண்டே ஓட்டல் சிப்பந்திகளைக் கவனித்து வந்தேன். அவர்களுடைய பார்வை எனக்கு ஆத்திரத்தை உண்டாக்கிற்று. சிப்பந்திகளில் ஒருவன் எழுந்துவந்து பாடகனின் தலையைக் குனிந்து பார்த்துப் புன்முறுவல் செய்தான். சுஜராவ் ஓட்டலில் உதயமான கோபம் வளர்ந்து கொண்டே யிருந்தது அதை இன்னமும் யார் மீதும் வெளிப்படுத்தவில்லை. ஓட்டல் சிப்பந்திகள் என் கோபத்தை மேலும் கிளறிவிட்டார்கள்.

ஒரு வேலைக்காரன் வந்தான். அவன் தலையிலிருந்த தொப்பியையும் கழட்டாமல் என் அருகில் உட்கார்ந்தான். மேஜைமீது கையை ஊன்றிச் சாய்ந்துகொண்டான் கடைசியாக நடந்த இந்தச் சம்பவம் என் கோபத்தை அதிகரிக்கச் செய்தது. அல்லது வீண்பெருமையைத் தூண்டிவிட்டது. உடனே அன்று மாலையிலிருந்து சேர்ந்திருந்த ஆத்திரம் வெளிப்படத் தொடங்கிற்று. "நான் தனியாக ஓட்டலுக்குள் வரும்போது இந்த வேலைக்காரன் தலை குனிந்து வணங்கினான். இப்பொழுதோ நான் பாடகனுடன் இருக்கும்போது என் பக்கத்திலேயே கர்வமாக வந்து உட்கார்ந்திருக்கிறானே?" என்று எண்ணினேன்.

என் கோபம் பன்மடங்காக அதிகரித்தது. அடக்க முடியாத அளவு அது வலுப்பெற்றது- உடனே நான் துள்ளி எழுந்தேன். ஓட்டல் சிப்பந்தியைப் பார்த்து 'ஏன் சிரிக்கிறாய்?' என்று உரக்கக் கத்தினேன். என் முகம் வெளுத்தது. உதடுகள் விரிந்தன.

'நான் சிரிக்கவில்லையே! ஒன்றுமில்லை' என்று சொல்லி சிப்பந்தி சிறிது தூரம் நகர்ந்தான்.

'இல்லை. இவரைப் பார்த்து நீ சிரித்தாய். இங்கு நாங்கள் இருக்கும்போது நீங்கள் வந்து உட்கார என்ன உரிமை யிருக்கிறது? எங்கள் அருகில் உட்காராதே' என்று வேலைக்காரன் பக்கம் திரும்பிச் சொன்னேன்.

வேலைக்காரன் முணு முணுத்துக்கொண்டே எழுந்து கதவுவரை சென்முன்.

'என் அருகில் அவர் உட்கார்ந்திருக்கும்போது நீ எப படிச் சிரிக்கலாம்? அவர் என் விருந்தாளி. நீயோ வேலைக்காரன். இன்று மாலை சாப்பாட்டின் போது என்னைப் பார்த்து ஏன் சிரிக்கவில்லை? என் பக்கத்தில் ஏன் உட்காரவில்லை? அவர் கந்தலாடை உடுத்தி, தெருவில் நின்று பாடுகிருர் என்பதற்காகச் சிரிக்கிருய். அவர் ஏழை தான்.ஆனுல் உங்களைவிட ஆயிரமடங்கு மேன்மையானவர். அவர் யாரையும் கேவலப்படுத்த வில்லை. அப்படி யிருக்கும் போது நீங்கள் மாத்திரம் அவரை ஏன் அவமானப்படுத்து கிறீர்கள்?' என்றேன்.

'நான் ஒன்றும் செய்யவில்லையே. அவர் இங்கே உட்காருவதை நான் தடுத்தேனு?' என்று என் எதிரியான சிப்பந்தி விறைப்பாகக் கேட்டான்.

அந்த சிப்பந்தி என்னையும் என் ஜெர்மன் மொழி யையும் தெரிந்துகொள்ள முடியவில்லை. முரட்டு வேலைக் காரன் சிப்பந்திக்குப் பரிந்து பேச முற்பட்டான். ஆனுல் நான் அவனைப் பலமாக சொற்களால் தாக்கியதும் பின் வாங்கி விட்டான். தனக்கு ஜெர்மன் மொழி தெரியாத தைப் போலக் கையையும் தலையையும் ஆட்டினுன். தட்டு களைச் சுத்தம் செய்துகொண்டிருந்த பெண்மணி என் கோபத்தை அறிந்தோ, அவச்சொல்லுக்குப் பயந்தோ மௌனமாக இருந்தாள். உண்மையில் அவள் என் பக்க மாகவே பேசினுள் என்பதை அறிந்தேன். வேலைக்காரனைச் சமாதானப்படுத்தி அவன் சொன்னது தவறு. நான் கூறுவதே சரியானது என்று சொன்னுள்.

பாடகன் பயந்து அசைவற்று உட்கார்ந்திருந்தான். நான் ஏன் ஆத்திரமடைந்தேன், என்ன செய்ய நினைக் கிறேன் என்பதை அறியாமல் என்னை எழுந்து போகும்படி கேட்டுக் கொண்டான். ஆனுல் என் மனதினுள் கோபம் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கிற்று. அன்று மாலை நடந்தவற்றை நினைவுபடுத்திக் கொண்டேன்.

பாடகன் பாடி முடிந்ததும் கூட்டத்தினர் அவனைப் பார்த்து நகைத்தார்கள். சீமான்களும், சீமாட்டிகளும் அவனுக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. இதெல்லாம் எனக்குக் கோபத்தை உண்டு ப

காரனும், சிப்பந்தியும் பின் வாங்காதிருந்தால் அவர்களுடன் கை கலந்திருப்பேன். இல்லாவிட்டால் உதவியற்ற ஆங்கில மாதின் தலையில் தடியால் அடித்திருப்பேன். இத்தருணத்தில் நான் சொபாஸ்டபூல் யுத்தத்தில் இருந்தால் ஆங்கிலேயரின் பாதுகாப்புப் பள்ளத்தில் பாய்ந்து பலரை வெட்டி வீழ்த்தியிருப்பேன்.

வேலைக்காரன் கையைப்பற்றி அவன் போவதைத் தடுத்து 'என்னையும் இவரையும் இந்த அறைக்கு அழைத்துப்போகச் சொன்னாயே? ஏன் வேறு அறைக்கு அழைத்துப் போகச் சொல்லவில்லை? இவருடைய தோற்றத்தைக் கொண்டு வேறு அறைக்கு அனுப்பக்கூடாது. இந்த அறை தான் அவருக்கு ஏற்றது என்று எப்படித் தீர்மானித்தாய்? ஓட்டலில் வரும் ஒவ்வொருவரும் சமமான கட்டணத்தைத் தானே கொடுக்கிறார்கள்? ஒருவர் அதிகம் ஒருவர் குறைவு என்று கொடுக்கிறார்களா? அது ஜனநாயக நாட்டில் மாத்திரமல்ல. உலகம் பூராவுமே இப்படித்தான் கொடுக்கிறார்கள். உங்களுடைய ஜனநாயகம் பாகுபாடுடையது.....இது தான் உங்கள் சமத்துவமா? ஆங்கிலேயர்களுக்கு இந்த அறையைத் தைரியமாகக் காட்டுவதுதானே? இவருடைய பாட்டை ஒன்றும் கொடுக்காமல் கேட்டவர்கள் அவர்கள் தானே? எங்களுக்கு இந்த இடத்தைக் காட்ட உனக்கு எவ்வளவு துணிச்சல்?' என்று ஆத்திரமாகக் கேட்டேன்.

'வேறு அறை மூடப்பட்டு விட்டது' என்றான் வேலைக்காரன்.

'இல்லை. பொய். அது மூடப்படவில்லை' என்று கத்தினேன்.

'உங்களுக்கு நன்றாகத் தெரியுமா?'

'தெரியும் நீ பொய் சொல்கிறாய் என்பதும் தெரியும்.''

வேலைக்காரன் வேறு பக்கம் திரும்பி 'பேசுவதில் பயன் என்ன இருக்கிறது? என்று முணு முணுத்தான்.

'பயன் இல்லைதான். உடனே எங்களை வேறு அறைக்கு அழைத்துப் போ.'

தட்டுகளைச் சுத்தம் செய்துகொண்டிருந்த பெண்மணியும், பாடகனும் என்னை எவ்வளவோ சமாதானப் படுத்தினார்கள். அங்கிருந்து போகச் சொன்னார்கள். நானோ அதற்கெல்லாம் அசைந்து கொடுக்கவில்லை. வேலைக்காரர்களின் தலைவனை அழைத்தேன். அவன் வந்து என்

சிவந்த முகத்தையும் ஆத்திரமான குரலையும் கேட்டு மௌனமாக அடுத்த அறைக்கு அழைத்துச் சென்றான் நான் விரும்பிய இடத்திற்குப் போகலாம், யாரும் தடுக்க மாட்டார்கள் என்றான். நான் அந்த அறையினுள் போவதற்குள் அவன் எங்கோ மறைந்து விட்டான்.

அந்த அறையில் விளக்குகள் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தன. ஒரு மேஜை யருகில் ஆங்கில மாதும் அவளுடைய கணவனும் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். எங்களுக்கு வேறு மேஜையைக் காட்டினார்கள். ஆனால் நானே அந்த மோசமான பாடகனுடன் ஆங்கிலேய தம்பதிகள் அருகிலேயே உட்கார்ந்து கொண்டேன். பாதி குடிக்காமல் வைத்திருந்த சாராய புட்டியை எடுத்து வரும்படி சிப்பந்தியிடம் உத்தரவிட்டேன்.

ஆங்கிலேய தம்பதிகள் முதலில் ஆச்சரியத்துடனும் ஆத்திரத்துடனும் எங்களைப் பார்த்தார்கள். பாடகனோ செத்த பிணத்திற்குச் சமமாக உட்கார்ந்திருந்தான். தம்பதிகள் இருவரும் என்னவோ பேசிக்கொண்டார்கள். உடனே அந்த ஆங்கில மாது தட்டைத் தூரத்தள்ளினாள். பிறகு பட்டாடை கசகசவென்று சப்திக்க எழுந்து சென்றாள். கதவின் சந்து வழியாகக் எங்களைக் காட்டி சிப்பந்தியிடம் ஆங்கிலேயர் ஆத்திரமாகப் பேசியதைக் கேட்டேன். சிப்பந்தியும் கதவிடுக்கு வழியாக குனிந்து எங்களைப் பார்த்தான். அவர்கள் வந்து எங்களை அறையிலிருந்து வெளியேற்றுவார்கள் என்று எதிர்பார்த்திருந்தேன். என் கோபம் முழுவதையும் அவர்களிடம் காட்ட எண்ணியிருந்தேன். ஆனால் அவர்கள் என்னை ஏமாற்றி விட்டார்கள். எங்களைத் தொந்தரவு செய்யாமல் போய்விட்டார்கள்.

முன்பு சாராயம் பருகவே தயங்கினான் பாடகன். இப்பொழுதோ சாராயத்தை பருகிவிட்டு விரைவில் வெளியேறத் துடித்தான். அவன் எனக்கு நன்றி தெரிவித்தான். கலங்கிய கண்களில் நீர் சுரந்தது. நீர் பெருகியவண்ணம், அவன் குழப்பத்துடனும் விசித்திரமான வகையிலும் எனக்கு நன்றி தெரிவிக்கும் முறையில் ஒரு குட்டிப் பிரசங்கமே செய்தான். அவன் கூறியதைக் கேட்ட ஒவ்வொருவரும் அவனைச் சிறந்த கலைஞன் என்றே மதித்து என்னைப்போல் அவனுக்கு உபசரணைகள் செய்வார்கள். எனக்கு எல்லாவித நன்மைகளும் ஏற்பட

வேண்டும் என்று கூறினான். அதுவே எனக்கு மகிழ்ச்சியை அளித்தது. நாங்கள் அறையை விட்டு முன் ஹாலுக்கு வந்தோம். ஓட்டல் சிப்பந்திகள் அங்கே யிருந்தார்கள். என் எதிரியான வேலைக்காரனும் அங்கு இருந்தான். அவன் தன் சகாக்களிடம என்னைப் பற்றிக் குறை கூறிக்கொண் டிருப்பது போலத் தோன்றிற்று. பைத்தியக்காரனைப் பார்ப்பதுபோல் என்னை அவர்கள் பார்த்தார்கள். பாடகன் அவர்கள் முன் வரும்வரை காத்திருந்தேன். பிறகு தொப் பியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டேன். அவன் கையைப் பற்றிக் குலுக்கி மெள்ள அழுத்தினேன். வேலைக் காரர்கள் எங்களைப் பார்க்காததுபோல் இருந்தார்கள். ஆனால் ஒருவன் மாத்திரம் ஏளனமாகச் சிரித்தான்.

எனக்குத் தலை குனிந்து வணக்கம் தெரிவித்துவிட்டுப் பாடகன் இருளில் மறைந்தான். நான் படுத்துத் தூங்க என் அறைக்குச் சென்றேன். திடீரென்று ஏற்பட்ட சிறுபிள்ளைத்தனமான ஆத்திரமும், முட்டாள்தனமும் என் நினைவுக்கு வந்தன. மனதில் ஏற்பட்ட குழப்ப நிலை காரணமாகத் தூக்கம் வரவில்லை. என் மனம் அமைதி யடையும் வரை உலாவிவர அறையிலிருந்து வெளியே சென்றேன். வேலைக்காரர்களோ, ஆங்கிலேயரோ, என் முன் வரமாட்டார்களா, என் கோபம் முழுவதையும் அவர்கள்மீது காட்டமாட்டோமா என்று எண்ணினேன். ஆனால் ஒருவரும் என் முன் வரவில்லை. என்னைக் கண்ட வேலைக்காரன் முகத்தைத் திருப்பிக் கொண்டு சென்று விட்டான். நான் தனியாக உலாவிக் கொண்டிருந்தேன்.

'கலையின் தலைவிதியே விசித்திரமானது' என்று மனம் சற்று அமைதியடைந்ததும் சிந்திக்கத் தொடங்கினேன். கலையை எல்லோரும் நேசிக்கிறார்கள். அதன் மூலம் மனதிற்கு மகிழ்ச்சியைப் பெற முயற்சிக்கிறார்கள். தன் வாழ்க்கைக்கு அதைப் பயன்படுத்திக் கொள்கிறார்களே தவிர, அதனுடைய சக்தியையோ, மதிப்பையோ யாரும் உணருவதே இல்லை. மனித சமூகத்திற்கு உலகிலேயே சிறந்ததான கலையை அளிப்பவனைக் கௌரவிப்பதுமில்லை. அவனுக்கு நன்றி காட்டுவதுமில்லை. சுஜராவ் ஓட்டலில் தங்கியிருப்பவர்களிடம் உலகிலேயே சிறந்தது எது என்று கேட்டுப் பாருங்கள். அவர்களில் பெரும்பாலோர் பணம் தான் என்று சொல்வார்கள். "நாங்கள் சொன்னது

உங்கள் கருத்துக்கு ஒத்துவராது. பணம் ஒன்றுதான் மனிதனுக்கு மகிழ்ச்சியை அளிக்கும் என்று ஏற்பட்டிருந்தால் என்ன செய்வது? உண்மையை நீங்களே பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள்'' என்று சொல்வார்கள்.

'நீங்கள் கூறும் காரணம் மிகக் கேவலமானது. அடைய விரும்பும் ஆனந்தமோ அதை விடக் கேவலமானது. உங்களுக்கு என்ன வேண்டும் என்பதே தெரியாதவர்கள். இழிவான எண்ண முடையவர்கள். நீங்கள் ஏன் உங்கள் தேசத்தையும், உற்றார் உறவினரையும், வேலை, பணம் முதலியவற்றையும் விட்டு இந்த லூகிரன் நகரத்திற்கு வந்திருக்கிறீர்கள்? அந்த ஏழைப் பாடகனின் பாட்டைக் கேட்க மாடிகளிலும், ஜன்னல்களிலும் வந்து நின்றீர்கள்? சந்தடி செய்யாது ஏன் மரியாதையுடன் இருந்தீர்கள்? மௌனமாகக் கேட்டுக் கொண்டிருக்கும் வரை அவன் பாடுவான் என்று நினைத்தீர்களா? என்ன பணம்! கோடிக் கணக்காக இருந்தாலும் உங்கள் சொந்த நாட்டை விட்டு இந்த லூகிரன் என்ற ஒரு மூலைக்கு துரத்தியிருக்குமா? உங்களை ஒன்று கூட்டியிருக்குமா? பணத்தினால் உங்கள் அனைவரையும் மாடியில் வந்து அரை மணி நேரம் மௌனமாக நிற்கச் செய்ய முடியுமா? முடியாது. உங்கள் வாழ்க்கையில் வேறு எந்த சக்தியையும்விடக் கலையினால் தான் உங்களை ஆட்டிவைக்க முடியும். அதற்கு நீங்கள் பணிந்தே தீரவேண்டும். ஆனால் நீங்கள் அதைக் கௌரவிப்பதில்லை. உங்கள் உள்ளத்தில் மனிதத் தன்மை யிருக்கும் வரை நீங்கள் அதற்குக் கீழ்ப்படிந்தே திருவீர்கள்! அதே சமயம் கலை என்றாலே உங்களுக்கு ஏளனமாகத் தோன்றலாம். வெறுப்பை உண்டு பண்ணும் வகையில் அதை உபயோகிப்பீர்கள். குழந்தைகளையும், மடத்தனமான பெண்களையும் கலையை நேசிக்க அனுமதிப்பீர்கள். பிறகு அவர்களைக் கண்டு ஏளனமாக நகைப்பீர்கள். ஆனால் உங்களுக்கோ பயன் படக்கூடியதாக ஒன்று வேணடும்.

''குழந்தைகளுக்கு நேசிக்கத் தெரியும். எதை நேசிக்க வேண்டும், எதனால் மகிழ்ச்சி உண்டாகும் என்பதும் அவற்றிற்குத் தெரியும். அதனாலேயே அவை ஆரோக்கியத்துடன் இருக்கின்றன. நீங்களோ கெட்டவற்றில் மனதைச் செலுத்தி, இழிவான குணத்திற்கு மாறி,

நேசிக்க வேண்டியதைக் கண்டு ஏளனம் செய்கிறீர்கள்' வெறுக்கவேண்டியதை அடைய முற்பட்டு பிறகு வருத்தப்படுகிறீர்கள். உங்கள் மனம் கெட்ட வழிகளில் சென்று விட்டதால் ஏழைப் பாடகனுக்குச் செய்ய வேண்டியதைச் செய்யவில்லை. அவனோ உங்கள் மனதிற்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தவே பாடுபட்டான். ஆனால் நீங்களோ, பயனோ, விருப்பமோ இன்றி எக்காரணத்திற்காகவோ உங்களுடைய மகிழ்ச்சியையும், வசதியையும் அவன் பொருட்டுத் தியாகம் செய்வதாக எண்ணுகிறீர்கள்.

'என்ன முட்டாள்தனம்! எவ்வளவு அறியாமை! ஆனால் அன்று மாலை எனக்கு இப்படிப்பட்ட எண்ணமே ஏற்படவில்லை. அறியாமை காரணமாகவே எனக்கு எது மகிழ்ச்சியை அளிக்கும், பாட்டை ரசிப்பது எப்படி என்பது தெரியாமல் போயிற்று. மேலும் என் வாழ்க்கையில் இப்படிப்பட்ட சம்பவம் ஏற்பட்டதும் இல்லை. இரக்கமற்ற கூட்டத்தினரை நான் அதுவரை பார்த்ததும் இல்லை. ஒரு கூட்டத்திலுள்ளவர்களில் பெரும்பான்மையோர் நல்லவர்களாக யிருப்பார்கள் என்று மக்கள் சார்பாகப் பரிந்து பேசுபவர்கள் கூறலாம். ஆனால் கூட்டத்திற்கு வரும் மக்களோ, அவர்களுடைய மிருகத் தனமான, பலவீனத்தையும், இரக்கமற்ற தன்மையையும், வெளிக்காட்டுவதுடன் தாங்கள் விரும்பியதை அடையவே நினைக்கிறார்கள். சுதந்திரப் பிரஜையாகவும் இரக்க குணமுள்ளவர்களாகவும், கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருக்கும் நீங்கள் உங்கள் மனதை மகிழ்விக்கச் செய்த அந்த துரதிஷ்டம் பிடித்த பாடகனை எப்படி வெறுக்கலாம்? அலட்சியம் செய்யலாம்? நீங்கள் அவ்விதம் செய்திருக்கவே கூடாது. உங்கள் தேசத்தில் இப்படிப்பட்ட ஏழைகளுக்கு உதவி செய்யச் சங்கங்கள் இருக்கின்றன. அங்கு பிச்சைக்காரர்களும் இல்லை. இருக்கவும் மாட்டார்கள். அதற்கு அவசியமும் ஏற்படாது. ஆனால் இந்தப் பாடகனோ தன் முழு சக்தியையும் உபயோகித்து உங்கள் மனதிற்கு சந்தோஷத்தைத் தந்தான். அவன் செய்த வேலைக்குக் கூலியாகத் தங்களிடம் ஏதாவது கொடுக்கும்படி மும்முறை கேட்டுக் கொண்டான். அவன் கேட்டதைக் கொடுக்க உங்களுக்குச் சக்தி யில்லாமல் போகவில்லை. ஆனால் நீங்கள் பிரகாசமான விளக்குகள் பொருத்தப்

பட்ட மாடிகளில் நின்று, அவனைப் பார்த்துப் புன்முறுவல் செய்தீர்களே தவிர உங்களில் ஒருவன்கூட ஒரு செப்புக் காசை அவனுக்கு எடுத்து வீசி எறியவில்லை. அவன் அவமான மடைந்து, வெட்கத்துடன் அங்கிருந்து போய் விட்டான். ஆனால் முட்டாள் கூட்டம் அவனைப் பின் தொடர்ந்து சென்று ஏளனமாக நகைத்துக் கேவலமாகப் பேசியதே ஒழிய உங்களை ஒன்றும் செய்யவில்லை. நீங்கள் அவன் அளித்த மகிழ்ச்சியைத் திருடிக் கொண்டதனால் அவர்கள் அவனைக் கேவலப்படுத்தினார்கள்.

'1857-ம் வருஷம் ஜூலை மாதம் ஏழாம் தேதி, லூகிரன் நகரத்தில் பணக்காரர்கள் வந்து தங்கும் சுஜராவ் ஓட்டலின் முன்னால் ஒரு நாடோடிப் பிச்சைக்காரப் பாடகன் ஒரு மணி நேரம் பாடினான். கெயிட்டர் வாத்தியமும் வாசித்தான். சுமார் நூறு பேர் அவன் பாட்டைக் கேட்டிருப்பார்கள். மூன்று முறை பாடகன் அவர்களிடம் ஏதாவது கொடுங்கள் என்று கேட்டான். ஒருவன் கூடப் பாடகனுக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. பலர் அவனைப் பார்த்துக் கேலியாக நகைத்தார்கள்'.

இது வேடிக்கைக்காகச் சொன்னது இல்லை. உண்மை. சுஜராவ் ஓட்டலில் ஜூலை ஏழாந்தேதி தங்கியிருந்தவர்களில் வெளி நாட்டினர் என்பதை அறிந்து அங்கேயே தங்கியிருக்கும் நபர்களை விசாரித்தால் தெரியவரும்.

நம் காலத்தைச் சேர்ந்த சரித்திர ஆராய்ச்சியாளருக்கு இச் சம்பவம் மிக முக்கியமானது. இந்தச் சம்பவம் பத்திரிகைகளிலும் புத்தகங்களிலும் வெளியாகும் பரபரப்பான செய்திகளைவிட முக்கியத்துவம் வாய்ந்தது. கருத்து நிறைந்தது. உலோக நாணயங்களை கவர்ந்து கொண்டு சாமான்கள் வாங்காததற்காக ஆயிரம் சீனக்காரர்களை ஆங்கிலேயர் கொன்றனர். ஆப்ரிக்காவில் தானியங்கள் ஏராளமாக விளைகிறது. அது தொடர்ந்து நடைபெறும் யுத்தத்திற்குச் சிப்பாய்களுக்குப் பயிற்சி யளிக்கப் பயன்படும் என்பதற்காக மேலும் ஆயிரம் அராபியர்களை பிரஞ்சுக்காரர்கள் கொன்றார்கள். நேபிள்ஸிலிருக்கும் துருக்கி தேசத்து தூதர் யூதராக யிருக்க முடியாது. சக்ரவர்த்தி நெப்போலியன் ப்ளம்பரீஸ் என்ற இடத்திற்கு நடந்து வந்து ஜனங்களிடம் "மக்களின் விருப்பம் காரணமாகவே நான் அரச பதவியை வகித்து வருகிறேன்" என்றான்.

இப்படிப்பட்ட சம்பவங்களையும், சொற்களையும் நாம் ஏராளமாகக் கேட்டிருக்கிறோம். படித்திருக்கிறோம். ஆனால் ஜூலை ஏழாம் தேதி நடந்தது மக்களின் கெட்ட சக்தி காரணமாக ஏற்பட்டதல்ல. ஆனால் சமூகப் புரட்சியினால் நடந்தது. மனித சமூகத்தின் செயல் என்று இதைக் குறிப்பிடக் கூடாது. ஆனால் அது நாகரிகம், முன்னேற்றம் ஆகியவற்றின் வளர்ச்சியை எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது.

மனிதத் தன்மையற்ற இந்த நிகழ்ச்சி ஏன் நடந்தது? ஜெர்மனி, பிரான்ஸ், அல்லது இத்தாலி முதலிய தேசங்களில் மனித சமூகத்தின் நாகரிகம் வளர்ச்சி பெற்றிருக்கிறது; சமத்துவம் ஏற்பட்டிருக்கிறது. அத் தேசங்களுக்கு நாகரிகமடைந்த தேசமக்கள் வருகிறார்கள். பல பெரிய விழாக்கள் நடைபெறுகின்றன. அப்படிப்பட்ட தேசங்களில்கூட இம்மாதிரியான ஒரு சம்பவம் நடைபெற்றிருக்குமா? இந்த முன்னேற்றமடைந்த, இரக்க குணமுள்ள, எதையும் செய்யக் கூடிய சக்தி பெற்ற, மக்கள் ஏன் இம் மாதிரி நடந்து கொண்டார்கள்? சட்ட சபைகளில் உட்கார்ந்து இந்தியாவில் வசிக்கும் சீனக்காரர்களின் நிலைமை, ஆப்ரிகாவில் கிறிஸ்துவமதம் பரவுவது, கல்வி அபிவிருத்தி ஆகியவை பற்றியும், மனித சமூகத்தின் நன்மைக்காக ஒரு சங்கத்தை ஏற்படுத்தவும் வாதம் செய்யும் இவர்களிடம் மனிதத் தன்மை இல்லையே! அவர்களிடம் மனிதத் தன்மை யில்லாமல் இருக்கமுடியுமா? அல்லது அந்த எண்ணம் இருக்கவேண்டிய உள்ளத்தில் கர்வம், ஆவல், மோகம், சட்டசபை, கூட்டங்கள், சங்கங்கள் ஆகியவை பற்றிக் கொண்டுவிட்டன. மனிதனின் முக்கிய தேவையை அளிக்க மறுத்தும், நேசித்து அன்பு பாராட்டாமலும் சுயநலத்துடனும் இருப்பதுதான் நாகரிகம் என்று கூறுகிறார்களா? இந்த சமத்துவத்திற்காகவா ஒன்றுமறியாத மக்கள் பலர் தங்கள் ரத்தத்தைச் சிந்தினார்கள்? பல பயங்கரமான செயல்கள் புரிந்தார்கள்? சமத்துவம் என்ற சொல்லைக் கொண்டே ஒரு தேசத்தின் மக்களைச் சந்தோஷமாக வைத்துவிட முடியுமா?

'சட்டத்தின் முன் எல்லோரும் சமம்தானே?' ஆனால் மனிதனுடைய வாழ்க்கை முழுதும் சட்டமே ஆதிக்கம் செய்கிறதா? ஆயிரத்தில் ஒரு பங்குதான் சட்டத்திற்குட்

பட்டிருக்கிறது. மற்றவை சமூக, பொது விவகாரங்கள் சட்டத்திற்குப் புறம்பாக யிருந்து வருகிறது. இந்த சமூகத்தில் வேலைக்காரன் நல்ல உடை உடுத்தியிருக்கிறான்: அழுக்குடையணிந்த பாடகனை அவன் ஏளனம் செய்கிறான். நான் வேலைக்காரனைவிட நல்ல உடை அணிந்திருப்பதால் வேலைக்காரனுக்குத் தண்டனை அளிப்பது போல் அவனைக் கேவலப்படுத்திப் பேசுகிறேன். என்னை உயர்ந்தவனாகவும், பாடகனைத் தாழ்ந்தவனாகவும் வேலைக்காரன் கருதுகிறான். நாங்கள் இருவரும் சமமாக உட்கார்ந்ததைக் கண்டு இது முரட்டுத்தனமானது என்று நினைக்கிறான். நான் வேலைக்காரனிடம் ஆத்திரத்துடன் நடந்து கொண்டேன். அவன் தன்னை தாழ்ந்தவனாக எண்ணி என்னை எதிர்க்காமலிருந்து விட்டான். பாடகனிடம் வேலைக்காரன் துடுக்காக நடந்து கொண்டான். பாடகனோ தன்னைத் தாழ்ந்தவன் என்று கருதி மௌனமாகி விட்டான். ஒருவனுக்குக் கூட ஒரு தீங்கும் செய்யாமல் தான் பட்டினி கிடந்து மடியாமலிருக்க நினைப்பவனைச் சிறையில் தள்ளும் தேசம்தான் சுதந்திர நாடா?

நல்லது, கெட்டது, எதிர் மறையான எண்ணங்கள் என்ற ஓயாமல் அலைபாய்ந்து கொண்டிருக்கும் ஆழ்கடலில் தன் ஆவலையும், தீர்மானங்களையும் வீசி எறிந்திருக்கும் மனிதன் எவ்வளவு துரதிர்ஷ்டம் பிடித்தவனாகவும், அனுதாபத்திற் குரியவனாகவும் இருக்கிறான்! தலை முறை தலைமுறையாக மனிதன் நல்லதை ஒரு பக்கமும், கெட்டதை ஒரு பக்கமும் வைக்கப் பாடுபட்டு வருகிறான். பல காலம் கடந்து விட்டது. நெறி தவறாத உள்ளம் படைத்தவன் நல்லது கெட்டதை தராசில் போட்டு நிறுத்த சமயம் அவை ஏற்றத்தாழ் வின்றியே இருந்து வந்தது. ஒன்றைத் தீர்மானம் செய்யவோ, ஆழ்ந்து சிந்தித்து முடிவு காணவோ, அவனிடம் கேட்கப்பட்ட கேள்விக்குப்பதில் கூறவோ மனிதனால் முடிவதில்லை. இதற்குக் காரணம் அவற்றிற்குப் பதில் கூறமுடியாது என்பதுதான். மனிதனுடைய ஒவ்வொரு எண்ணத்திலும் உண்மையும் பொய்யும் கலந்திருக்கிறது என்பதை அவன் அறிவானா? மனிதனுடைய பலவீனத்தினாலேயே ஒரு தலைப்பட்சமான பொய், உண்மை முழுவதையும் தன்னுள் அடக்கிக்கொண்டு விடுகிறது. உண்மையானது மனித

னுடைய முயற்சியை எடுத்துக் காட்டுவதாக அமைகிறது.

முடிவற்றதும், நல்லது கெட்டது ஆகிய இரண்டும் கலந்து குழப்பத்துடனும் கூடிய உலகத்தில் வாழும் மனிதன் தன்னுடைய இனத்திலேயே பல பிரிவுகளை ஏற்படுத்திக் கொண்டு விட்டான். அந்தக் கடவுல அவர்கள் கற்பனைக் கோடுகளை அமைத்தார்கள். அவர்களுடைய கற்பனைக் கோடுகளின்படி கடலானது தானே பிரிவினை செய்து கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். மற்றொரு திட்டப்படி மேலும் லட்சக் கணக்கான பிரிவினைகள் ஏற்படாமல் போகவில்லை. ஒவ்வொரு நூற்றாண்டிலும் புதிய பிரிவினைகள் ஏற்படுத்தப்பட்டு வந்துள்ளது. லட்சக்கணக்கான ஆண்டுகள் கடந்து விட்டன. இன்னமும் லட்சக் கணக்கான பிரிவினைகள் ஏற்படலாம்.

'காட்டு மிராண்டித்தனம் கெட்டது. நாகரிகம் நல்லது. அடக்கி ஆள்வது தவறு. சுதந்திரம் சிறந்தது.' இந்தக் கற்பனைத் தீர்மானங்களே மனிதனுடைய இயற்கைக் குணங்களான இயல்புணர்ச்சி, தெய்விக மனப்பான்மை, தொன்றுதொட்டு யிருந்து வந்த தயாள குணம் ஆகியவற்றை நாசமாக்கி விடுகிறது. சுதந்திரம், ஏதேச்சாதிகாரம், காட்டு மிராண்டித்தனம், நாகரிகம் என்பது என்ன என்று யாராவது எனக்கு விளக்கிக் கூற முடியுமா? அவற்றின் ஒவ்வொன்றிற்குமிடையே எல்லை எங்கேயிருக்கிறது என்றுவது காட்டமுடியுமா? நல்லது கெட்டது ஆகியவற்றின் தராதரத்தை உணர்ந்தவனுகவும், குழப்பமானதும், வேகமாகத்தோன்றி மறையக்கூடிய உண்மைகளையும் அறிந்து சொல்லக்கூடியவன் எப்படியிருப்பான்? கடந்த காலச் சம்பவங்களைப் புரிந்து கொண்டு அதைச் சீர்தூக்கிப் பார்க்கும் சாமர்த்தியம் யாருக்கு இருக்கிறது? நல்லதும் கெட்டதும் ஒன்றுகச் சேர்ந்திருக்க முடியாது என்பதைக் கண்டறிந்தவர் யார்? நான் ஒன்றைவிட மற்றதை அதிகமாகக் காண்கிறேன். அப்போது இதுதான் என் கருத்து என்று நான் எப்படி முடிவு செய்வது? ஒரு கண நேரமாவது தன் மனதை வாழ்க்கையிலிருந்து விடுவித்துக் கொண்டு அதை அடியோடு ஆராய்ந்து பார்க்கக்கூடியவன் யார்? தவருமல் நம்மை அழைத்துச் செல்லக்கூடிய ஒன்றே ஒன்று யிருக்கிறது. உலகம் எங்கும் பரவியிருக்கும் அந்த சக்தி தனிப்

பட்டவனுக்கும் எல்லோருக்கும் எப்படி யிருக்கவேண்டும் என்ற ஆவலை உண்டுபண்ணுகிறது. அந்த சக்திதான் சூரியகிரணத்தின் மூலம் மரங்களை வளரச் செய்கிறது. வசந்த காலத்தில் மலர்கள் விதைகளை உதிர்க்கச் செய்கிறது. நம்மை ஒன்று சேர்ந்திருக்குமாறு கட்டளையிடுவதும் அந்த சக்திதான்.

அந்த பாபமற்ற, பேரின்பமான குரலைக் கேட்டதும் பேரிரைச்சலுடன் கூடிய முன்யோசனையற்ற நாகரிகத்தின் வளர்ச்சி தட்டுத் தடுமாறிப் போய்விடும். யார் அதிக மனிதத் தன்மையுடன் இருக்கிறார், யார் நாகரிகமற்றவனாக யிருக்கிறான் என்பதைக் கடவுள் அறிவார். ஏழைப் பாடகனின் கிழிந்த துணியையும், அவனைப் பார்த்து ஆத்திரத்துடன் சாப்பிடுவதைவிட்டுப் போனவனையும் கடவுள் பார்த்துக்கொண்டுதானிருக்கிறார். பாடகனுடைய முயற்சி ஆங்கிலேயனுடைய மனதை மாற்றவில்லை. அவனுடைய பொருளில் கோடியில் ஒரு பங்கைக் கூட அவனால் பெற முடியவில்லை. அவனோ நன்றாகச் சாப்பிட்டு, நிம்மதியாக உட்கார்ந்து சீனா தேசத்தின் விவகாரங்களையும், அங்கு நீதியின் பெயரால் நடைபெறும் கொலைகளையும்பற்றி விவாதித்துக் கொண்டிருக்கிறான். பாடகனோ சிறைச்சாலையில் தள்ளிவிடப் போகிறார்களே என்று பயந்து கையில் ஒரு பிராங்கை வைத்துக்கொண்டு இருபது ஆண்டுகளாக ஊர் ஊராகச் சுற்றி வருகிறான். காடு மலைகளைச் சுற்றி வரும் அவன் யாருக்கும் ஒரு தீங்கும் செய்வதில்லை. ஆனால் அதே சமயம் தன் பாட்டினால் பலருடைய மனதைச் சந்தோஷப் படுத்துகிறான். அவனை இன்று அவமானப்படுத்தித் துரத்தி விட்டார்கள். அவனும் அவமானத்துடனும், பட்டினியாகவும் மரத்தடியிலோ வேறு எங்கோ படுத்துத் தூங்கலாம். இதையும் கடவுள் அறிவார்.

அச்சமயம் எங்கும் சந்தடியின்றி யிருந்தது. சிறிது தூரத்தில் அந்தப் பாடகனுடைய குரலும் அவனுடைய கெயிட்டர் வாத்தியத்தின் நாதமும் கேட்டது.

'கூடாது!' என்று என் மனத்தினுள் என்னை யறியாமலே சொல்லிக் கொண்டேன். 'அவனுக்கு அனுதாபம் காட்ட உனக்கு உரிமையில்லை. கடவுளின் செயலைக்கண்டு அவர்மீது கோபப்படவும் கூடாது. ஒவ்வொருவருடைய

உள்ளத்தின் மகிழ்ச்சியை யார் அறிவார்? அந்தப் பாடகன் இப்பொழுது புழுதி படிந்த ஏதாவது வாசற்படியில் உட்கார்ந்திருக்கலாம். அவன் இரவின் அமைதியைக் கலைத்து வான வீதியில் உலாவும் சந்திரனைப் பார்த்துச் சந்தோஷமாகப் பாடிக் கொண்டிருக்கலாம். அவனுடைய உள்ளத்தில் கெட்ட எண்ணமோ, பொறாமையோ, அவமானமோ, வருத்தமோ இருக்காது.

உலகத்திலிருக்கும் அனைவரது உள்ளங்களிலும் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று யாருக்குத் தெரியும்? அவர்களில் யாராவது ஒருவன் அந்தப் பாடகனைப் போல ஒன்றிலும் பற்றில்லாமல் வாழ்க்கையில் சந்தோஷமாக யிருப்பானா?

சொல்லுக்கு அடங்காத இரக்க குணத்தினாலும், பெருந் தன்மையினாலுமே ஆண்டவன் இந்த ஏற்றத் தாழ்வுகள், மாறுபட்ட கருத்துக்கள் ஆகியவற்றை இருக்கும்படி விட்டிருக்கிறார். கடவுளின் கட்டு திட்டங்களும், அவருடைய எண்ணமும் உங்களுக்குத் தவறாகத் தோனறுகிறது. அதைச் சிதைக்க யோசனையின்றி நீங்கள் முயல்கிறீர்கள். உலகத்தின் நேர்மாறான செயல்கள் தானாகவே சரியாவதைக் கடவுள் தம்முடைய பிரகாசமான கண்களால் பார்த்துக் கொண்டிருக்கிறார்

'உன்னுடைய கர்வம் காரணமாகவே கடவுளின் கட்டுத் திட்டத்திலிருந்து உன்னைப் பிரித்துக்கொள்ள முடியும் என்று எண்ணுகிறாய். ஆனால் நீ கூடத்தான் அந்த ஆதியந்த மில்லாத முடிவற்ற கருணையின் செயல்களுக்கு அவசியமான தொண்டைச் செய்து வருகிறாய்

(1857)

# 4. பேயின் தோல்வி

முன்னொரு காலத்தில் தயாள குணம் படைத்த ஒருவன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு இந்த உலகத்தில் நல்ல விதமாக வாழ்க்கை நடத்த எல்லாம் குறைவின்றி இருந்தன. வேலை செய்யப் பல அடிமைகள் இருந்தனர். அவனிடம் வேலை செய்வதை அந்த அடிமைகள் மிகவும் பெருமையாக எண்ணினர்.

மேலும் அந்த அடிமைகள் 'எங்கள் எஜமானனை விடச் சிறந்தவன் இந்த உலகத்தில் இருக்கமாட்டான். எங்களுக்குத் தேவையான உணவையும், சிறந்த ஆடைகளையும் அவர் அளிக்கிறார். எங்கள் சக்திக்கேற்ப வேலை தருகிறார். அவருக்குக் கெட்ட எண்ணம் என்பதே கிடையாது. யாரையும் அவர் கடிந்து பேசுவதில்லை. வேறு எஜமானர்கள் தங்கள் அடிமைகளை ஆடு மாடுகளைப் போல் நடத்துகிறார்கள். எக்காரணத்தைக் கொண்டாவது தங்கள் அடிமைகளைத் துன்புறுத்துகிறார்கள். ஒரு வார்த்தைகூட அன்பாகப் பேசுவதில்லை. எங்கள் எஜமானரோ அப்படியில்லை. நாங்கள் நன்றாகயிருக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார். நல்லதே செய்கிறார். அன்பாக எங்களுடன் பேசுகிறார். எங்கள் வாழ்க்கையில் இதைவிட வேறு எதையும் நாங்கள் விரும்பவில்லை' என்று கூறுவார்கள்.

அடிமைகள் தங்கள் எஜமானனைப் பற்றிப் பெருமையாகப் பேசிக்கொண்டிருக்கும் சமயம் அதை ஒரு பேய் கேட்டுக்கொண்டிருந்தது. எஜமானனிடம் நேசப்பான்மையுடனும் ஒற்றுமையாகவும் அடிமைகள் வாழ்வதைக் கண்டு பேய் வெறுப்படைந்தது. அதனால் அது அலிப் என்ற அடிமையைத் தன் வசப்படுத்திக்கொண்டது. மற்ற அடிமைகளைத் தூண்டும்படி அவனுக்குக் கட்டளையிட்டது.

ஒருநாள் அடிமைகள் உட்கார்ந்து எஜமானனுடைய நல்ல குணத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அச்சமயம் அலிப் உரக்கப் பேசத் தொடங்கினான்.

'நம்முடைய எஜமானனின் நல்ல குணத்தைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொள்வது மடத்தனம். பேய்கூட அதற்குத் தேவையானதைச் செய்துவிட்டால் நல்ல விதமாக நடந்துகொள்ளும். நாம் நமது எஜமானருக்கு நல்ல விதமாக வேலை செய்கிறோம். எல்லா வகையிலும் குறைவின்றி யிருக்கப் பாடுபடுகிறோம். அவர் நினைப்பதை நாம் செய்து முடிக்கிறோம். அவர் விருப்பத்தை நாம் அறிந்து அதைப் பூர்த்தி செய்கிறோம் அப்படியிருக்க அவர் நம்மிடத்தில் நல்ல விதமாக நடந்து கொள்ளாமல் எப்படி யிருக்க முடியும்? அவர் மகிழ்ச்சியடையும்படி செய்வதற்குப் பதிலாக ஏதாவது கெடுதலைச் செய்யுங்கள். அப்பொழுது அவர் எப்படி நடந்துகொள்கிறார் என்பதைப் பாருங்கள். மற்ற எஜமானர்களைப் போலவே கெடுதலுக்குக் கெடுதலே செய்ய முற்படுவார்' என்றான்.

அலிப் சொன்னதை மற்ற அடிமைகள் மறுத்தார்கள். கடைசியாக பேச்சுமுற்றி பந்தயம் வைக்கும் அளவுக்கு வந்தது. எஜமானன் ஆத்திரமடையும்படி செய்யும் வேலையை அலியே ஏற்றுக்கொண்டான். அந்த வேலையில் அவன் தோல்வியடைந்தால் ஓய்வு நாட்களில் அணிந்து கொள்ளும் ஆடையைக் கொடுத்துவிட வேண்டும். ஆனால் வெற்றி பெற்றாலோ மற்ற அடிமைகள் தங்கள் ஓய்வு நாள் உடைகளை அவனுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று பந்தயம் முடிவு செய்யப்பட்டது. அத்துடன் அவன் எஜமானின் ஆத்திரமூட்டும் பணியில் அவனுக்குச் சிறை தண்டனையோ மற்றும் வேறு தண்டனையோ கிடைப்பதாக யிருந்தாலும் அவனைப் பாதுகாப்பதாக வாக்களித்தார்கள். இந்த முடிவுக்கு வந்ததும் மறுநாள் காலையே எஜமானனை ஆத்திரமூட்டும் பணியில் ஈடுபடுவதாக அலிப் கூறினான்.

அலிப் ஆடுகளை மேய்ப்பவன். அவன் வசம் சிறந்த ஆடுகள் ஒப்படைக்கப்பட்டிருந்தன. மேலும் அவற்றின் ரோமம் கம்பளத் தயாரிப்பதற்கு மிகவும் உபயோகமானது. அதனால் எஜமானருக்கு அந்த ஆடுகள் மீது தனி விருப்பம் இருந்துவந்தது.

மறுநாள் காலை தம் விலை உயர்ந்த ஆடுகளைக் காட்டப் பலரை அழைத்துக்கொண்டு எஜமானர் ஆட்டு பட்டிக்கு வந்தார். இதைக் கண்ட அலிப் தன் சகாக்களிடம் ஜாடை

காட்டினான். 'பாருங்கள் இப்பொழுது எஜமானர் ஆத்திர மடையும்படியாகச் செய்கிறேன்' என்று சொல்வதுபோல செய்கை காட்டினான்.

மற்ற அடிமைகளும் ஆட்டுப் பட்டியின் பக்கம் வந்து கூடினார்கள். அதே சமயம் பேயும் அலிப்பின் செய்கையைக் கவனிக்க அருகாமையிலிருந்த ஒரு மரத்தின்மீது ஏறி உட்கார்ந்துகொண்டது

எஜமானர் ஆட்டுப்பட்டி உள்ளே வந்து தன் நண்பர் களுக்கு ஆடுகளைக் காட்டினார். மேலும் அவற்றில் சிறந்த ஆடு ஒன்றை அவர்களுக்குக் காட்டவும் விரும்பினார். 'இந்த ஆடுகள் அனைத்துமே சிறந்தவை அதிக விலை போகக் கூடியவை. ஆனால் கொம்புகள் வளைந்த ஒரு ஆடு இருக்கிறது. அது விலை மதிப்பற்றது. அதை என் கண்களுக்கு விருந்தாக வைத்திருக்கிறேன்' என்றார்.

புதியவர்களைக் கண்டு ஆடுகள் மிரண்டு ஓடின. அதனால் அவற்றை அனைவரும் நன்றாகப் பார்க்க முடிய வில்லை. ஆடுகள் ஒரு இடத்தில் அமைதியாக நின்ற சமயம் அலிப் எதிர்பாராத வகையில் அவற்றை மிரட்டி விட்டான. அவை ஒன்றுடன் ஒன்று முட்டி மோதிக் கொண்டு கூட்டமாக நின்றன. இக்காரணத்தால் எஜ மானன் குறிப்பிட்ட விலைமதிப்பற்ற ஆடு எது என்று வந்தவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசியாக எஜமானர் சோர்வடைந்தார். அவர் 'அலிப், நண்பா, தயவுசெய்து எனக்காக அந்த விலைமதிப்பற்ற ஆட்டைப் பிடி. வெகு ஜாக்ரதையாகச் சிறிது நேரம் பிடித்துக் கொண்டிரு' என்றார்.

அவர் சொல்லி முடிப்பதற்குள் அலிப் ஆட்டு மந்தையி னுள் சிங்கத்தைப்போல் பாய்ந்து ஓடினான். எஜமானர் குறிப்பிட்ட விலைமதிப்பற்ற ஆட்டைப் பற்றிக்கொண் டான். அதன் ரோமத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு பின்னங் கால் ஒன்றைப் பற்றி சாய்ந்த கிளையை இழுப்பதுபோல் எஜமானன் முன்னால் இழுத்தான். ஆட்டின் ஒரு கால் முறிந்து போயிற்று. உடனே ஆடு வேதனையுடன் கால்களை உதறிக் கொண்டு விழுந்தது. அலிப் மறுகணம் அடுத்த பின்னங்காலையும் பற்றி இழுத்து அதையும் ஒடித்துவிட்டான்.

எஜமானருடன் வந்தவர்களும் அடிமைகளும்

திகைத்து நின்றார்கள். பேயும் மரத்தில் நிமிர்ந்து உட்கார்ந்து அலிப் தன் வேலையைச் சரியாகச் செய்து முடித்து விட்டதாகச் சந்தோஷப்பட்டது. எஜமானர் இடிவிழுந்த நாகத்தைப்போல் பயந்து போனார். அவர் தலை குனிந்து கொண்டார். ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. என்ன நடக்கப் போகிறது என்பதைக் காண அடிமைகளும் வந்தவர்களும் மௌனமாக யிருந்தார்கள்.

சிறிது நேரம் மௌனமாக இருந்த பிறகு ஏதோ பாரத்தைக் கீழே தள்ளுவதுபோல் எஜமானர் உடலை அசைத்துக் கொண்டார். பிறகு தலை நிமிர்ந்தார். வானத்தைப் பார்த்துக் கணநேரம் மௌனமாக யிருந்தார். உடனே அவர் முகத்திலிருந்த சுருக்கங்கள் மறைந்தன. அவர் அலியைப் பார்த்துப் புன்முறுவல் செய்தார்.

'அலிப், உன் எஜமானன் என்னை ஆத்திரமடையச் செய்யும்படி தூண்டி யிருக்கிறான். ஆனால் என் எஜமானனோ உன் எஜமானனைவிட சக்தி வாய்ந்தவன். உன் மீது எனக்குக் கோபமில்லை. ஆனால் உன் எஜமானனை ஆத்திரமடையச் செய்கிறேன் நான் உன்னைத் தண்டிப்பேன் என்று நீ பயப்படுகிறாய். நீ விடுதலையடைய விரும்புகிறாய். நான் உன்னைத் தண்டிக்க மாட்டேன். ஆனால் நீ விடுதலையை விரும்பினால் என் நண்பர்கள் முன் நிலையிலேயே உன்னை அனுப்பிவிடுகிறேன். உன் விடுமுறை நாள் ஆடையை எடுத்துக்கொண்டு விருப்பமான இடத்திற்குப் போ' என்றார்.

தயாள குணமுள்ள எஜமானன் தன் நண்பர்களுடன் வீட்டினுள் சென்றார். ஆனால் பேயோ பற்களை நறநற வென்று கடித்தது. அப்படியே மரத்திலிருந்து விழுந்து தரையில் மறைந்தது.

(1885)

# 5. பனிப் புயல்

தேனீர் அருந்திய பிறகு மாலை ஏழு மணிக்கு ரயில் நிலையத்திலிருந்து புறப்பட்டேன். அந்த நிலையத்தின் பெயர் மறந்து விட்டது. டான் கொஸாக் மாகாணத்தில் நொகோ செர்கஸாக் என்ற இடத்திற்கு அருகில் அது ஏதோ ஒரு ஊர்.

நன்ருக இருட்டி விட்டது நான் என்னைக் கம்பளிக் கோட்டால் நன்ருக மூடிக்கொண்டு பனி வண்டியில் ஏறினேன். கால்களுக்குப் பாதுகாப்பாக கனத்த துணி மூடப்பட் டிருக்கும் இடத்தில் அலிஷ்காவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டேன். பிரயாண வண்டி நிற்குமிடத்திற்கு அருகில் பனி அதிகமாகப் பெய்யவில்லை. பனியே இல்லையோ என்றும் தோன்றிற்று. பனி பெய்யாது போல் இருந்தாலும் ஆகாயத்தில் ஒரு நட்சத்திரம் கூடக் கண்களுக்குத் தெரியவில்லை. ஆகாயம் நல்ல கறுப்பாகவும் மிகவும் தாழ்ந்தும் காணப்பட்டது. அதற்கு நேர்மாருக எங்கள் முன்னுல் வெள்ளை வெளேறென்ற பனி மூடிய திறந்த வெளி இருந்தது.

காற்ருடி யந்திரங்களைப் போன்றவற்றைக் கடந்து எங்கள் வண்டி போய்க் கொண்டிருந்தது. அச்சமயம் நான் தெருவைப் பார்த்தேன். பனி அதிகமாகப் பெய்து கொண்டிருந்தது. வீதியிலும் கால் வைத்தால் அப்படியே உள்ளே போகும் அளவு பனி இருந்தது. இடது பக்கம் காற்று பலமாக அடித்துக் கொண்டிருந்தது. குதிரைகள் வாலை அடித்துக் கொண்டு ஓடின. குதிரைகளின் குளம்புகளிலிருந்தும், பனி வண்டியின் கத்திபோன்ற வளைவும் பனிக்கட்டியை சுக்கு நூருக உடைத்தன. மணிகளின் சப்தம் மறையத் தொடங்கின. அச்சமயம் என்மேல் அங்கியின் திறந்திருந்த ஒரு சிறு வழியாகக் குளிர்ந்த காற்று உடலில் பாய்ந்து சென்றது. உடனே ரயில்நிலைய அதிகாரி 'அவசரப்பட்டு இரவில் பிரயாணம் செய்யாதீர்கள். வழி தவறிவிடலாம். அதனுல் இரவு பூராவும் பனியில் அகப்பட்டு விறைத்துப்போக நேரிடும்' என்று சொன்னது நினைவுக்கு வந்தது.

'நம்முடைய வழி தவறிப்போய்விட வில்லையே?' என்று வண்டிக்காரனிடம் கேட்டேன். அவன் பதில் சொல்லாமல் மௌனமாக இருந்தான். அதனால் நான் மீண்டும் 'வழிதவறிப் போகாமல் அடுத்த வண்டி நிலையத்தை அடைய முடியுமா?' என்று வண்டிக்காரனிடம் கேட்டேன்.

'கடவுளுக்குத்தான் தெரியும்' என்று அவன் என் பக்கம் திரும்பாமலே பதில் சொன்னான். பிறகு 'பாருங்கள் எங்கும் பனிப்படலமாக இருக்கிறது. வழிகூடச் சரியாகத் தெரியவில்லை' என்றான்.

'நீ சொல்வது உண்மைதான். அதிருக்கட்டும். நாம் பத்திரமாக அடுத்த வண்டி நிலையத்தை அடையமுடியுமா? முடியாதா? இதை மாத்திரம் சொல்லு போதும்.'

'எப்படியாவது நாம் போய்ச் சேர்ந்தே ஆகவேண்டும்' என்றான் வண்டிக்காரன். அவன் மேலும் ஏதோ சொன்னான் காற்றின் வேகத்தில் அது சரியாகக் கேட்கவில்லை.

எனக்குத் திரும்பிப் போகவும் மனமில்லை. அந்தப் பிரதேசமோ, டான் ராணுவ மாகாணத்தைச் சேர்ந்தது. அதனால் இரவுபூராவும் பனியில் அகப்பட்டு அவதியுறுவது எனக்கு அவ்வளவு நல்லதாகத் தோன்றவில்லை. மேலும் இருட்டில் வண்டிக்காரன் எனக்கு நன்றாகத் தெரியவில்லை. அத்துடன் அவன் எனக்கு நம்பிக்கையூட்டும் வகையிலும் நடந்துகொள்ள வில்லை. வண்டிக்காரன் வழக்கமாக வண்டியின் ஓரத்தில்தான் உட்காருவான். இவனோ கால்களை நீட்டிக்கொண்டு மத்தியில் உட்கார்ந்திருந்தான். பருமனாக இருந்ததுடன் அலட்சியமாகவும் பேசினான் மற்ற வண்டிக்காரர்களைப் போல் அவன் தொப்பி அணிந்து கொண்டிருக்கவில்லை. அவனுடைய தொப்பியின் காதுப் பக்கங்கள் மிகவும் அகலமாகவும் நீண்டும் இருந்தன அவற்றுடன் அவன் குதிரைகளை அடித்து அதட்டி ஓட்ட வில்லை. சாதாரண வேலைக்காரன் ஒருவன் வண்டிக்காரனுடைய பொறுப்பை ஏற்றதுபோல கையில் லகானைப் பற்றிக்கொண் டிருந்தான். ஆனால் வண்டிக்காரனிடம் எனக்கு நம்பிக்கை ஏற்படாததற்கு முக்கிய காரணம் அவன் காதுகளைக் கைக்குட்டை போட்டுக் கட்டியிருந்தது தான். அவனை எனக்குப் பிடிக்கவில்லை என்று ஒரே வார்த்தையில் கூறிவிடுகிறேன். முதுகைக் காட்டிக்

கொண்டு என் முன்னால் உட்கார்ந்திருப்பது எனக்குப் பிடிக்கவில்லை.

'பேசாமல் திரும்பிவிட வேண்டும் என்றே நான் சொல்லுவேன். வீணாக அவதிப்படுவது புத்திசாலித்தன மல்ல' என்றான் அலிஷ்கா.

'கடவுளே, பனி எவ்வளவு கடுமையாகப் பெய்கிறது பாருங்கள். வழிகூடத் தெரியவில்லை. பனிப்படலம் என் கண்களையும் மறைக்கிறது' என்றான் வண்டிக்காரன்.

கால்மணி நேரம் கடந்திருக்கும். திடீரென்று லகானை அலிஷ்காவிடம் கொடுத்துவிட்டு வண்டியிலிருந்து இறங்கினான் வண்டிக்காரன். அவன் அணிந்திருந்த கனமான பூட்ஸால் பனிக்கட்டிகளை அழுத்தி உடைத்துக் கொண்டு வழியைக் கண்டுபிடிக்க முன்னால் சென்றான்.

'இது என்ன? எங்கே போகிறாய்? நமக்கு வழி தப்பி விட்டதா?' என்று நான் கேட்டேன். ஆனால் வண்டிக் காரன் பதில் சொல்லவில்லை. காற்று அடிக்கும் பக்கத்தி லிருந்து அவன் வேறு பக்கம் திரும்பிக் கொண்டான். காற்றில் மிதந்து வந்த பனி அவன் கண்களை மறைத்தது. பிறகு வண்டியை விட்டு வெகுதூரம் நடந்து சென்றான்.

வண்டிக்காரன் திரும்பி வந்ததும் 'வழி கிடைத்ததா?' என்று கேட்டேன்.

'இல்லை. வழியே காணப்படவில்லை' என்று ஆத்திர மாகவும் படபடப்புடனும் பதில் சொன்னான். வழி தவற விட்டதற்கு என்னைக் குற்றம் சாட்டுவதுபோல் இருந்தது அவனுடைய பதில். அவன் மீண்டும் வண்டியில் ஏறினான். கனத்த துணியினுள் கால்களை மறைத்துக் கொண்டான். பனியில் நனைந்திருந்த கை உறைகளை சரிசெய்துகொண்டு லகானை அலிஷ்காவிடமிருந்து பெற்றான்.

வண்டி மீண்டும் புறப்பட்டதும் 'நாம் என்ன செய் வது?' என்றேன்.

'என்ன செய்வது! கடவுள் எங்கு நம்மைக் கொண்டு செல்கிறாரோ அவ்வழியே வண்டியைச் செலுத்த வேண்டி யதுதான்' என்றான் வண்டிக்காரன்.

நாங்கள் ஒரு வழியையும் பின்பற்றிச் செல்லவில்லை. குதிரையை அதன் போக்கிலேயே விட்டோம். பனிப் படலத்தின் ஆழம் வரவர அதிகரித்துக் கொண்டே போயிற்று. சில இடங்களில் உடைந்தும் போயிருந்தது.

குளிர் அதிகமாக இருந்தும் என் கம்பளிக் கோட்டின் மீது படிந்திருந்த பனி கரையத்தொடங்கிற்று. தரையிலோ பனிக் குவியல் மிகவும் மோசமாக இருந்தது. காய்ந்த இலைகள் மேலே இருந்து உதிரத் தொடங்கின.

நாங்கள் எங்கே போகிறோம் என்பது கடவுளுக்குத் தான் தெரியும். ஒரு மணி நேரம் பிரயாணம் செய்தும் ஒரு மைல் கல்லும் தென்படவில்லை.

'உன்னுடைய எண்ணம் என்ன? நாம் அடுத்த வண்டி நிலையத்தை அடைவோமா?' என்று மீண்டும் வண்டிக்காரனைக் கேட்டேன்.

'எந்த வண்டி நிலையத்திற்கு வண்டியைத் திருப்பி குதிரைகளை அதன் போக்கில் விட்டால் நம் வண்டி நிலையத்திற்கே போய்ச் சேர்ந்துவிடலாம். ஆனால் அடுத்த வண்டி நிலையம் போய்ச்சேருவது என்பது மிகவும் கடினம். வழியிலேயே நாம் நாசமாகிவிடுவோம்' என்றான் வண்டிக் காரன்.

'அப்படியானால் வண்டியைத் திருப்பி ஓட்டு. உண்மை யில்......'

அதற்குள் வண்டிக்காரன் குறுக்கிட்டு 'வண்டியைத் திருப்பட்டுமா?' என்று கேட்டான்.

'ஆமாம். வண்டியைத் திருப்பி ஓட்டு.'

வண்டிக்காரன் குதிரைகளை அதட்டினான். குதிரைகள் வேகமாக ஓடத் தொடங்கின. வண்டி திரும்பியதை நான் கவனிக்கவில்லை. ஆனால் காற்று வேறு பக்கமாக அடிப்பது தெரிந்தது. பனித்திரையினூடே காற்று யந்திரங்கள் காணப்பட்டது. வண்டிக்காரன் சந்தோஷத்துடன் பேசத் தொடங்கினான்.

'அன்றொரு நாள் அடுத்த வண்டி நிலையத்திலிருந்து ஒரு பிரயாண வண்டி வந்தது. அவர்கள் வழி தெரியாமல் இரவு பூராவும் வைக்கோல் போரிலேயே படுத்திருந்தார் களாம். பொழுது விடிந்ததும் தான் பிரயாணத்தைத் தொடங்கினார்களாம். அதிர்ஷ்டவசமாக அவர்களுக்கு வைக்கோல் போர் கிடைத்தது. இல்லாவிட்டால் குளிரில் விறைத்துப் போயிருப்பார்கள். அவர்களில் ஒருவனுடைய கால் பனியில் இருந்ததாம். அதனால் அது விறைத்து விட்டது. அவர்கள் அந்த இரவை பல நாட்கள் மரணத்தின்

வாயிலில் இருந்ததுபோலக் கருதினார்கள்' என்றான் வண்டிக்காரன்.

'இப்பொழுது குளிராக இல்லையே! பனி குறைந்திருப்பது போலத் தோன்றுகிறது. நாம் பிரயாணம் செய்யலாம் என்று தோன்றுகிறது' என்றேன்.

'அது உண்மைதான் ஆனால் பனி கரையத் தொடங்கியிருக்கிறது. இப்பொழுது திரும்பி வருவதால் நமக்கு இது சுலபமாகத் தெரிகிறது. ஆனால் பனிக் காற்று நம்மைப் பலமாக உந்தித் தள்ளுகிறது. ஏதாவது தபால் எடுத்துச் செல்லும் வேலையாகவோ, வேறு முக்கியமான காரியமாகவோ, இருந்தால் இப்பொழுது போவேன். அப்பொழுதும் என் மனப்பூர்வமாகப் போகமாட்டேன். ஒரு பிரயாணியை பனியில் விறைத்து போகும்படி விடுவது நல்லதல்ல. உங்களுக்காக நான் பிறகு என்ன பதில் சொல்வது?' என்றான் வண்டிக்காரன்

அதே சமயம் பின்னால் பல வண்டிகளின் மணிச் சப்தம் கேட்டது. கண நேரத்தில் வண்டிகளும் எங்களை வேகமாகத் தாண்டிச் சென்றன.

'அது தபால் வண்டியின் மணி சப்தம். இந்த மாகாணத்திலேயே இம்மாதிரியான மணி வேறு ஒன்றும் கிடையாது' என்றான் வண்டிக்காரன்.

உண்மையில் முதலில் சென்ற வண்டியின் மணி எங்களை மெய் மறக்கும்படி ரீங்காரம் செய்தது. இந்த மணி பற்றிப் பிறகு விசாரித்தபோது தபால் வண்டிகளுக்கென்றே பிரத்யேகமாகத் மணிகளைத் தயாரிப்பவன் செய்தது என்று தெரியவந்தது. அந்த வண்டியில் மூன்று மணிகள் இருந்தன. மத்தியில் இருக்கும் பெரிய மணிதான் வெகு நேர்த்தியானது. அதைச் 'சிம்மக் குரல்' என்பார்கள். மற்ற மணிகளின் நாதம் வெகு நேர்த்தியாக இருக்கும்.

'தபால் செல்கிறது' என்று அந்த வண்டிகள் எங்களை நெருங்கிய சமயம் வண்டிக்காரன் சொன்னான். பிறகு அந்த வண்டிக்காரர்களிடம் 'வழி எப்படியிருக்கிறது? போக முடியுமா?' என்று கேட்டான். ஆனால் அவர்கள்

பதில் சொல்லவில்லை. கூக்குரலிட்டுக் கொண்டு சென்றார்கள்.

தபால் வண்டிகள் சென்று சில வினாடிகளுக்கெல்லாம் மணியின் ஓசையும் மறைந்து விட்டது.

எங்கள் வண்டிக்காரனுக்கு வெட்கமாகி விட்டது என்று கருதுகிறேன்.

'நல்லது. நாம் மீண்டும் முயற்சிக்கலாம். அவர்கள் வழி செய்திருக்கிறார்கள். அவர்கள் வண்டியின் தடமும் நன்கு தெரியும்' என்றான் வண்டிக்காரன்.

நான் உடன் அதற்கு ஒப்புக் கொண்டேன். பனியையும் காற்றையும் எதிர்த்துப் போராடிய வண்ணம் முழங்கால் வரையும் புதையும் பனியில் சென்றோம். தெருவின் இருபக்கங்களிலும் நான் உன்னிப்பாகக் கவனித்து வந்தேன். வந்த தபால் வண்டிகளின் தடத்தையே பார்த்துக்கொண்டிருந்தேன். அதைக்கைசோரவிட நான் விரும்பவில்லை. இரண்டு மைல் தூரம் வரை வண்டியின்தடம் நன்றாகத் தெரிய வந்தது. அதன் பிறகு வண்டி வளைந்தும், குறுக்கிலுமாகச் சென்றிருந்ததால் சரியான வகையில் தடம் தெரியவில்லை. இன்னும் சிறிது தூரம் சென்றதும் ஒருவித அடையாளமும் காணப்படவில்லை.

வெண்மையான பனியைப்பனிக்காற்றில் பார்த்துவந்ததால் என் கண்கள் மங்கத் தொடங்கிற்று. அதனால் முன் பக்கமாகப்பார்வையைச்செலுத்தினேன். மூன்றாவது மைல் கல் நன்றாகத் தெரிந்தது. நான்காவது கல்லை எங்களால் காணமுடியவில்லை. முன்போலவே காற்றை எதிர்த்துப் போய்க் கொண்டிருந்தோம். காற்றும் ஒருமுறை வலப் பக்கமும், மறுமுறை இடப்பக்கமும் மாறி மாறி அடித்துக் கொண்டிருந்தது. கடைசியாக நாங்கள் மிக மோசமாகக் காற்று வீசும் பகுதியை அடைந்தோம். அப்போழுது வண்டிக்காரன் 'நாம் இப்பொழுது வலப்பக்கமாகத் திரும்பிச் செல்லலாம்' என்றான். நாம் இடதுகைப்பக்கம் போய் விட்டோம் என்றேன். அதற்குள் அலிஷ்கா 'நாங்கள் வலப்பக்கம்தான் திரும்பினோம்' என்று தீர்மானமாகச் சொன்னான்.

மீண்டும் பலமுறை வண்டியை நிறுத்தினோம். வண்டிக்காரனும் வண்டியை விட்டு இறங்கிச் சென்றான். வண்டித்

தடம் எங்காவது தெரிகிறதா என்று கவனித்தான் எல்லாம் வீணாயிற்று. ஒன்றும் தெரியவில்லை. நான்கூட ஒரு முறை வண்டியிலிருந்து இறங்கி வழியைக் கண்டு பிடிக்கச் சென்றேன். ஆனால் ஆறு அடி தூரம் செல்வதற்குள் காற்று என்னைத் திணற அடித்துவிட்டது. அத்துடன் அதே மாதிரியான பனிக்கட்டிகள் எங்கும் காணப்பட்டன. என் கண்களுக்கு வண்டி தெரியாமல் போனதும் நான் பலமாக 'வண்டிக்காரா? அலிஷ்கா' என்று கத்தினேன். ஆனால் காற்று என் குரலை வாயிலிருந்து வெளிப்படாமல் செய்துவிட்டது. வண்டியிருந்த இடத்தை நோக்கிச் சென்றேன். அங்கு வண்டி காணப்படவில்லை. வலப்பக்கமும் போனேன். அங்கும் வண்டியில்லை. நானே வெட்கப்படும்படியாக மனதை உருக்கும் வகையில் மீண்டும் கத்தினேன்.

இரண்டு அடிகளுக்குள்ளாகவே வண்டிக்காரன் இருந்தான். அவனுடைய கறுத்த உருவமும் கையிலிருந்த சிறிய சாட்டையும் நன்றாகத் தெரிந்தது. அவன் தொப்பியைத் தள்ளிவிட்டுக் கொண்டு என் பக்கம் வந்தான். என்னைப் பிடித்து வண்டிக்கு அழைத்துச் சென்றான்.

'கடவுளே இந்த இடத்தில் குளிர் கொஞ்சம் குறைந்திருக்கிறது. இல்லாவிட்டால் நாம் பனியில் விறைத்துப் போயிருக்க வேண்டியதுதான்.' என்றான் வண்டிக்காரன்.

'குதிரைகளை அதன் போக்கிலேயே விடு. அவை நம்மைத் திருப்பி அழைத்துச்சென்றுவிடும்' என்று வண்டியில் ஏறி உட்கார்ந்த வண்ணம் சொன்னேன். மீண்டும் சந்தேகம் ஏற்பட்டு 'குதிரைகள் இஷ்டத்திற்கு விட்டால் அவை திரும்பிச் சென்றுவிடுமா?' என்று கேட்டேன்.

'அவை போகத்தான் வேண்டும்' என்றான் வண்டிக்காரன்.

மத்தியிலிருந்த குதிரையை மாத்திரம் சாட்டையால் அடித்தான். பிறகு குதிரைகளை அதன் இஷ்டப்படி செல்ல லகானை தளர்த்தியாகப் பிடித்துக் கொண்டான். வண்டி ஏதோ ஒரு பக்கமாகச் சென்றுகொண் டிருந்தது.

அரைமணி நேரம் அவ்விதம் பிரயாணம் செய்திருப்போம். அச்சமயம் எங்களுக்கு எதிர்பக்கத்திலிருந்து தபால் வண்டிகளின் மணிச்சப்தம் கேட்டது. வந்த வண்டிகள் மூன்றும் முன்பு எங்களைக் கடந்து சென்றவைதான்.

அவை எடுத்துச் சென்ற தபால்களைக் கொடுத்துவிட்டுத் திரும்பி வந்தன. வண்டியிலிருந்த திடகாத்திரமான குதிரைகளும், மணியும் வேகமாக எங்களை நெருங்கிக் கொண்டிருந்தன. வண்டிக்காரர்கள் ஒவ்வொருவரும் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தார்கள். காலியாக இருந்த இரண்டு வண்டிகளின் மத்திய பாகத்தில் வண்டிக்காரர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவன் சுங்கான் பிடித்துக் கொண்டிருந்தான். சுங்கானின் நெருப்பொளியில் அவனுடைய முகத்தின் ஒரு பாகம் தெரிந்தது.

அவர்களைப்பார்த்ததும் எனக்கு மேலே செல்ல வெட்கமாக இருந்தது. எங்கள் வண்டிக்காரனுக்கும் அப்படியே இருந்திருக்க வேண்டும். அதனால் அவன் 'நாம் அவர்களைப் பின்பற்றிச் செல்லலாம்' என்றான்.

மூன்றாவது தபால் வண்டி எங்களைக் கடந்து செல்வதற்குள் எங்கள் வண்டிக்காரன் வண்டியைத்திருப்பினான். அவன் அலட்சியமாக வண்டியைத் திருப்பிய சமயம் பின்னால் வந்துகொண்டிருந்த வண்டியின் குதிரைக்கு அடிபட்டுவிட்டது. உடனே அவ் வண்டியின் மூன்று குதிரைகளும் தோல்பட்டையைத் தெறித்துக் கொண்டு வேகமாக ஓடத் தலைப்பட்டன.

'டேய் முட்டாள். கண்தெரியவில்லையா? வண்டியைத் திருப்பும்போது பின்னால் பார்க்க வேண்டாமா?' என்று கடைசி வண்டியிலிருந்த ஒருவன் கூச்சலிட்டான். அவனுடைய குரலிலிருந்து அவன் வயதானவன் என்று தெரிய வந்தது. அவன் கரகரத்த தொண்டையில் வசைபாடிக் கொண்டே வண்டியிலிருந்து குதித்தான். ஓடிய குதிரைகளைப் பிடிக்க அவனும் அதன் பின்னால் வேகமாக ஓடினான்.

ஆனால் வண்டியிலிருந்து பிய்த்துக் கொண்டு ஓடிய குதிரைகள் நிற்கவில்லை. வண்டிக்காரனும் ஓடினான். கணநேரத்திலேயே வண்டிக்காரனும், குதிரைகளும் பனித்திரையில் மறைந்துபோனார்கள்.

'வாஸ்லி! உன் குதிரைகளை அவிழ்த்துக் கொண்டுவா. என்னால் ஓடிக் குதிரைகளைப் பிடிக்கமுடியாது' என்று

முன்னுல் குதிரைகளைப் பிடிக்கச் சென்றவன் குரல் கேட்டது.

தபால் வண்டிக்காரர்களில் ஒருவன் தன் வண்டியி லிருந்த மூன்று குதிரைகளையும் அவிழ்த்தான். அவற்றில் ஒன்றின்மீது தாவி ஏறிக் கொண்டான். மறு கணம் அவனும் குதிரைகளும் மறைந்தனர்.

எங்கள் வண்டியும் மற்ற இரண்டு தபால் வண்டி களும் முழு வேகத்துடன் போகத் தொடங்கின. எதிரே தெரு தெரியாமலிருந்தும் மணியை அசைத்த வண்ணம் நாங்கள் சென்ழேம்.

'அவற்றைப் பிடிக்க முடியாதுபோல இருக்கிறது. மற்ற குதிரைகளைக் கண்டு ஒரு குதிரை திரும்பி வராவிட் டால் நன்ருகத் தெரிந்துகொண்டு விடலாம். நீங்கள் திரும்பி வராத இடத்திற்கே போய்விட்டதாகக் கருதலாம்' என்ருன் எங்கள் வண்டிக்காரன்.

மற்ற வண்டிகளைப் பின்பற்றிச் சென்ற சமயம் எங்கள் வண்டிக்காரன் சந்தோஷமாகக் காணப்பட்டான். மனம்விட்டுப் பேசத் தொடங்கினுன். எனக்கும் தூக்கம் வரவில்லை. அதனுல் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவனுடன் பேச்சுக் கொடுத்தேன். அவன் எந்த ஊரைச் சேர்ந்தவன், ஏன் வண்டி ஓட்டும் தொழிலைச் செய்கிருன் என்றெல்லாம் கேட்டேன்.

அவன் துலா மாகாணத்தைச் சேர்ந்தவன். பண்ணை யில் வேலை செய்பவன். அவர்களுக்குச் சாகுபடி செய்ய அதிக நிலங்கள் இல்லை. மேலும் அந்தப் பிரதேசத்தில் காலரா நோய் வந்த பிறகு பயிர்கள் அதிகமாக விளைவது கிடையாது. அவனுக்கு இரண்டு சகோதரர்கள் இருக்கி ருர்கள். அவர்களில் ஒருவன் ராணுவ சேவைக்குச் சென்று விட்டான். கிறிஸ்துமஸ் பண்டிகைவரை வாழ்க்கை நடத்தப் போதிய தானியம் கிடையாது. அதனுல் அவ னுடைய குடும்பத்தினர் வெளியில் வேலை செய்து சம்பா திக்க வேண்டியதாயிற்று. எல்லோரிலும் சிறியவனுக உள்ள சகோதரனுக்கு கலியாணமாகிவிட்டது. அவன் தான் குடும்பத்தின பொறுப்பை ஏற்றிருந்தான். வண்டிக் காரன் மனைவியை இழந்தவன். வண்டிக்காரன் கிராமத் தில் வண்டி ஓட்டுபவர்களுடன் சேர்ந்து இத்தொழிலை நடத்துகிருன். கிடைப்பதை அவர்கள் அனைவரும் பங்கு

போட்டுக் கொள்வார்கள். அவன் அதற்கு முன வண்டி ஓட்டியதே இல்லை. தன் சகோதரன் குடும்பம் நடத்த உதவி புரியவே அவ்வேலையை மேற்கொண் டிருக்கிறான். கடவுளின் கருணையால் அவனுக்கு வண்டி ஓட்டும் தொழி லில் வருஷத்திற்கு நூற்றைம்பது ரூபிள்கள் கிடைக்கும். அதில் நூறு ரூபிள்களை வீட்டிற்கு அனுப்பிவிடுவான். இந்த விவரங்களைக் கூறி அவன் 'தபால் வண்டிக்காரர் களுக்கு இவ்விதம் நல்ல குதிரைகளாக இல்லாவிட்டால் அவர்கள் கேவலமாகப் பேசமாட்டார்கள்' என்றான்.

'அந்த வண்டிக்காரன் என்னை ஏன் அப்படி வாயில் வந்தவிதம் பேசினான்? கடவுளே! நான் வேண்டுமென்றே அவன் குதிரை மிரண்டு ஓடும்படி செய்தேனா? நான் யாருக்காவது கெடுதி செய்யக் கருதினேனா? அவன் ஏன் அக் குதிரைகளைப் பின்பற்றி ஓடுகிறான்? குதிரைகள் தானே திரும்பி வந்துவிடும். இவ்விதம் குதிரைகளை ஓட ஓட விரட்டினால் அவையும் களைத்துவிடும். அவனும் சோர்வடைந்து போவான்' என்றான் மீண்டும் எங்கள் வண்டிக்காரன்.

எங்களுக்கு முன்னால் வரிசையாகத் தெரிந்தவற்றைக் சுட்டிக் காட்டி 'அந்தக் கரிய உருவங்கள் என்ன?' என்று கேட்டேன்.

'அதா? வண்டிகள். அவ்விதம் சேர்ந்து வண்டிகளைச் செலுத்துவது மிகவும் நேர்த்தியாக இருக்கும்' என்றான்.

சாமான்கள் நிறைந்த பல வண்டிகள் வரிசையாகப் போய்க் கொண்டிருந்தன. சாமான்களின் மேலே பாய் போட்டு மூடியிருந்தார்கள். அவற்றின் பக்கமாக வந்ததும் எங்கள் வண்டிக்காரன் 'பாருங்கள். ஒரு மனித ஜீவனைக் கூடக் காணோம். எல்லோரும் வண்டியில் படுத்துத் தூங்கு கிறார்கள். அறிவுள்ள குதிரைகளுக்கு அதன் வழி நன்றாகத் தெரியும்...... அவற்றை வழிதவறிப் போகச் சொல்ல யாராலும் இயலாது. நாங்கள் இவ்விதம் ஒப்பந்த வேலை களில் வண்டிகளை ஓட்டுவது வழக்கம். எங்களுக்கும் இம்மாதிரி வண்டியைச் செலுத்தத் தெரியும்' என்றான்.

நிறைய சாமான்கள் நிறைந்த வண்டிகளை வரிசை யாகப் பார்க்க விநோதமாக இருந்தது. மேலே போட் டிருந்த பாயில் பனி படிந்து உருகிச் சக்கரங்களில் வழிந்து ஓடிக் கொண்டிருந்தது. முன்னால் இருந்த

வண்டியின் முன் பாகத்தில் மாத்திரம் ஒரு தலை தெரிந்தது. எங்கள் வண்டியின் மணி ஓசை கேட்டே அவன் தலை தூக்கினான். கறுப்பில் வெள்ளைப் புள்ளிகள் உடைய பெரிய குதிரைகள் கழுத்தை நீட்டி, கால்களை அகலமாக எடுத்து வைத்துச் சென்றன. அடிக்கடி தலையை அசைத்தன. வாலையும் அடித்துக் கொண்டன.

அரை மணி நேரம் மௌனமாகப் பிரயாணம் செய்தோம். வண்டிக்காரன் என் பக்கம் திரும்பினான். 'நாம் சரியான பாதையில் போகிறோமா?' என்று கேட்டான்.

'எனக்குத் தெரியாது' என்றேன்.

'முதலில் காற்று இந்த திசையிலிருந்து தான் வந்தது. நாமும் அவ் வழியாகத்தான் போகிறோம். ஆனால் நாம் போகவேண்டிய இடத்தை நோக்கிச் செல்லவில்லை. எங்கோ வழி தப்பித்தான் போகிறோம்' என்றான் வண்டிக்காரன் பதட்ட மன்னியில்.

அவன் போக்கைக் கண்டு பயங்காளியாக இருப்பானோ என்று நினைக்கலாம். ஆனால் 'பலருடன் சேர்ந்து சாவது சந்தோஷத்தையே அளிக்கும்' என்று சொல்வார்கள். இப்பொழுது பலர் ஒன்று கூடி விட்டதால் அவனுடைய பொறுப்பும் குறைந்து விட்டது. அதே சமயம் அவன் கலவரமடைந்திருந்தான். வண்டிக்காரன் தனக்கு முன்னால் வண்டியைச் செலுத்துபவன் செய்யும் குற்றங் குறைகளைக் கண்டித்தான். அவன் கண்டிக்கக் கூடாது என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். உண்மையில் முன்னால் சென்ற வண்டிக்காரன் சில சமயம் வலது புறமும் சில சமயம் இடது புறமும் வண்டியைச் செலுத்திக் கொண்டிருந்தான். இதை நாங்களும் கவனித்தோம். அவன் அம்மாதிரி செய்தது நாமும் சுற்றிச் சுற்றி வளைய வந்து கொண்டிருக்கிறோமோ என்று நானும் எண்ணினேன். இவை வெளித் தோற்றத்திற்கு அப்படிக் காணப்பட்டாலும் உண்மை அது அல்ல. முன்னால் போகும் வண்டி மலைமீது ஏறும். உடனே பள்ளத்தில் இறங்கும். செங்குத்தான பாதையில் செல்லவேண்டி வரும். இதைப் பின்னாலிருந்து பார்க்கும்போது தவறாகக் கருதவேண்டி ஏற்படலாம்.

வெகு நேரம் நாங்கள் மௌனமாகப் பிரயாணம் செய்தோம். நீண்ட வழியை உற்றுக் கவனித்தேன். வானத்

தின் அடிபாகத்தில் நீண்ட கரிய உருவம் நகருவது போலத் தோன்றிற்று. கண நேரத்திற்குப் பிறகு அவை நாங்கள் கடந்து வந்த சாமான் வண்டிகள் என்பதை அறிந்தேன். அந்த வண்டிகளின்மீது மூடப்பட்டிருக்கும் பாயைப் பனி மூடிக் கொண்டிருந்தது. வண்டியின் சக்கரங்கள் பனிக் கட்டியை உடைத்துக் கொண்டு நகர்ந்தன. அப்பொழுதும் பாய்க்கடியில் வண்டிக்காரர்கள் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தனர். முன் போலவே முன்னாலிருந்த வண்டியின் குதிரை கனைத்து வழியை முகர்ந்துகொண்டு நடந்தது. சப்தம் வந்ததிக்கில் நாதைத் திருப்பிற்று.

'நாம் சுற்றிச் சுற்றி மீண்டும் சாமான் வண்டிகளுக்குப் பின்னாலேயே வந்து விட்டோம்' என்று எங்கள் வண்டிக்காரன் அதிருப்தி யடைந்தவனைப் போல் சொன்னான். அவன் மீண்டும் 'தபால் வண்டியில் பூட்டியிருப்பது நல்ல ஜாதிக் குதிரைகள். அதனால் தான் அவற்றைக் கண்களை மூடிக்கொண்டு கண்டபடி ஓட்டுகிறார்கள். ஆனால் நாம் இரவு பூராவும் இம்மாதிரி நம்முடைய குதிரைகளை விரட்டினால் அவை வழியிலேயே நின்று விடும்' என்றான்.

வண்டிக்காரன் தன் தொண்டையைச் சரி செய்து கொண்டு மீண்டும் 'நாம் கஷ்டத்தில் அகப்பட்டுக் கொள்வதற்கு முன் திரும்பிவிடலாம்' என்றான்.

'வேண்டாம். ஏன் திரும்ப வேண்டும்? நாம் எங்காவது ஒரு இடத்திற்குப் போய் விடலாம்' என்றேன்.

'நாம் எங்கே போவது? திறந்த வெளியில் நாம் இரவைக் கழிக்கலாம். காற்று எப்படி அடிக்கிறது. ..... கடவுளே!'

முன்னாலிருந்த தபால் வண்டிக்காரனைப் பார்த்து நான் ஆச்சரியமடைந்தேன். அவன் வழியைத் தவறவிட்டும் கலங்கவில்லை. சிரித்துக்கொண்டே வண்டியை வேகமாகச் செலுத்தினான். அவனுக்குப் பின்னால் தங்க நான் விரும்பவில்லை. அதனால் 'தபால் வண்டிகளைப் பின்பற்றி வண்டியைச் செலுத்து' என்றேன்.

எங்கள் வண்டிக்காரன் நான் சொன்னதற்கு மறுமொழி கூறவில்லை. முன்னையும்விட பலமாகக் குதிரைகளை அடித்து விரட்டினான். அதன் பிறகு என்னுடன் பேச முகத்தைத் திருப்பவே இல்லை.

# 4

வர வரப் புயலின் வேகம் அதிகரித்துக் கொண்டே இருந்தது. பனி கட்டி கட்டியாக விழத்தொடங்கிற்று. அவை நேர்த்தியாகவும் இருந்தன. பனி உறையத் தொடங்கியதாக நான் கருதினேன். முன்னைவிட என் முகம் சில்லென்று இருந்தது. குளிர் காற்று என் கம்பளிக்கோட்டையும் கடந்து என் உடலைத் தாக்க முற்பட்டது. நான் என்னை நன்றாக போர்த்திக் கொள்ள வேண்டியதாயிற்று.

சில சமயம் பனிக்கட்டிகளின் மீது எங்கள் வண்டி ஏறி யிறங்கவேண்டியதாயிற்று. இரவு எங்கும் நிற்காமல் பல மைல்கள் நான் பிரயாணம் செய்து விட்டேன். நான் வேண்டுமென்றே என் கண்களை மூடிக்கொண்டேன். தூங்க முயற்சித்தேன். சுற்றிச் சுற்றி வட்ட மிட்டுக் கொண்டிருக்கும் பிரயாணம் எங்கு கொண்டுவிடப்போகிறது என்பதை அறிய எனக்கு அதிக ஆவலாக இருந்தது. அப்படியும் நான் கண்களைத் திறக்காமல் இருந்தேன்.

ஒரு சமயம் நான் கண்களைத் திறந்தபோது ஒரு பிரகாசமான ஒளி பரந்து கிடந்த பனித்தரைமீது பாய்ந்து கொண்டிருப்பதைக் கண்டேன். அடிவானம் போதுமான அளவு அகண்டு கொண்டது. மிகத் தாழ்வாக இருந்த கறுத்த மேகம் திடீரென்று மறைந்தது. எல்லாப் பக்கங்களிலிருந்தும் வெண்மையாகப் பனி பெய்வது தெரிந்தது. எங்களுக்கு முன்னால் சென்றுகொண்டிருந்த வண்டிகூட மங்கலாகத்தான் காணப்பட்டது.

நான் தூங்கிக் கொண்டிருக்கும்போது சந்திரன் வானத்தில் தோன்றினான். பனி பெய்து வெண்மையாக இருக்கும் தரைமீது பால்போன்ற நிலவைப் பொழிந்து கொண்டிருந்தான். என் கண்களுக்கு என் வண்டி, குதிரைகள், வண்டிக்காரன், எங்களுக்கு முன்னால் செல்லும் மூன்று வண்டிகள் ஆகியவையே நன்றாகத் தெரிந்தன. எல்லாவற்றிற்கும் முன்னால் செல்லும் வண்டியில் வண்டிக்காரன் முன்போலவே உட்கார்ந்திருந்தான். முன்போலவே குதிரைகளை விரட்டி வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்தான். இரண்டாவது வண்டிக்காரர்கள் இருவரும் லகானைக் கீழே மாட்டினார்கள். நீண்ட கம்பளி அங்கியை நன்றாகப் போர்த்திக்கொண்டு சுங்கானில் புகை

பிடிக்கலானார்கள். சுங்கானிலிருந்து நெருப்புப் பொறி பறந்தது நன்றாகத் தெரிந்தது. மூன்றாவது வண்டியில் யாரும் தென்படவில்லை. ஒரு வேளை வண்டிக்காரன் படுத்தத் தூங்குகிறானோ என்னவோ.

நான் கண்விழித்த சமயம் முன் வண்டிக்காரன் வண்டியை நிறுத்தினான். வண்டியிலிருந்து இறங்கி வழியை உற்றுக் கவனித்தான். மற்ற வண்டிகளும் நின்றன. அச்சமயம் காற்றின் சப்தம் அதிகரித்தது. காற்றில் மணல் போன்ற பனி அடித்துக்கொண்டு வந்து தாக்கிற்று. பனித் திரையினூடே பிரகாசித்துக் கொண்டிருந்த சந்திரனின் ஒளியில் கையில் சாட்டையுடன் வழியைக் கவனித்துச் செல்வதைக் கண்டேன். சிறிது தூரம் முன்னால் சென்றவன் திரும்பி வந்து வண்டியில் உட்கார்ந்து கொண்டான். மீண்டும் முன்போலவே சலிப்பை உண்டுபண்ணும் காற்றில் குதிரைகளை விரட்டி வேகமாகச் செலுத்தத் தொடங்கினான். மணியையும் விடாமல் அசைத்தான். முன்னாலிருந்த வண்டிக்காரன் வழியையோ, வைக்கோல் போர் இருக்கும் இடத்தையோ கண்டுபிடிக்க வண்டியை நிறுத்தும் போதெல்லாம் இரண்டாவது வண்டியிலிருந்து ஒரு குரல் வெளிப்படும்.

'டேய் இக்னாஷ்கா, நீ இடது பக்கமே போகிறாய். நீ வலது பக்கம் காற்றை எதிர் நோக்கிப் போ' என்றோ அல்லது 'நீ என்னடா சுற்றிச் சுற்றி வளைய வருகிறாய். பனி குவிந்திருப்பதைப் பார், அதைப் பின்பற்றிப் போ. எல்லாம் சரியாகிவிடும்' என்பான். சில சமயங்களில் 'வலது பக்கமாகப் போ. வலது பக்கம் தெரிகிறதா? ஏதோ கறுப்பாகத் தெரிகிறது. அது மைல் கல்லாகத் தான் இருக்கவேண்டும்' என்று கூறுவான். இல்லாவிட்டால் 'நீ ஏண்டா வழியை விட்டு அலைகிறாய். வலது பக்கத்துக் குதிரையைத் தொந்தரவு செய்யாதே. அதுவே சரியான பாதையில் செல்லும்' என்று சொல்லுவான்.

ஆலோசனை கூறுபவன் தன் குதிரைகளை அதன் போக்கிலும் விடவில்லை. அவனும் வண்டியை நிறுத்திக் கீழே இறங்கி வழியைக் கண்டுபிடிக்கவில்லை. தலையைக் கூட வெளியில் காட்டவில்லை. வழிகாட்டி போன்று முன்னால் வண்டியைச் செலுத்தும் இக்னாஷ்கா ஆலோசனை கூறியவனுக்குப்பதில் சொல்லத் தொடங்கினான்: 'எனக்கு

வழி தெரியா விட்டால் நான் முன்னால் வண்டியை ஓட்ட வந்திருக்க மாட்டேன்' என்றான்.

அதற்கு ஆலோசனை கூறுபவன் 'நான் இப்பொழுது செய்தியை எடுத்துச் சென்றால் எல்லோருக்கும் முன்னால் வழிகாட்டியாக இருந்திருப்பேன். சரியான பாதையிலும் இட்டுச் செல்வேன். ஆனால் நம்முடைய குதிரைகள் பனிப்புயலில், வழிகாட்டிச் செல்லத் தகுதியற்றவை. அப்படிப்பட்ட குதிரைகளும் இல்லை' என்றான்.

'என்னைப் பற்றிக் கவலைப் படாதே' என்று இக்னுஷ்கா கூறி, சீழ்க்கை அடித்தான். மகிழ்ச்சியுடன் குதிரைகளைச் செலுத்தினான்.

இரண்டாவது வண்டியிலிருந்த மற்றவன் இக்ருஷ்சாவுடன் பேசவே இல்லை. அவர்கள் சம்பாஷணையிலும் பங்கெடுத்துக் கொள்ளவில்லை. அவன் சுங்கான் பிடித்துக் கொண்டிருந்ததிலிருந்து தூங்கவில்லை என்பதும் தெரிந்தது. வண்டி நின்ற சமயமெல்லாம் அவன் குரல் கேட்டது. அவன் ஏதோ கதை சொல்லிக் கொண்டிருந்தான். ஆறாவது ஏழாவது முறை இக்னுஷ்கா வண்டியை நிறுத்தியதும் அவன் சலிப்படைந்தான். அவனது உல்லாசப் பிரயாணத்திற்குத் தடை ஏற்பட்டது போலக் கருதினான். 'ஏன் வண்டியை நிறுத்தி விட்டாய்? பார். அவன் வழியைப் பார்க்கப் போகிறான், பனிப்புயயில் வரப்போகிறது என்று அவனுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியும் முன்னால் சென்ற அவனுக்கு வழி தெரியவில்லை. குதிரைகளை அதன் இஷ்டத்திற்கு விடு. பனியில் விறைத்துப் போகாமல் அவை எங்காவது நம்மை அழைத்துச் செல்லும் ......போ. நான் சொன்னது போல் செய்' என்றான்.

'சென்ற வருஷம் ஒரு குதிரை பனியில் விறைத்து இறக்க வில்லையா?' என்றான் எங்கள் வண்டிக்காரன்.

மூன்றாவது வண்டிக்காரன் அதுவரை தூங்கிக் கொண்டே யிருந்தான். அவன் கண் விழிக்கவே இல்லை.

ஒரு சமயம் வண்டி நிறுத்தப் பட்டதும் ஆலோசனை கூறுபவன் 'பிலிப் டேய், பிலிப்' என்று கத்தினான். பதில் கிடைக்காததைக் கண்டு ஒரு வேளை பனியில் விறைத்துப் போய் விட்டானோ என்னவோ! இக்னுஷ்கா போய்ப் பார்' என்றான்.

இக்னுஷ்காவுக்கு எல்லாவற்றையும் கவனிக்க நேர

மிருந்தது. அவன் மூன்ருவது வண்டிக்கு வந்தான். தூங்கிக் கொண்டிருப்பவனை அசைத்து எழுப்பினன். 'அரை புட்டி சாராயம் என்ன செய்கிறது, பார்! விறைத்துப் போவதைப் பற்றிப் பேசுகிருன்' என்ருன்.

தூங்கிக் கொண்டிருந்தவன் ஏதோ முறு முறுத்தான். தூக்கத்தைக் கலைத்ததற்காக வசை பாடினன்.

'அவன் உயிருடன்தான் இருக்கிருன்' என்ருன இக்னுஷ்கா. பிறகு முன்னுல் ஓடி வண்டியில் ஏறிக் கொண்டான்

எங்கள் வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. எங்கள் வண்டிக்காரன் அடிக்கடி குதிரைகளின் வால் பக்கம் சாட்டையால் அடித்துக் கொண்டே யிருந்தான். குதிரைகளும் வேகமாக ஓடிக் கொண்டிருந்தன.

நள்ளிரவு இருக்கலாம் என்று நினைக்கிறேன். அச்சமயம் குதிரைகளைத் தொடர்ந்து சென்ற கிழவனும், வாஸிலியும் திரும்பி வந்தார்கள். ஓடிப்போன குதிரைகளை அவர்கள் பிடித்து விட்டார்கள். கண்களை மறைக்கும் இந்தக் கடும்பனியில் அவர்கள் எப்படித்தான் குதிரைகளைத் தொடர்ந்து சென்று பிடித்தார்கள் என்பது எனக்கு மர்மமாகவே இருந்தது கிழவன் கையையும் காலையும் ஆட்டிக் கொண்டு சவாரி செய்து வந்தான். அவன் இரண்டு குதிரைகளைப் பற்றிக் கொண்டிருந்தான். எங்களை நெருங்கியதும் மீண்டும் என் வண்டிக்காரனை வசைபாடத் தொடங்கினன்.

'பார். கண் தெரியாத பொட்டையை' என்ருன் கிழவன்.

'மிட்ரிச் மாமா, உயிருடன் இருக்கிருயா? வா. எங்களுடன் வந்து உட்காரு' என்ருன் கதை சொல்லிக் கொண்டிருந்தவன்.

ஆனுல் அவனுக்குக் கிழவன் பதில் சொல்லவில்லை. என் வண்டிக்காரனை வாயில் வந்தபடி பேசிக் கொண்டிருந்தான். அவன் மனம் திருப்தியடையும் வரை என் வண்டிக்காரனை வசை பாடிய பிறகு இரண்டாவது வண்டியை நோக்கிக் குதிரையைச் செலுத்தினன்.

'குதிரைகளைப் பிடித்து விட்டாயா?' என்று யாரோ கேட்டான்.

'பின் என்னதான் நினைத்துக்கொண் டிருக்கிறாய், விட்டுவிடுவேனா?' என்றான் கிழவன். பிறகு குதிரையைச் சற்று வேகமாகச் செலுத்தினான். இரண்டாவது வண்டியை நெருங்கியதும் சட்டென்று குதிரையிலிருந்து குதித்தான். உடன் வண்டியில் ஏறிக்கொண்டான். வாஸ்லி சந்தடி செய்யாமல் முன் வண்டிக்குச் சென்றான். இக்னாஷ்காவின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

'கிழவன் எப்படிப் பேசுகிறான் பாருங்கள். கடவுளே...' என்று முணு முணுத்தான் என் வண்டிக்காரன்.

வெள்ளை வெளேரென்று பரந்துகிடந்த பனிப்படலத்தில் நாங்கள் வெகு நேரம்வரை எங்கும் நிற்காமல் பிரயாணம் செய்து கொண்டிருந்தோம். பனிப்புயலும் தொடர்ந்து அடித்துக் கொண்டிருந்தது. நான் கண்களைத் திறந்தபோதெல்லாம் பனியால் மூடப்பட்ட தொப்பியும் வண்டிக்காரனின் முதுகுப்புறமும்என்முன் ஆடிக்கொண்டு இருப்பதைக் கண்டேன். வண்டிக் குதிரைகளும் அதே தூரத்தில் ஓடிக் கொண்டிருந்தன. கீழே பார்த்த சமயம் முன்போலவே பனியைக் கிழித்துக் கொண்டு வண்டியின் வளைவு போவது தெரியும். எல்லாவற்றிற்கும் முன்னால் போகும் வண்டி எப்பொழுதும் போல எல்லாவற்றையும் பின்னால் விட்டுச்சென்று கொண்டிருந்தது. என் கண்களுக்குப் புதிதாக ஏதும் தென்படவில்லை. மைல் கல்லோ, வைக்கோல் போரோ வேறு ஏதுவுமோ காணப்படவில்லை. எல்லாம் வெண்மையாகவும் மேடும், பள்ளமுமாகவே இருந்தது.

வானம் வெகுதூரத்திலிருப்பது போலத் தோன்றியது திடீரென்று கைக்கு எட்டும்படியாக் காணப்பட்டது. திடீரென்று வலதுபுறம் வெண்மையான சுவர் போன்று மேலே எழுந்தது. அது எங்கள் வண்டியைத் தொடர்ந்து ஓடிவந்தது. திடீரென்று அது மறையும்; அதே போலே சட்டென்று தோன்றும்.

நான் மேலே பார்த்த சமயம் மங்கலாக நக்ஷத்திரங்கள் தென்பட்டன. ஆனால் என் பார்வைக்கு நக்ஷத்திரங்கள் மேலும் மேலும் உயரத்தில் போய்க் கொண்டே யிருந்தன.

கடைசியாகப் பனித்திரைதான் எனக்குத் தெரியலாயிற்று. என் கண்களிலும் முகத்திலும் மேல் அங்கியின்மீதும் பனி பெய்து கொண்டிருந்தது. ஆகாயம் எங்கும் ஒரேவித மான வெளிச்சத்துடனும், வெண்மையாகவும், சலிப்புண் டாகும் வண்ணமாகவும் இருந்தது.

காற்று திசைமாறத் தொடங்கிற்று. இச்சமயம் முகத் திற்கு நேராக வீசிற்று. முகத்தில் பனியும் வேகமாகப் பெய்து கண்களை மூடிற்று. மேல் அங்கியின் கழுத்துப் பக்கத்தில் எங்கோ சிறிது இடைவெளி யிருந்திருக்க வேண்டும் அதன் வழியாகக் குளிர்ந்த காற்று உடலில் பாய்ந்து சென்றது. குதிரைகளின் குளம்புச் சப்தமும், மணிகளின் ஓசையும் கேட்டுக் கொண்டே யிருந்தன. எப் பொழுதாவது ஒரு முறை உறைந்த பனியில் வண்டி செல்லும்போது இக்னுஷ்கா சந்தோஷமாகச் சீழ்க்கை அடிப்பான். அத்துடன் வண்டியின் மணி ஓசையும் சேர்ந்து திறந்த வெளியின் பயங்கரத்தைப் போக்கும்.

என்னுடைய ஒரு கால் பனியில் விறைத்துப்போய் விட்டதாகத் தோன்றிற்று. நான் என் காலை நன்குக மூடிக்கொள்ளக் குனிந்தபோது பனி நிறைந்திருந்த தொப்பி கீழே சரிந்து விழுந்துவிட்டது. உடன் என் உடலில் நடுக்கம் தோன்றலாயிற்று. ஆனல் கம்பள மேலங்கி அணிந்திருந்ததால் என் உடல் கத கதப்பாகவே இருந்தது. தூக்கமும் கண்களைக் கவ்விக்கொண்டு வந்தது.

## 6

பழைய சம்பவங்களும்; கண்காட்சிகளும் ஒன்றை ஒன்று அமுக்கிக் கொண்டு என் கற்பனையில் தோன்ற லாயின.

'ஆலோசனை கூறுபவன் இரண்டாவது வண்டியில் தான் இருக்கிறன். அவன் எப்படிப் பட்டவனக இருப் பான்?' என்று எண்ணினேன். சிகப்பு முடியும், குள்ள மாகவும் வேலைக்காரன் தியாடார் பிலிப் போல இருக் கலாம்' என்று கருதினேன். உடன் என் கண்முன் எங்க ளுடைய பெரிய வீடும், மாடிப்படிகளும் தோன்றின வீட்டு வேலைக்காரர்கள் ஐவர் பியானே வாத்தியத்தைத்

தூக்கிக்கொண்டு வருகிறார்கள். வேலைக்காரன் தியாடார் பிலிப் சட்டையின் கைகளை மேலே மடக்கிவிட்டு பியானோவின் ஒரு பக்கத்தைத் தூக்கிக் கொண்டிருந்தான். அங்கிருந்தவர்களின்மீது இடித்துத் தள்ளினான்.

'உன் பக்கமாகத் தூக்கு. முன்னால் இருப்பவனைத் தான் சொல்கிறேன். அடிபாகத்தை மேலே தூக்கு. கதவைத்திற, அந்த வழிதான்' என்றான் பிலிப்.

'நாங்கள் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்கிறோம் பிலிப்' என்று தோட்டக்காரன் ஆத்திரத்துடன் சொன்னான். அவனும் பியானோவின் ஒரு பக்கத்தை தாங்கிக்கொண் டிருந்தான்.

ஆனால் தியாடார் பிலிப் பேசாமல் இருக்கவில்லை.

'இதன் அர்த்தம் என்ன? அவன் மிகவும் உபயோகமானவன் என்று எண்ணுகிறானா? இல்லை. செய்யும் வேலைக்கு அவன் ஏதாவது சொல்வது அவசியம் என்று நினைக்கிறானா? இல்லை கடவுள் அவனுக்கு அளித்துள்ள தன்னம்பிக்கைக்காக மகிழ்ந்து அதை வெளிக்காட்டக் கருதுகிறானா? அதுதான் இருக்கலாம்' என்று நான் எண்ணினேன்.

அதன் பிறகு எப்படியோ என் கண் முன் ஒரு ஏரி தென்பட்டது. அதில் வீட்டு வேலைக்காரர்கள் முழுங்கால் அளவு தண்ணீரில் நின்று வலையை வீசிக் கொண்டிருந்தார்கள். தியாடார் பிலிப் அங்கும் காணப்பட்டான். அவன் கையில் பானையுடன் ஏரிக் கரையின்மீது இங்கு மங்கும் ஓடிக் கொண்டிருந்தான். அடிக்கடி பானையில் தண்ணீரை எடுத்துக்கொண்டு சென்று அதைக் காலி செய்து திரும்பினான். ஆனால் அப்பொழுது ஜுலை மாதத்தின் பகல் வேளை என்று நினைக்கிறேன். நான் கடும் வெயிலில் புல் தரைமீது நடந்து கொண்டிருந்தேன். நான் வாலிபனாகவே இருந்தேன். எனக்கு ஏதோ ஒரு குறை இருப்பதாகவும் அதைப் பூர்த்தி செய்யவேண்டும் போலவும் இருந்தது. நான் எனக்குப் பிடித்தமான இடத்திற்கு ஏரிக்கரை வழியாகப் போனேன்.

பெரிய சாலைக்குப் போகும் வழியில் சிவப்பு மரத்தினடியில் படுத்துத் தூங்க எண்ணினேன். இந்த எண்ணம் ஏற்பட்டதும் நான் மரம், தரை, நீல நிறக்கண்ணாடி போன்ற ஏரி ஆகியவற்றைப் பார்த்

தேன். அவை எனக்கு திருப்தியை உண்டு பண்ணுவதாகவும் மனச் சோர்வை அகற்றுவதாகவும் காணப் பட்டன. என்னைச் சூழ்ந்திருந்த அனைத்தும் நேர்த்தியாக இருந்தன. அழகு என்னுள்ளத்தைப் பலமாகக் கவர்ந்தது. எனக்கு எல்லாம் நல்லவையாகக் காணப்பட்டன. ஆனால் ஒன்று மாத்திரம் எனக்கு வெறுப்பை உண்டுபண்ணிற்று. என்னை அங்கு யாரும் பாராட்டாததுதான் எனக்கு வேதனையாக இருந்தது.

ஒரே புழுக்கமாக இருந்தது. நான் தூங்க முயற்சித் தேன். ஆனால் ஈக்கள் என்னைத் தொந்தரவு செய்தன. என்னை எந்த விதத்திலும் அவை விடவில்லை. அவை என் முகத்திற்கு நேராகக் கூட்டமாகக் கூடின. கற்களைப் போல அவை என் உடல்மீது பாய்ந்து விழுந்தன. ஒரு வண்டு எனக்கு அருகாமையில் சூரிய ஒளியில் ரீங்கார மிட்டுக்கொண்டு பறந்தது. மஞ்சள் நிற பட்டாம்பூச்சி சூரிய வெப்பம் தாங்க முடியாமல் புல்லில் தாவித் தாவிச் சென்றது

நான் கண்களைத் திறந்து மேலே பார்த்தேன். கண் கூசிற்று. இலைகளின் இடைவழியே சூரியகிரணம் பாய்ந்து என் கண்களைத் தாக்கிற்று நான் கை குட்டையால் கண் களை மூடிக்கொண்டேன். ஈக்கள் என் கைகளில் மொய்க் கத் தொடங்கின. கைகளில் வியர்வை முத்துப்போல் தோன்றின. மரங்களின் கிளைகளில் குருவிகள் உட் கார்ந்து ஆரவாரம் செய்து கொண்டிருந்தன. ஒரு குருவி எனக்கு அருகாமையில் வந்து உட்கார முயற்சித்தது. சிறிது நேரம் தரையில் தத்திக் குதித்த பிறகு அது மீண் டும் மரத்திற்குச் சென்று கிளையில் உட்கார்ந்து கொண்டது. மற்றொரு குருவியும் கீழே வந்து ஈக்களை விரட்டி விட்டு மேலே சென்றது.

ஏரியின் பக்கத்திலிருந்து துணிகளைத் துவைக்கும் சப்தம் கேட்டது. துணிகளை மரக்கட்டையால் அடித் துக் கொண்டிருந்தார்கள். அந்த சப்தம் எதிரொலித்தது. அத்துடன் ஏரியில் குளிப்பவர்களின் பேச்சுக் குரலும் சிரிப்பின் ஒலியும் சேர்ந்து என் காதில் தாக்கிற்று. பலமான காற்று மரத்தின் கிளைகளை அசைத்தது. மரத்திலிருந்து பூக்களும், உலர்ந்த இலைகளும் கீழே உதிர்ந்தன. குளிர்ந்த காற்று முகத்தில் வீசிற்று. காற்றில் முகத்தை

மூடியிருந்த கைக் குட்டை சிறிது விலகிற்று. அந்த வழியாக ஒரு ஈ புகுந்து என் வாயருகில் வந்தது. உலர்ந்த சுள்ளிகள் என் தலைப்புறம் குத்திக் கொண்டிருந்தன. நான் இனி படுத்திருக்க இயலாது என்று தோன்றிற்று. நான் போய்க் குளிக்க எண்ணினேன். ஆனால் அதே சமயம் பலர் வேகமாக ஓடிவரும் காலடிச் சப்தமும், பெண்களின் பரிதாபமான அழுகுரலும் கேட்டன.

'கடவுளே! எப்படி அது நடக்க முடியும்? ஒரு ஆள் கூட இங்கு இல்லையே!'

'என்ன அது? என்ன அது?' என்று நான் வெயிலில் ஓடிக்கொண்டிருந்த வேலைக்கார மாதைக் கேட்டேன். அவள் நாலாபுறமும் பார்த்துவிட்டுக் கையை ஆட்டிக் கொண்டே ஓடினாள். அதே சமயம் எழுபது வயதான மட்ரினா என்பவள் ஏரிக் கரையை நோக்கி விரைந்து கொண்டிருந்தாள். அவள் தலையில் கை குட்டையைக் கட்டிக் கொண்டிருந்தாள். இரண்டு பெண்கள் கை கோர்த்துக்கொண்டு ஓடினார்கள். பத்து வயதுப் பையன் ஒருவன் அவனுடைய தகப்பனாரின் மேலங்கியை அணிந்து கொண்டிருந்தான். அவன் அப் பெண்களில் ஒருத்தியின் கையைப் பற்றிக்கொண்டு ஓடினான்.

'என்ன நடந்தது?' என்று அவர்களைக் கேட்டேன்

'ஒரு குடியானவன் மூழ்கி விட்டான்'

'எங்கே?'

'ஏரியில்'

'யார் அவன்? நம்மைச் சேர்ந்தவனா?'

'இல்லை யாரோ புதிதாக வந்தவன்.'

வண்டிக்காரன் ஐவான் தனது கனமான பூட்ஸால் புதிதாக முளைத்திருந்த புல்லை மிதித்துக்கொண்டு வேகமாகப் போனான். ஜாகப் என்ற பருமனான குமாஸ்தா மேல் மூச்சு வாங்க ஏரியை நோக்கி விரைந்தான். அவனுக்குப் பின்னால் நானும் சென்றேன்.

''இதோ பார். ஏரியில் குதித்து குடியானவனைக் காப்பாற்று. அனைவரும் உன்னைப் பாராட்டுவார்கள்'' என்று என் மனம் சொல்லிற்று.

'அவன் எங்கே விழுந்தான்? எங்கே மூழ்கினான்?' என்று நான் கரையிலிருந்தவர்களைக் கேட்டேன்.

'எதிர் கரைக்கு அருகாமையில் ஆழமான இடத்தில்

அவன் மூழ்கி யிருக்கிறான்' என்று வெள்ளை வெளுக்கும் பெண்மணி சொன்னாள். அவள் கையில் துணி துவைக்கும் கட்டை யிருந்தது. 'அவன் தண்ணீரில் மூழ்கியதை நான் பார்த்தேன். அவன் தண்ணீரின் மேலே வருவான்; கீழே போவான். ஒவ்வொரு முறையும் அவன் மேலே வந்ததும் "நான் மூழ்கிக்கொண் டிருக்கிறேன், யாராவது உதவி செய்ய வாருங்கள்" என்று கத்துவான். கடைசியாக அவன் இம்மாதிரி கத்திவிட்டு மூழ்கினான். உடன் மேலே கொப்பளங்கள் தான் வந்தன. அவன் மீண்டும் மேலே வரவில்லை. இதைப் பார்த்ததும் நான் "ஒருவன் தண்ணீரில் மூழ்கிவிட்டான்" என்று கத்தினேன்!' என்றாள். பிறகு அவள் துணி வெளுக்கும் கட்டையைத் தூக்கிக் கொண்டு சென்றாள்.

'கடவுளே, என்ன அநியாயம்' என்றான் ஜாகப். அவனது குரலில் சோகம் தொனித்தது. என்ன தொந்தரவு ஏற்படப்போகிறது; நாம் நது தப்ப மிகவும் கஷ்டப்படவேண்டும்' என்றான்.

ஒரு குடியானவன் கையில் அரிவாளுடன் பெண்களை விலக்கிக்கொண்டு முன்னால் வந்தான். அரிவாளை மரத் தின்மீது வைத்துவிட்டு அவன் காலிலிருந்த பூட்ஸைக் கழட்டத் தொடங்கினான்.

'எங்கே? அவன் எங்கே மூழ்கினான்?' என்று நான் கேட்டேன். அவன் மூழ்கிய யிடத்திற்குச் சென்று செய்ய முடியாத ஒன்றைச் செய்யக் கருதினேன்.

ஏரியின் வழவழப்பான பகுதியை அவர்கள் காட்டினார்கள். அங்கு அடிக்கடி அலை மோதிக்கொண் டிருந்தது. குடியானவன் எப்படி அங்கு வீழ்ந்தான் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. தண்ணீர் பார்க்க நேர்த்தியாக இருந்தது. சிறிதும் அசையாமல் உச்சிவேளை சூரிய ஒளியில் பொன் மயமாகக் காணப்பட்டது. 'என்னால் ஒன்றும் செய்ய முடியாது. யாரையும் நான் திகைக்க வைக்க இயலாது. மேலும் எனக்கு அதிகமாக நீந்தவும் தெரியாது அதே சமயம் குடியானவன் தண்ணீரில் குதிக்க உடைகளைக் கழட்டிக் கொண்டிருக்கிறான்' என்று எண்ணினேன்.

அனைவரும் உடைகளைக் கழட்டும் குடியானவனையே பார்த்துக்கொண் டிருந்தார்கள். அனைவரும் அவனையே

நம்பினார்கள். ஆனால் உடைகளைக் கழட்டி விட்டு ஏரியின் அருகில் சென்றவன் மறு கணமே திரும்பிவிட்டான். உடன் உடைகளைப் போட்டுக்கொண்டான். அவனால் தண்ணீரில் குதிக்க இயலாது என்றான்.

ஜனங்கள் ஏரியை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தார்கள். வரவர ஜனக்கூட்டம் அதிகரித்தது. பெண்கள் ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு அழுதார்கள். ஆனால் தண்ணீரில் மூழ்கியவனைக் காப்பாற்றவோ, அவனைக் கரையில் எடுத்துப்போடவோ ஒருவரும் முயற்சிக்கவில்லை. ஆலோசனை கூற வந்தவர்கள் பெருமூச்சுவிட்டார்கள். அவர்கள் முகங்களில் அச்சமும் வருத்தமும் குடிகொண்டிருந்தன. வெகு நேரமாக அங்கிருந்தவர்கள் நின்று கால் வலித்து உட்கார்ந்துகொண்டார்கள். சிலர் அங்கிருந்தும் போனார்கள். வயதான மட்ரினா தன் மகளிடம் வீட்டுக் கதவைச் சாத்திப் பூட்டினாயா என்று கேட்டாள். தகப்பனுருடைய மேலங்கியை அணிந்திருந்த பையன் சிறு கற்களை எடுத்து ஏரியில் போட்டுக்கொண்டிருந்தான்

தியாடார் பிலிபின் நாய் டரஸோகா குரைத்துக் கொண்டே மலை உச்சியிலிருந்து ஓடி வந்தது. அதைத் தொடர்ந்து கூவிக்கொண்டே தியாடார் பிலிப் ஓடி வந்தான்

'ஏன் நின்றுகொண்டிருக்கிறீர்கள்? ஒருவன் தண்ணீரில் மூழ்கியிருக்கிறான். இவர்கள் மௌனமாக நின்று கொண்டிருக்கிறார்கள்......ஒரு கயிறு எடுத்து வாருங்கள்' என்றான் தியாடார் பிலிப்.

எல்லோரும் அவனை பயத்துடனும் நம்பிக்கையுடனும் பார்த்தார்கள் அவன் ஒரு வேலைக்காரன் தோளில் சாய்ந்த வண்ணம் ஒரு பூட்ஸைக் கழட்டினான் மற்றதையும் கழட்டிக்கொண்டிருந்தான்.

'அதோ அங்கே! ஜனங்கள் நின்றுகொண்டிருக்கிறார்களே அதற்கு வலப்புறம். தியாடார் பிலிப்' என்று அங்கிருந்தவர்களில் யாரோ ஒருவன் சொன்னான்.

'எனக்குத் தெரியும்' என்று பிலிப் தன் புருவத்தை நெரித்தான். பெண்களின் முகத்தில் வெட்கத்தின் சாயை படர்ந்தது. தியாடார் பிலிப் உடைகளைக் கழட்டினான். கழுத்திலிருந்த சிலுவையைக் கழட்டி தோட்டக்காரனிடம் கொடுத்தான். பிறகு புல் தரைமீது நடந்து

ஏரியை அடைந்தான்.

தியாடார் பிலிபின் நாய் எஜமானனைப் பின் பற்றிச் சிறிது தூரம் சென்றது. நுனிப்புல்லைச் சிறிது கடித்தது. எஜமானனைப் பின்தொடர்ந்து அதுவும் ஏரி யில் குதித்தது.

கணநேரம் வரை ஏரியில் ஒன்றுமே தென்படவில்லை. பிறகு பிலிப் கைகளை மாற்றுப் போட்டுக் கொண்டு முன் ளுேக்கி நீந்திஞன். அடிக்கொரு முறை வாயினல் தண் ணீரைக் கொப்பளித்தான். அவனுடைய நாய் சிறிது தண்ணீரைக் குடித்துவிட்டது. அதனுல் அது எஜமான னுடன் நீந்த முடியாமல் கரைக்கு வந்துவிட்டது. கரை ஏறியதும் உடலைக்குலுக்கி தண்ணீரை அப்புறப்படுத் திற்று. பிறகு புல்லில் போய்ப் படுத்துப் புரண்டது.

பிலிப் எதிர்க்கரையை அடைந்த சமயம் இரண்டு வண்டிக்காரர்கள் கையில் மீன் வலைகளை எடுத்து வந்தார் கள். பிலிப் பல முறை தண்ணீரில் முழ்கி மேலே வந் தான். அவன் மூழ்கி வெளியே வந்ததும் வாயிலிருந்து தண்ணீரைக் கொப்பளிப்பான். தலையை அசைத்துக் கலைந்த சிகையைச் சரி செய்து கொள்வான்.

கடைசியாக தியாடார் பிலிப் ஒன்றும் செய்ய முடி யாமல் கரை ஏறிஞன். வண்டிக்காரர்களிடம் வலையை வீசும்படி உத்திரவிட்டான். வலை வீசப்பட்டது. ஆனுல் அதில் சத்தையும் குப்பையும் தவிர வேறு ஒன்றும் வர வில்லை. கடைசியாக வலையை மிகவும் தாழ்வாக வீசிஞர்கள்.

தியாடார் பிலிப் கொடுக்கும் கட்டளைகள்தான் கேட்டது. வலைக்கு வலதுபுறம் கட்டியிருந்த கயிறு உள்ளே போய்க் கொண்டே யிருந்தது.

'இப்பொழுது வலையை இழுங்கள். பலமாக இழுங்கள்' என்று கத்திஞன் தியாடார் பிலிப்.

வலை மேலே தெரியலாயிற்று.

'வலையில் ஏதோ சிக்கிக் கொண்டிருக்கிறது. அது பலமாகக் கீழே இழுக்கிறது' என்ருன் ஒருவன்.

வலையில் இரண்டு மூன்று மீன்கள் உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்தன. வலையின் மற்ருெரு கோடி யில் வெண்மையான ஒரு பொருள் காணப்பட்டது. கூட் டத்தில் மரணத்தின் அமைதி நிலவியது.

முகத்திலும் பீதி தாண்டவமாடிற்று.

'பலமாகக் கரைக்கு இழுங்கள்' என்ருன் தியாடார் பிலிப்.

நீரில் மூழ்கியவனுடைய சடலம் வெளியே இழுத்துப் போடப்பட்டது.

என்னுடைய வயதான அத்தை பட்டு உடை அணிந்து வந்திருப்பதைக் கண்டேன். நல்ல மனதுடைய அவள் கண்கள் நீரை சுரக்கக் காத்துக் கொண்டிருந்தன. அவளுடைய எளிமையான தோற்றம் அப்பொழுது எனக்கு பயங்கரமாக இருந்தது. அவளுடைய ஏமாற்ற மடைந்த முகத்திற்கு ஆடை அலங்காரம் பயனற்றதாகக் காணப்பட்டது. அவளுக்கு என் மீதிருந்த பற்றுதலால் அப்பொழுது சொன்னது எனக்கு மரணவேதனையாக இருந்தது. 'வாவா, எவ்வளவு பயங்கரமாக இருக்கிறது? நீ குளித்து நீந்த இங்கே வந்து விடுகிருய்' என்ருள்.

சூரியனின் கிரணம்பட்டு தரை ஒரே சூடாக இருந்தது. வெறுங்காலுடன் தரையில் நடந்தால் கொப்பளித்துவிடும் போல இருந்தது. ஏரி பளிங்கு போல் காணப்பட்டது. வலையில் அகப்பட்ட மீன்கள் தரையில் போடப்பட்டதும் அவைத்துள்ளிக் குதித்தன உயிருக்காக மன்ருடின. தலைக்குமேலே தரையிலிருந்த மீன்களைக் கவர்ந்து செல்ல பருந்துகள் வட்டமிட்டன. ஆகாயத்தில் வெண்மையான மேகம் இருந்தது. இவற்றுடன் வலையில் ஏரியிலிருந்து எவ்வளவு சேர்வெளியே எடுத்துப் போடப்பட்டது என்பது எனக்கு நன்ருக நினைவில் இருந்தது. மீண்டும் ஏரிக் கரையில் வண்டுகளின் ரீங்காரம் என் செவியைத் தாக்கிற்று.

அந்த வண்டுகளின் ரீங்காரத்துடன் மற்ருெரு சப்தமும் கேட்டது. அது எனக்கு வேதனையை உண்டு பண்ணிற்று. அந்த வேதனை தரும் மணிச்சப்தத்தை தியாடார் பிலிப்பால் தடுத்து நிறுத்த இயலாது என்பது எனக்குத் தெரியும். வண்டுகளின் ரீங்காரத்தைப் போன்று ஒன்று என்னைச் சித்திரவதை செய்தது. என்கால்களை விறைக்கச் செய்தது. நான் அப்படியே அசந்து தூங்கிவிட்டேன்.

நான் கண் விழித்த சமயம் வண்டிவேகமாகப் போய்க் கொண்டிருந்தது. அதே சமயம் இருவர் பேசும் குரல் கே...

'இக்னுஷ்கா, இக்னுஷ்கா, நான் சொல்வதைக் கேள். நீ எப்படியும் போக வேண்டியிருக்கிறது, என்னுடைய குதிரைகள் களைத்து விட்டன. என் வண்டியிலிருக்கும் பிரயாணியை உன் வண்டியில் ஏற்றிக் கொள்' என்ருன் என் வண்டிக்காரன்.

இக்னுஷ்காவின் குரல் எனக்கு மிகவும் அருகாமையில் கேட்டது. 'பிரயாணிக்கு நான் உத்திரவாதம் அளிக்க என்ன இருக்கிறது? எனக்கு ஒரு புட்டி சாராயம் வாங்கித் தருகிருயா?' என்று கேட்டான் இக்னுஷ்கா.

'அரைபுட்டி சாராயம் தருகிறேன்.'

'அரைபுட்டி சாராயத்திற்காகக் குதிரைகளைக் களைக் கச் செய்வதா? சரி. நல்லது'

நான்கண் களைத்திறந்தேன். பனி என்னைக் கொன்று விடும்போல் பெய்து கொண்டிருந்தது. என் வண்டி இக்னுஷ்காவின் வண்டியை முந்திக் கொண்டது. மற்ற வண்டிக்காரர்கள் ஒரு புட்டி சாராயத்திற்குக் குறைவாக ஒப்புக் கொள்ளவேண்டாம் என்று இக்னுஷ்காவிடம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஆனுல் இக்னுஷ்கா அதைக் கேட்கவில்லை. அவன் சட்டென்று வண்டியை நிறுத்தினுன்.

'சாமான்களை வண்டியில் ஏற்றி பிரயாணியையும் வரச்சொல்லு. உன்னிஷ்டப்படியே இருக்கட்டும். நாளை நாங்கள் திரும்பி வந்ததும் நீ அரைபுட்டி சாராயம் வாங்கித் தரவேண்டும். சாமான்கள் அதிகமாக இருக்கின்றனவா' என்று கேட்டான், இக்னுஷ்கா.

என் வண்டிக்காரன் வண்டியிலிருந்து துள்ளிக்குதித்தான். அவன் அளவுக்கு மீறி சுறு சுறுப்புக் காட்டினுன். என் முன் வந்து குனிந்து வணங்கி இக்னுஷ்காவின் வண்டிக்குச் சென்று ஏறிக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டான். எனக்கு அப்படிச் செய்ய விருப்பம்தான். ஆனுல் கடவுளிடத்தில் பய பக்தியுள்ள வண்டிக்காரன் நான் இக்னுஷ்காவின் வண்டியில் ஏறிக்கொள்ள சம்மதித்ததைக் கண்டு தன் நன்றியைத் தெரிவித்தான். தனக்கேற்பட்ட சந்தோஷத்தை யாரிடமாவது காட்டக் கருதினுன். அவன் குனிந்து வணங்கி எனக்கு, அலிஷ்கா, இக்னுஷ்கா ஆகியோருக்கும் தன் நன்றியைத் தெரிவித்தான்.

'கடவுள் உங்கள் பங்கில் இருப்பார், இது எப்படி

யிருக்கிறது...கடவுளே! பாதி இரவு வரை நாம் எங்கே போகிறோம் என்பது தெரியாமலே சுற்றி அலைந்தோம். இந்த வண்டிக்காரன் உங்களைப் பத்திரமாகக் கொண்டு சேர்ப்பான். என் குதிரைகள் களைப்படைந்து விட்டன' என்றான் என் வண்டிக்காரன். அவன் உடன் என் சாமான்களை வேகமாக இக்னஷ்காவின் வண்டிக்கு மாற்றினான்.

என் சாமான்கள் இக்னஷ்காவின் வண்டிக்கு மாற்றப் பட்டதும் நான் காற்றிலே மிதந்து அங்கு சென்றேன். நான் ஒரு வண்டியிலிருந்து மற்றொரு வண்டிக்குச் சென்றது அப்படித்தான் இருந்தது. இக்னஷ்காவின் வண்டியில் இருவர் உட்காரும் வகையில் மறைப்பு போடப் பட்டிருந்தது. அப்படியும் அதில் பனி கனமாகப் பெய் திருந்தது. ஆனால் மறைப்புக்குப் பின்னால் நன்றாக இருந்தது. கிழவன் கால்களை மடக்கிக் கொண்டு படுத் திருந்தான். கதை சொல்பவன் கதை சொல்லிக் கொண் டிருந்தான்.

'ஹூம். பிறகு சேனாதிபதி இளவரசியை மணக்க அரசனின் கட்டளைப்படி சிறைச்சாலைக்கு வந்தான். இள வரசியிடம் "உடன் மணந்து கொள்ள வேண்டும்" என்று சேனாதிபதி கூறுகிறான். "சேனாபதி உங்களை நான் காத லிக்கவும் முடியாது. கலியாணமும் செய்து கொள்ள மாட்டேன். நீங்கள் என்னுடைய காதலன் அல்ல. என் காதலன் இளவரசன்தான்." அதன் பிறகு...என்று சொன் னான். என்னைக் கண்டதும் கணநேரம் கதை சொல்வதை நிறுத்தினான். சுங்கானில் புகையிலையை நிரப்பிக் கொண் டான்.

'நீங்கள் கதை கேட்க வந்திருக்கிறீர்களா?' என்று என்னை ஆலோசனை கூறுபவன் கேட்டான்.

'ஆமாம். நீங்கள் இங்கு சந்தோஷமாக இருக்கிறீர்கள் அல்லவா?' என்றேன் நான்.

"ஆமாம். கதை சொல்லிக் கொண்டே போனால் நேரம் போவதும் தெரியாது. பலவிதமாக மனதைப் போட்டு அலக்கழிப்பதும் குறையும்' என்றான் அவன்.

'நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம் என்பது தெரியுமா?'

என் கேள்வி வண்டிக் காரனுக்குப் பிடிக்கவில்லை

என்று தெரியவந்தது.

'அது யாருக்குத் தெரியும் குல்முக் பிரதேசத்தில் போய்க்கொண் டிருக்கலாம்' என்முன் கூறுபவன்.

'அப்படியாஞல் நாம் என்ன செய்வது?'

'என்ன செய்வது? நாம் போய்க்கொண்டே யிருந்தால் ஏதாவது ஒரு இடத்தை அடையலாம்' என்று வெறுப்புடன் கூறிஞன்.

'நமக்கு ஒரு இடமும் கிடைக்காமல், குதிரைகளும் பனியில் அகப்பட்டுக்கொண்டால் என்ன செய்வது?'

'அதன் பிறகு என்ன? ஏன்? ஒன்றுமில்லை!'

'நாம் பனியில் விறைத்துப் போய்விடுவோமே!'

'ஆமாம் அது உண்மைதான். வைக்கோல் போர்கூடக் கிடைக்காவிட்டால் விறைத்துத்தான் போகவேண்டிவரும். குல்முக் பிரதேசத்திலேயேதான் நாம் இருக்கிரேம் என்று நினைக்கிறேன். முக்கியமாக நாம் பனியைத்தான் கவனிக்க வேண்டும்.'

'பனியில் விறைத்துவிடுவோம் என்று பயப்படுகிறீர்களா?' என்று வயதானவன் தடுமாற்றத்துடன் கேட்டான். அவன் குரல் கரகரத்தது.

வயதானவன் என்னைக் கேலி செய்வதுபோல் கேட்டாலும் குளிரால் நடுங்குகிருன் என்பது நன்கு தெரிந்தது.

'ஆமாம், குளிர் அதிகமாக இருக்கிறது' என்றேன் நான்.

'அப்படியாஞல் என்னைப்போல் நீங்கள் செய்யுங்கள். வண்டியிலிருந்து இறங்கி சிறிது தூரம் ஓடுங்கள். அதனுல் உடலில் சூடும் ஏறும்.'

'ஆமாம், வண்டிக்குப் பின்ஞல் ஓடிவாருங்கள்' என்முன் ஆலோசனை கூறுபவன்.

'நாங்கள் தயாராக இருக்கிரேம்' என்முன் முன் வண்டியிலிருந்து அலிஷ்கா.

புயல் பலமாக அடித்துக் கொண்டிருந்தது. நான் நன்முகப் போர்த்திக்கொண்டு குனிந்து நடக்கத் தொடங்கி

னேன். நான் இரண்டடி எடுத்து வைப்பதற்குள் வண்டி வெகுதூரம் சென்றுவிட்டது. காற்றும் பனியும் என் கால்களை நனைத்தன. என்னுடைய முந்தய வண்டிக் காரன் வண்டி மத்தியில் மண்டியிட்டுக் கொண்டிருந்தான். என்னைக் கண்டதும் அவன் தலையிலிருந்த தொப்பியைக் கழட்டினான். என்னிடம் தனக்கு ஏதாவது தரும்படி கெஞ்சிக் கேட்டான். எனனிடமிருந்து அவன் ஒன்றும் எதிர்பார்ப்பதற்கும் வழியில்லை. நான் கொடுக்கா விட்டாலும் அவன் வருத்தப்பட இடமில்லை. ஆனால் நான் பணத்தைக் கொடுத்ததும் அவன் எனக்கு நன்றி தெரி வித்தான். தொப்பியை அணிந்துகொண்டு 'கடவுள் உங்க ளுக்கு நன்மை செய்வார்' என்றான். பிறகு குதிரையின் லகானை இழுத்து ஓட்டினான். மறுகணமே என்னிட மிருந்து விலகிச் சென்றான்.

இக்னாஷ்கா பலமாக உடம்பை அசைத்துக் குதிரை களை விரட்டினான். அவனுடைய கூக்குரலும், குதிரை யின் குளம்புகள் உறைந்த பனிக்கட்டிகளில் பட்டு ஏற்பட்ட சப்தமும் எதிரொலி செய்தன. அத்துடன் மணியின் ஓசையும் சேர்ந்து நிசப்தத்தைக் கலைத்தது.

இக்னாஷ்காவின் வண்டிக்கு வந்த பிறகு நான் தூங்காமல் கண் விழித்துக் கொண்டிருந்தேன். இக்னாஷ் காவையும், அவன் வண்டிக் குதிரைகளையும் உன்னிப்பாகக் கவனித்தேன். ஒரு உலோகத்தினால் செய்யப்பட்டவனைப் போல் இக்னாஷ்கா இருந்தான். அடிக்கடி உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து அவன் எழுந்திருப்பான். கையிலிருந்த சாட்டையால் குதிரைகளை அடிப்பான். கூப்பாடு போடு வான். கால்களை உடைத்துக்கொண்டு லகானைப் பற்றிக் கொள்வான். அவன் அதிக உயரமாக இருக்கமாட்டான் என்று கருதினேன். ஆனால் திடகாத்திரமான உட லமைப்புகொண்டவன் என்று மட்டும் அறிந்தேன். உள்ளே போட்டிருந்த தோல் சட்டையின் மீது மேலங்கி அணிந்திருந்தான். மேலங்கியின் கழுத்துப் பட்டை மடங்கிப் போயிருந்தது. அதனால் அவன் கழுத்து திறந்த படியே இருந்தது. தோல் பூட்ஸை அணிந்து கொண்டிருந் தான். அவனுடைய தொப்பியும் சிறியதாகவே இருந்தது. அதை அடிக்கடி எடுத்துப் போட்டுக்கொண்டிருந்தான். அவனுடைய காதுகளைத் தலை மூடி மறைத்தது. இக்னாஷ்

காவின் நடவடிக்கைகளைக் கவனித்தவர்களுக்கு அவ னுடைய உடல் வலிமை மாத்திரமல்ல. அவன் உள்ளத் தின் வலிமையையும் தட்டி எழுப்பக்கூடிய சக்தி பெற்ற வன் என்பதை உணர்வர்.

எங்கள் வண்டி போய்க்கொண்டே யிருந்தது. பல முறை இக்னுஷ்கா எழுந்தான். குதிரைகளை விரட்டி அடித் தான் தொப்பியைச் சரி செய்துகொண்டு உட்கார்ந்தான். அலிஷ்காவுடனும், என்னுடனும் சிறிது பேசினன். அவ னுடைய போக்கு அவனுக்கு தைரியத்தை இழக்க மன மில்லை போலக் காணப்பட்டது. அதற்குக் காரணமில்லா மல் போகவில்லை. குதிரைகள் திடமாகத்தான் இருந்தன. சாலையும் வர வர கடினமானதாக இருந்தது. அப்படி யும் குதிரைகள் வண்டியை இழுத்துக்கொண்டு செல்ல மனமின்றி ஓடின. அதனுல் குதிரைகளை அடித்து விரட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஒரு சமயம் சாட்டை யால் அடித்த போது ஒரு குதிரை துள்ளிக் குதித்தது. பயந்து வண்டியைப் பின்னுக்குத் தள்ளிற்று. வலது பக்க மிருந்த குதிரையையும் நான் கவனித்தேன். அதுவும் சற்று பின்னல் நகர்ந்தது. அப்பொழுது சாட்டையால் பலமாக அவற்றை அடிக்கவேண்டிய அவசிய மேற்பட்டது. ஆனுல் சிறந்ததும், திடகாத்திரமுமான குதிரைகள் பழக்கம் காரணமாக பலவீனத்தின்மீது அவை வெறுப்படைந்தன. ஆத்திரத்துடன் அவை லகானைக் கீழே இழுத்துத் தள்ளின.

சாலையும் மோசமாகிக் கொண்டு வந்தது. குதிரை களும் சோர்வடைந்தன. அதே சமயம் பனி உறையத் தொடங்கியிருந்தது. மேலும் நாங்கள் எங்கே இருக்கி ருேம்? எங்கே போகிருேம்? ஏதாவது தங்க இடம் கிடைக் குமா என்பதும் எங்களுக்குத் தெரியாது. இதை அறிந்த போது மனம் படபடத்தது. பயங்கரமான எண்ணங்கள் தோன்றலாயின.

இக்னுஷ்கா முன்போலவேகுதிரைகளை அடித்து விரட் டினன். உல்லாசமாகப் பிரயாணம் செய்வது போல அவன் கருதியிருக்கிருன். குதிரைகளை விரட்டிய பிறகு அவன் பெரிய குரலில் பாடத் தொடங்கினன். பாட்டை நிறுத்திச் சில சமயம் கீழ்க்கை அடிப்பான்.

'டேய் இக்னுஷ்கா! உன் தொண்டையைப் பாழ்படுத்

திக் கொள்ளப் போகிறாய். பாட்டை நிறுத்து' என்றான் ஆலோசனை கூறுபவன்.

'என்ன?' என்று கேட்டான் இக்னுஷ்கா.

'பாட்டை நிறுத்து.

இக்னுஷ்கா பாடுவதை நிறுத்தினான். மீண்டும் மௌனம் நிலவியது. காற்று பலமாக அடித்தது. பனி கட்டி கட்டியாக வண்டியின்மீது விழுந்தது. ஆலோசனை கூறுபவன் எங்கள் வண்டிக்கு வந்தான்.

'ஹூம் இப்பொழுது?' என்று இக்னுஷ்கா அவனைக் கேட்டான்.

'என்னவா? நாம் எங்கே போகிறோம்?'

'அது யாருக்குத் தெரியும்!'

'உன் கால்கள் விறைத்துப் போகிறதா? அடிக்கடி கால்களை உதைத்துக் கொள்கிறாயே!'

'மரத்துப் போகிறது'

'அதோ பார் அங்கே போ. ஏதோ வெளிச்சம் தெரிகிறது. அது குல்மிகா படைத் தளமாக இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன். அங்கு போனால் உன் கால்களை கணப்பில் காட்டிச் சூடேற்றிக் கொள்ளலாம்'

'நல்லது. லகானைப் பிடித்துக் கொள். என்று சொல்லி ஆலோசனை கூறுபவனிடம் லகானைக் கொடுத்து விட்டு அவன் காட்டிய திக்கு வழியாக ஓடினான்.

'நீ எப்போதும் முன்னால் போய் வழியைப் பார்த்துக் கொண்டு தான் வண்டியை ஓட்டுவாய். இப்படி வண்டி ஓட்டுவது முட்டாள்த்தனம்!' என்று இக்னுஷ்காவைப் பற்றிக்கூறி என் பக்கம் திரும்பிப்' 'பாருங்கள் குதிரைகள் களைத்துப் போகின்றன' என்றான் ஆலோசனை கூறுபவன்.

இக்னுஷ்கா போனதிலிருந்து என்மனம் ஒரு நிலையில் இல்லை. அவன் வழி தவறி எங்காவது சென்று விட்டானோ என்றும் பயந்தேன். அவன் திரும்பி வரும் வரை ஆலோசனை கூறுபவன் எனக்குத் தைரியம் சொல்லிக் கொண்டிருந்தான். 'பனிப்புயல் அடிக்கும்போது குதிரைகளை விரட்டி ஓட்டக்கூடாது. அதன் போக்கிலேயே விடவேண்டும். கடவுள் மிகவும் தயாள குணமுடையவர். நம்மை நல்ல இடத்தில் கொண்டு சேர்ப்பார். நக்ஷத்திரங்களைக் குறிவைத்துக்கொண்டு குதிரையைச் செலுத்தியிருந்தால்

இதற்குள் அடுத்த வண்டி நிலையத்திற்கே போய்ச் சேர்ந்திருக்கலாம் என்ருன்.

இக்னுஷ்கா திரும்பி வந்து மிகவும் கஷ்டத்துடன் வண்டியில் ஏறிக்கொண்டான்.

'அங்கு ஏதாவது இருக்கிறதா?' என்று ஆலோசனை கூறுபவன் கேட்டான்.

'அங்கு ஏதோ ஒரு தளம் இருக்கிறது' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே சொன்னுன் இக்னுஷ்கா. ஆனல் என்ன தளம் என்று எனக்குத் தெரியாது. நாம் ப்ரோலோகோவ் ஜமீனைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருக்கிரும். நாம் இனி இடது பக்கமாகப் போகவேண்டும்.'

'என்ன உளறுகிருய்? அது நமது தளம்தான். கொஸாக் கிராமத்திற்குப் பின்னுல் இருக்கிறது' என்ருன் ஆலோசனை கூறுபவன்.

'அதுதான் இல்லை'

'அப்படியானல் நானேதான் போய்ப் பார்க்கவேண்டும். அதில்லையென்ருல் தமிஷ்வ்ஸ்காவாகத்தான் இருக்கவேண்டும். எது எப்படியிருந்தாலும் நாம் வலது பக்கமாகத்தான் போகவேண்டும். எட்டாவது மைலில் ஒரு வாரவதி இருக்கிறது.

'நீ சொல்வது போல் ஒன்றும் இல்லை. நான் நன்ருகப் பார்த்தேன்.

'டேய், நீ உன்னை வண்டிக்காரன் என்ரு சொல்லிக் கொள்கிருய்?'

'ஆமாம். வண்டிக்காரன்தான்......வேண்டுமானுல் நீ போய்ப் பார்.'

'நான் ஏன் போக வேண்டும்......பார்த்தாலே தெரிகிறதே.'

இக்னுஷ்காவுக்குக் கோபம் பொங்கி வந்தது. அவன் துள்ளிக் குதித்தான். பதில் பேசாமல் குதிரைகளை அடித்து விரட்டினுன்.

'என்னுடைய கால்கள் மரத்துப்போய் விட்டன. அவற்றைக்கணப்பில் காட்டிச்சூடேற்ற வேண்டும்' என்று கூறி அலிஷ்கா கால்களை உதறிக் கொண்டான். பூட்ஸில் இருந்த பனிக்கட்டிகளை அகற்ற முற்பட்டான்.

எனக்குத் தூக்கம் கண்ணைச் சுற்றிக் கொண்டு வந்தது.

# 8

'நான் பனியில் விறைத்து இறந்துவிடுவேனு?' என்று பாதி தூக்கத்தில் எண்ணினேன். 'மரணத்திற்கு முன்னுல் மயக்கம் வரும் என்பார்கள். பனியில் விறைத்து மடிவதை விட தண்ணீரில் மூழ்கி இறக்கலாம். என்னை வலைவீசி கரையில் இழுத்துப் போடட்டும். ஆனுல் தண்ணீரில்மூழ்கி ஞலும் குளிரில் விறைத்துப் போனுலும் ஒன்றுதான். எப்படி மரணம் ஏற்பட்டாலும் அதனுல் எனக்கு ஒரு பெருமையும் உண்டாகாது' என்று நினைத்தேன்.

கணநேரம் வரை எதைப் பற்றியும் சிந்திக்காமல் இருந்தேன்.

'இதன் முடிவு என்ன ஆகும்?' என்று என்னையே கேட்டுக் கொண்டேன். கண்களைத் திறந்து வெண்மை யான பனிப்படலத்தைப் பார்த்தேன். 'எல்லாம் எப்படி முடியும்? வைக்கோல்போர் கிடைக்காவிட்டால் என்ன செய்வது? குதிரைகளின் களைப்பைத் தீர்க்காவிட்டால் என்ன ஆகும்? வெகுவிரைவிலேயே குதிரைகள் ஓட மறுக்கலாம். நாம் அனைவரும் பனியில் விறைத்து இறக்க வேண்டியதுதான்' என்று கருதினேன்.

எனக்குச் சிறிது பயம் இருந்தது என்னவோ உண்மை. ஆனுல் பயத்தைவிட ஏதோ அசாதாரணமான ஒன்று எங்களுக்கு நடக்கப்போகிறது என்ற எண்ணம் பலமாக இருந்து வந்தது. பொழுது விடியும் சமயத்திற்குக் குதிரை கள் அதன் போக்கிலேயே எங்களைப் பனியில் பாதி விறைத்துப்போன நிலையில் முன்பின் தெரியாத கிராமத் தில் கொண்டு சேர்த்தாலும் பாதகமில்லை. அல்லது எங்க ளில் சிலர் குளிரில் நாசமடைந்தாலும் அதனுல் மோசம் ஏற்படாது. இம்மாதிரியான எண்ணங்கள் என் கண்முன் தலைவிரித்தாடின.

குதிரைகள் நின்றன. பனி பலமாகப் பெய்துகொண் டிருந்தது. இப்பொழுது குதிரைகளைக்கூடச் சரியாகப் பார்க்க முடியவில்லை. குதிரைகளின் காதுகளும் அதன் தலைமீது வேயப்பட்டிருக்கும் துணியுமே தெரிந்தது. ஆனுல் திடீரென்று எங்கள் முன் இக்ஞஷ்கா தோன்றினுன். அவன் உடன் குதிரைகளை விரட்டி ஓட்டினுன். நாங்கள்

இக்னுஷ்காவிடம் கெஞ்சிக் கேட்டோம். எங்களை எங்காவது அழைத்துச் செல்லும்படி கூக்குரலிட்டோம். ஆனால் காற்று பலமாக அடித்ததால் நாங்கள் போட்ட கூச்சல் அவன் காதுக்கு எட்டவில்லை. இக்னுஷ்கா கோபமாக ஏதோ சொன்னான். குதிரைகளை அதட்டி ஓட்டினான். சீழ்க்கை அடித்தான். பிறகு பனிப்படலத்தில் எங்கோ மறைந்துவிட்டான். குள்ளமான வயதானவன் குதிரை மீது தாவி ஏறிக்கொண்டான். கைகளை ஊன்றிக் குதிரையை வேகமாகச் செலுத்தினான். ஆனால் இருந்த இடத்திலிருந்து அசையக் காணோம். என் முந்திய வண்டிக்காரன் பெரிய தொப்பியுடன் அவனைப் பின்தொடர்ந்தான். 'டேய் முட்டாள், நீ பனியில் அகப்பட்டுக்கொள்வாய். நாம் அனைவரும் ஒன்றாக நாசமாகி விடுவோம்' என்று கத்தினான்.

ஆனால் வயதானவன் மலைபோலிருந்த பனிக் கட்டியைத் தலையால் பிளக்க முற்பட்டான். இப்பொழுது அவன் ஒரு முயலைவிடப் பெரிய உருவமாகக் காணப்படவில்லை. எங்களிடமிருந்து அவன் பாய்ந்து சென்றான். எல்லா நாய்களும் அவனைப் பின் தொடர்ந்தன. தியாடார் பிலிப்தான் ஆலோசனை கூறுபவனாக இருந்தான். அனைவரையும் வட்டமாக உட்காரச் சொன்னான். பனி எங்களை மூடிக் கொண்டாலும் பாதகமில்லை. நாங்கள் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து உட்கார்ந்து கொள்வதால் குளிருக்கு அடக்கமாக இருக்கும் என்றான். உண்மையில் அது குளிருக்கு மிகவும் அடக்கமாகத்தான் இருந்தது. எனக்கு ஏதாவது பருகவேண்டும் போல இருந்தது. நான் என் சிற்றுண்டிக் கூடையை எடுத்தேன். அனைவருக்கும் சாராயமும் சர்க்கரையும் கொடுத்தேன். நானும் சாராயம் பருகினேன். கதை சொல்பவன் வானவில்லைப் பின்னணியாகக் கொண்டு ஒரு கதை கற்பனை செய்தான். இப்பொழுது எங்கள் தலைக்கு மேலே பனி பெய்துகொண்டிருந்தது. வானவில்லும் காணப்பட்டது. 'ஒவ்வொருவரும் நன்றாக இடம் செய்து கொள்ளுங்கள். அனைவரும் தூங்கலாம்' என்றேன் நான். பனி மென்மையாகவும் கம்பளத்தைப்போல கத கதப்பாகவும் இருந்தது. நான் எனக்கு மூடுபனியில் இடம் செய்து கொண்டேன். அதனுள் செல்ல முற்பட்டேன். ஆனால் என்னிடம் பணம் இருப்

பதை தியாடார் பிலிப் பார்த்துவிட்டான்! 'பணத்தை என்னிடம் கொடுத்து விடுங்கள். நீங்கள்தான் எப்படியாவது இறந்தே தீர வேண்டும்' என்று சொல்லி என் பணப்பையைப் பறித்துக் கொண்டான்.

நானும் பணப்பையைக் கொடுத்துவிட்டு படுக்கப் போக அனுமதிக்கும்படி கேட்டுக்கொண்டேன். ஆனால் என்னிடம் அவ்வளவுதான் பணம் இருக்கிறது என்பதை அவர்கள் நம்பவில்லை. என்னைக் கொன்றுவிடக் கருதினார்கள். நான் வயதானவனுடைய கையைப் பற்றினேன். அதில் முத்தம் கொடுக்க முற்பட்டேன். அவனுடைய கை வழவழப்பாகவும் நேர்த்தியாகவும் இருந்தது. முதலில் அவன் கையை என் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ள முயற்சித்தான். பிறகு என் இஷ்டத்திற்கு விட்டு விட்டான். அத்துடன் மற்றொரு கையால் என்னைத் தடவிக் கொடுத்தான்

பிறகு தியாடார் பிலிப் என் அருகில் வந்தான். என்னைப் பயமுறுத்தினான். நான் என் அறையினுள் ஓடினேன். அது சாதாரண சிறிய அறை. ஆனால் வெண்மையான வழி மாத்திரம் அதில் இருந்தது. யாரோ ஒருவன் என் கால்களைப் பற்றிக் கொண்டான். நான் கால்களை விடுவித்துக் கொள்ள முயற்சித்தேன். என்னைப் பற்றிக் கொண்டிருந்தவனுடைய கைகளில் என் உடையும், உடலின் சில பாகத்தின் தோலும் அகப்பட்டுக் கொண்டிருந்தன. ஆனால் எனக்கு வெட்கமாக இருந்தது. அத்துடன் குளிரும் அதிகமாக உண்டாயிற்று.

நான் வெட்கமடைவதற்கு மற்றொரு காரணமும் இருந்தது. என் அத்தை கையில் மருந்து சாமான் பெட்டியுடன், ஏரியில் மூழ்கி இறந்தவனோடு, என்னை நோக்கி வந்து கொண்டிருந்தாள். நான் காட்டும் சைகையைப் புரிந்து கொள்ளாமல் என்னை நோக்கி நகைக்கத் தொடங்கினார்கள். நான் வண்டியில் தாவி ஏறிக்கொண்டேன். என் கால்கள் பனியில் இருந்தன. ஆனால் வயதானவன் என்னைத்தொடர்ந்து ஓடிவந்தான். என் அருகில் வந்து விட்டான். அதே சமயம் எனக்கு முன்னால் மாதா கோயிலின் மணி அடிப்பது கேட்டது. வயதானவன் என்னுடன் அகப்பட்டுக் கொண்டான். என் மீதே விழுந்தான். அதனால் என்னால் மாதா கோயிலின் மணி ஓசையை நன்று

கக் கேட்க முடியவில்லை. மீண்டும் நான் அவன் கையைப் பற்றி முத்தம் கொடுக்க முயன்றேன். ஆனால் குள்ளமாக இருந்த வயதானவன் இப்பொழுது குள்ளமாக இல்லை. அவன் ஏரியில் மூழ்கி இறந்தவனுகக் காணப்பட்டான். அவன் 'டேய், இக்னஷ்கா வண்டியை நிறுத்து. அதோ அங்கே அக்மிதின் எல்லைபோல் காணப்படுகிறது. போ. போய்ப்பார்' என்று கத்தினுன். இந்தக் காட்சி மிகவும் பயங்கரமாக இருந்தது! இல்லை. இனித் தூங்கக்கூடாது. விழித்துக்கொண்டிருக்க வேண்டும் என்று எண்ணினேன்.

நான் கண்களைத் திறந்தேன். அலிஷ்காவின் மேலே போர்த்திக் கொண்டிருந்த துணி காற்றினுல் என் முகத்தின்மீது வந்து விழுந்தது. என் கால்கள் நன்ருக மூடப்பட்டிருக்கவில்லை. நாங்கள் உறைந்த பனியுள்ள சாலையில் போய்க் கொண்டிருந்தோம். மணிகளின் சப்தம் மெல்லத் தான் கேட்டது.

வைக்கோல்போர் ஏதாவது இருக்கிறதா என்று நாலா பக்கங்களிலும் பார்வையைச் செலுத்தினேன். இப்பொழுது என் கண்கள் நன்ருகத் திறந்திருந்தன. எனக்கு எந்த எல்லையும் தெரியவில்லை. ஆனுல் ஒரு மாடி வீடு காணப்பட்டது. அதைச் சுற்றி கோட்டை மதிள் சுவர் இருந்தது. அந்த வீடோ, மதிள் சுவரோ என் கவனத்தை ஈர்க்கவில்லை. நாங்கள் போய்க் கொண்டிருக்கும் வெண்மையான வழியையே நான்ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தேன். மாதா கோயிலின் மணி ஓசை என் கவனத்தைக் கவர்ந்தது. வயதானவனுடைய கையை முத்தமிடத்தான் எனக்கு விருப்பம் ஏற்பட்டிருந்தது. நான் மீண்டும் கண்களை மூடினேன். அப்படியே தூங்கி விட்டேன்.

## 9

நான் நன்ருகத் தூங்கிக் கொண்டிருந்தேன். ஆனுலும் மணி ஓசை மாத்திரம் எனக்குக் கேட்டுக் கொண்டேயிருந்தது. என்னுடைய கனவில் அவர்கள் நாயாக மாறி விட்டார்கள். நாய் குரைத்துக் கொண்டே என்னைக் கடிக்க வந்தது.நான் வாசித்துவந்த பாண்டு வாத்தியம் என் கையில் இருந்தது. அதில் நான் ஒரு பிரஞ்சுப் பாடலை இசைத்துக்கொண்டிருந்தேன். சில சமயங்களில் அந்தமணி

என்னைச் சித்திரவதை செய்யும் கருவியாக மாறி என்னுடைய காலை நசுக்கிக் கொண்டிருந்தது. கால்களில் ஏதோ கனமான பொருள் இருப்பதாக எண்ணிக் கண் விழித்தேன். எழுந்து என் கால்களை தேய்த்துக் கொண்டேன்.

எங்கள் வண்டி பனி நிறைந்த திறந்த வெளியில் சென்று கொண்டிருந்தது. இரவு இன்னும் போய் விடவில்லை. புகை மண்டியது போல் பனித்திரை இருந்தது. என்னையும் என் வண்டியையும் ஏதோ அசைத்துக்கொண்டிருந்தது. இக்னஷ்கா வண்டியின் ஓரத்தில் உட்கார்ந்திருந்தான். அடிக்கடி கால்களை உதறிக் கொண்டிருந்தான். அதே குதிரைகள் முழங்காலளவு பனியில் ஓடிக்கொண்டிருந்தன. ஆனால் எல்லாம் பனியில் மூடப்பட்டிருந்தன. குதிரையின் குளம்பிலிருந்தும் வண்டியின் வளைவிலிருந்தும் பனி கிளம்பி எங்கள்மீது வந்து விழுந்து கொண்டிருந்தது. ஒரு சமயம் காற்று வலப்புறம் அடித்தது. மறுசமயம் இடப்புறமாக அடித்தது. இக்னஷ்காவின் கழுத்துப் பட்டையுடன் காற்று விளையாடிற்று.

குளிர் கடுமையாகிக்கொண்டு வந்தது. என் தலையை வெளியில் காட்ட முடியவில்லை. பனி என் கண்களை மறைத்தது. மூக்கிலும் வாயிலும் படிந்ததுடன் முதுகுப் புறமும் விழுந்தது. நான் நாலாபுறமும் பார்க்கும்போது மங்கலான வெளிச்சமும் வெண்மையான பனியும் தெரிந்தது.

எனக்கு அதிக பயம் ஏற்பட்டது. அலிஷ்கா என் காலடியில் வண்டியின் அடிபாகத்தில் தூங்கிக் கொண்டிருந்தான். அவன் முதுகுப்புறம் பூராவும் கனமாகப் பனி படிந்திருந்தது. இக்னஷ்கா தைரியத்தை இழக்கவில்லை. அவன் லகானை இழுத்துப் பிடித்து, குதிரைகளை விரட்டிக்கொண்டிருந்தான். கால்களை அடிக்கடி தேய்த்துக்கொண்டான். மணி வெகு நேர்த்தியாக ஒலித்துக் கொண்டிருந்தது. குதிரைகள் கனைத்தன. ஆனால் அடிக்கடி அவை தடுக்கி விழுந்தவண்ணம், மெள்ள ஓடிக் கொண்டிருந்தன. இக்னஷ்கா துள்ளி எழுந்து குதிரைகளை அதட்டி ஓட்டினன். மெள்ளப் பாடத் தொடங்கினன். பாட்டு முடிவதற்கு முன்னதாகவே வண்டியை நிறுத்தினன். லகானை வண்டியின் முன்பாகத்தில் கட்டினன். வண்டியிலிருந்து இறங்கினன்.

காற்று பலமாக அடித்தது. பனி எங்கள் வண்டி மீதும் எங்கள் மீதும் பலமாகப் பெய்துகொண் டிருந்தது. நான் நாலாபக்கமும் பார்த்தேன். மூன்ருவது வண்டி காணப்படவில்லை. இரண்டாவது வண்டிக்கருகில் பனிப் படலத்தினூடே குள்ளமான வயதானவன் தத்தித் தத்தி வருவதைப் பார்த்தேன். வண்டியிலிருந்து இரண்டு மூன்று அடி தூரம் இக்னுஷ்கா நடந்து சென்ருன். பனித்தரை மீது உட்கார்ந்து அவனுடைய பூட்ஸைக் கழட்டிக்கொண் டிருந்தான்.

'என்ன செய்கிருய்?' என்று இக்னுஷ்காவைக் கேட்டேன்.

'பூட்ஸுகளை மாற்றிக் கொள்கிறேன். இல்லாவிட்டால் கால்கள் பனியில் விறைத்துப்போகும்' என்று சொல்லிப் பூட்ஸுகளைக் கழட்டிக்கொண் டிருந்தான்.

அவன் என்ன செய்கிருன் என்பதைக் கவனிக்க நான் தலையை வெளியே நீட்டிக்கொண்டிருக்க முடியவில்லை. நான் நிமிர்ந்து உட்கார்ந்தேன். குதிரையையே பார்த்துக் கொண்டிருந்தேன். அது ஒரு காலை நன்ருக நீட்டிக் கொண்டிருந்தது. அதனுடைய வால் முடிபோடப்பட்டிருந்தது. வாலில் பனி உறைந்திருந்தது. இக்னுஷ்கா தாவி வண்டியில் ஏறியதால் நான் திடுக்கிட்டேன்.

'நாம் எங்கே போகிருேம்? பொழுது விடியும் சமயத்திலாவது ஏதாவது ஒரு இடத்தை அடைவோமா?' என்று கேட்டேன்.

'கவலைப்படாதீர்கள். உங்களை உங்கள் இடத்தில் பத்திரமாகக் கொண்டு சேர்க்கிறேன். நான் பூட்ஸுகளை மாற்றிக்கொண்டு விட்டேன். இப்பொழுது கால்கள் கத கதப்பாக இருக்கிறது' என்ருன் இக்னுஷ்கா.

அவன் குதிரைகளை அதட்டி ஓட்டினுன். மீண்டும் மணி ஓசை கேட்டது. வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. காற்று வண்டியினுள் புகுந்து சீழ்க்கை அடித்துக் கொண்டு வெளிப்பட்டது. நாங்கள் மீண்டும் ஆழம் தெரியாத பனிக் கடலில் நீந்தத் தொடங்கினேம்.

## 10

நான் நன்ருகத் தூங்கிக் கொண்டிருந்தேன். அலிஷ்காவின் கால் என்னை உந்தித்தள்ளியது. நான் கண்

விழித்தேன். அப்பொழுது விடிந்து போயிருந்தது. இரவை விட அப்பொழுது குளிர் அதிகமாக இருந்தது. பனிபெய்வது நின்று விட்டது. ஆனால் காற்று மாத்திரம் தொடர்ந்து பலமாக அடித்துக் கொண்டிருந்தது. குதிரை ஓடும் போது அதன் குளம்புகளிலிருந்தும், வண்டியின் வளைவிலிருந்தும் பனிக்கட்டி உடைந்து நாலாபக்கங்களிலும் தெறித்தது. எங்களுக்கு வலப்புறம் கிழக்கில் ஆகாயம் கறு நீலமாக இருந்தது. அந்த கறு நீலத்தினுள் நெருப்புக் கோளம் போன்று ஒன்று உருவாகிக் கொண்டிருந்தது. தலைக்கு மேலே வெண்மையான மேகம் வேகமாக மறைந்து அங்கும் நீல நிற ஆகாயம் தென்படலாயிற்று. இடது புறம் பிரகாசமான மேகம் மறைந்து கொண்டிருந்தது. எங்கு பார்த்தாலும் திறந்த வெளியாகவும் பனி உறைந்தும் காணப்பட்டது. அங்கும் இங்குமாக சிறுசிறு குன்றுகள் இருந்தன. அவற்றின் மீது பனி பெய்து மூடியிருந்தது. வண்டித்தடமோ மனிதன், அல்லது பிராணி ஆகியவற்றின் காலடியோ எங்கும் தென்படவில்லை.

பின்புறம் வெள்ளையாக இருந்தும் வண்டிக்காரன், குதிரைகள் ஆகியவை நன்றாகத் தெரிந்தன. இக்னஷ்காவின் தொப்பியின் விளிம்பு, மேலங்கியின் கழுத்துப்பட்டை தலைமுடி, பூட்ஸ் ஆகியவை மீது பனி பெய்து அவற்றை வெண்மையாகச் செய்திருந்தது. வண்டி பூராவும் பனி மூடியிருந்தது. வலது புறம், இடது புறம் இருந்த குதிரைகள் மீதும் பனி பெய்திருந்தது. குதிரைகளின் குளம்படிச் சப்தமும், மணியின் ஓசையும் இசைக் கருவியை ஒரே விதமாக இசைப்பது போல ஒலித்துக் கொண்டிருந்தன.

என் கவனத்தைக் கவர்ந்தது ஒரு மைல் கல்தான். அக்கல்லின் மீதிருந்து பனி கரைந்து கீழே ஓடிக் கொண்டிருந்தது. கல்லின் இருபுறங்களிலும் காற்று மாவு போன்ற பனித்தூளை வாரி இறைத்தது. நாங்கள் இரவு பூராவும், குதிரைகளையும் மாற்றாமல் எங்கே யிருக்கிறோம் என்பது தெரியாமல் சுற்றிக் கொண்டிருந்தோம். கடைசியாக நாங்கள் சேரவேண்டிய இடத்திற்கே வந்துவிட்டோம். எங்கள் வண்டியின் மணி ஓசை இப்பொழுது மகிழ்ச்சியுடன் ஒலிப்பது போலக் காணப்பட்டது. இக்

ஞுஷ்கா தன்னை நன்ருகப்போர்த்திக்கொண்டு குதிரைகளை அதட்டி ஓட்டிக் கொண்டிருந்தான். எங்களுக்குப் பின்னுல் வந்த வண்டியின் குதிரைகள் கனைத்தன. ஆலோசனை கூறுபவன் இருந்த வண்டியின் மணி மெல்ல ஒலித்தது.

மேலும் அரை மைல் தூரம் சென்றிருப்போம். பனி உறைந்த பாதையில் மூன்று குதிரைகள் பூட்டிய வண்டி போன அடையாளம் தெரிந்தது. அத்துடன் பல இடங்களில் சிவந்த ரத்தம் சிந்தியிருந்தது. ஒருவேளை முன்னுல் சென்ற குதிரை களைத்து ரத்தத்தைக் கக்கி யிருக்க வேண்டும்.

'அது பிலிப்பின் வண்டி. அவன் நம்மைக் கடந்து சென்றிருக்கிருன்' என்ருன் இக்ஞுஷ்கா.

பனித்திரையினூடே சாலையின் ஓரத்தில் ஒரு சிறிய வீடு தென்பட்டது. வீட்டைப்பனி மூடிக்கொண் டிருந்தது. வீட்டின் முன்புறம் தங்கும் விடுதி என்று பொறிக்கப் பட்ட பலகையும் தொங்கியது. விடுதிக்கு அருகில் ஒரு வண்டியும் அதன் சாம்பல் நிறக் குதிரைகளும் நின்றிருந்தன. குதிரைகள் களைத்து தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்தன. விடுதியின் முன்புறம் பனியை அகற்றிக்கொண் டிருந்தார்கள்.

எங்கள் வண்டியின் மணி ஓசை கேட்டு விடுதியிலிருந்து சிவந்த முடியை உடைய ஒரு குடியானவன் வெளியே வந்தான். அவன் கையில் சாராயம் நிறைந்த கோப்பையும் இருந்தது. அவன் கூக்குரலிட்டு ஏதோ சொன்னுன். இக்ஞுஷ்கா என் பக்கம் திரும்பி வண்டியை நிறுத்த அனுமதி கோரினுன். முதல் முறையாக இப்பொழுதுதான் இக்ஞுஷ்காவின் முகத்தை நன்ருகப் பார்த்தேன்.

## 11

இக்ஞுஷ்காவின் தலைமுடியைக் கொண்டு அவனுடைய முகம் மெலிந்தும் நீண்ட மூக்குடனும் இருக்கும் என்று எண்ணினேன். ஆனுல் நேரில் பார்த்தபோது நான் எண்ணியது தவறு என்று தோன்றிற்று. வட்டவடிவமாகவும் சப்பையான மூக்குடனும், புன்முறுவல் தவழ்ந்து கொண்டிருந்தது. அகண்ட வாயும், ஒளி பொருந்திய நீல நிறக் கண்களும் இருந்தன. அவனுடைய முகவாய்க் கட்டையும்

கழுத்தும் கம்பளத்தால் துடைத்துக் கொண்டதன் மூலம் சிவந்திருந்தன. புருவங்களிலும், முகத்திலும் பனி படிந்திருந்தது.

நாங்கள் போய்ச் சேரவேண்டிய இடம் இன்னும் அரைமைல்தான் இருந்தது. அப்போதுதான் எங்கள் வண்டியை நிறுத்தி யிருந்தோம்.

'விரைவில் வா' என்றேன்.

'ஒரு நிமிஷத்தில் வருகிறேன்' என்றான் இக்னுஷ்கா. வண்டிலிருந்து இறங்கி பிலிப்பை நோக்கி விரைந்தான்.

'சகோதரனே, நாம் அனைவரும் பருகலாம்' என்றான் பிலிப். பிறகு வாயிலிருந்த எச்சிலைத் துப்பினான். வலது கையிலிருந்த சாட்டையை பனித்தரையில் வீசி எறிந்தான். தலையைக் கவிழ்த்து கோப்பையிலிருந்த சாராயத்தைப் பருகினான்.

விடுதியை நடத்துபவன் ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றுவந்தவனைப்போல காணப்பட்டான். அவன் கையில் பாதி புட்டி சாராயத்துடன் வெளியில் வந்தான்.

'யாருக்குக் கொடுப்பது?' என்று விடுதியின் சொந்தக்காரன் கேட்டான்.

உயரமான வாஸ்லியும், சிறிய தாடியுடன் கூடிய பருமனான ஆலோசனை கூறுபவனும் முன்னால் வந்தார்கள். இருவரும் தலா ஒவ்வொரு கோப்பை சாராயம் பருகினார்கள். குள்ளமான வயதானவனும் அங்கு சென்றான். ஆனால் அவனுக்குச் சாராயம் கொடுக்கப்படவில்லை. அவன் மீண்டும் தன் வண்டிக்குச் சென்று ஏறிக்கொண்டான். குதிரைகளைத் தட்டிச் சரிசெய்தான்.

வயதானவன் எப்படி யிருப்பான் என்று நான் எண்ணினேனோ அப்படியே இருந்தான். அவன் முகத்தில் சுருக்கம் விழுந்திருக்கும். சிறிய தாடியும் இருக்கும். கூர்மையான மூக்கும் காவிபடிந்த பற்களும் இருக்கலாம் என்று எண்ணினேன். அப்படியே காணப்பட்டான். அவன் தலையில் புதிய தொப்பியை அணிந்துகொண் டிருந்தான். ஆனால் அவனுடைய உடைகள் கிழிந்தும் எண்ணெய் சிக்குப் பிடித்தும் இருந்தன. கால்களில் கனமான பூட்ஸ் அணிந்துகொண் டிருந்தான். அவனுடைய உடல் பூராவும் நடுங்கிக் கொண்டிருந்தது. அவன் குளிருக்கு அடக்கமாக இருக்க வண்டியின் ஒரு ஓரத்தில் உட்கார்ந்

திருந்தான்.

'மிட்ரிச், வா, நீயும் ஒரு கோப்பை சாராயம் பருகு. குளிருக்கு அடக்கமாக இருக்கும்' என்று ஆலோசனை கூறுபவன் வயதானவனை அழைத்தான்.

மிட்ரிச்சின் முகம் மாறிற்று. அவன் குதிரையின் லகானை வண்டியின் ஓரத்தில் கட்டினான். பிறகு தொப்பி யைச் சரி செய்துகொண்டு என்னை நோக்கி வந்தான்.

கையில் தொப்பியை எடுத்துக்கொண்டு, 'நாம் அனை வரும் இரவு பூராவும் ஒன்றாகவே வழியைத் தேடி அலைந்து கொண்டிருந்தோம். ஒரு கோப்பை சாராயம் பருக எனக் குப் பணம் கொடுக்கமாட்டீர்களா? சாராயம் பருகினால் தான் குளிருக்கு அடக்கமாக இருக்கும்' என்றான் மிட்ரிச்.

அவனிடம் கால் ரூபிள் கொடுத்தேன். விடுதிக்காரன் ஒரு சிறு கோப்பையில் சாராயம் கொண்டுவந்து மிட்ரிச் சிடம் கொடுத்தான்.

மிட்ரிச் தன் கை உறையை எடுத்து அதனுடன் சாட்டையையும் இடுப்பில் செருகிக்கொண்டான். பிறகு சாராயக் கோப்பையைக் கையில் வாங்கினான். ஆனால் அவனுடைய விரல்கள் அவனுக்குச் சொந்தமில்லாதது போல கோப்பையைக்கூடப் பற்றிக்கொள்ள மறுத்தன. அவனால் சாராயக் கோப்பையை பற்றிக்கொள்ள முடிய வில்லை. அதைப் பனித் தரையில் போட்டுவிட்டான்.

வண்டிக்காரர்கள் அனைவரும் அதைக் கண்டு நகைத்தார்கள்.

'பாருங்கள், மிட்ரிச் எப்படி பனியில் விறைத்துப் போயிருக்கிறான்? அவனால் சாராயக் கோப்பையைக்கூடப் பற்றிக்கொள்ள முடியவில்லை.'

சாராயம் கீழே போனதுபற்றி மிட்ரிச் மனவேதனை அடைந்தான்.

ஆனால் மற்ற வண்டிக்காரர்கள் வேறு ஒரு கோப்பை யில் சாராயம் கொண்டு வந்து மிட்ரிச்சின் வாயில் ஊற்றி னார்கள். சாராயம் உள்ளே சென்றதும் மிட்ரிச் உணர்வு பெற்றான். அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. உடன் மிட்ரிச் விடுதியினுள் ஓடினான். அவனுடைய சுங்கானைப் பற்ற வைத்துக் கொண்டு வெளியே வந்தான். வாயைத் திறந்து காவி படிந்த பற்களைக் காட்டி அனைவருக்கும் நன்றி தெரிவித்தான். கடைசி கோப்பை சாராயத்தைப்

பருகியபின் வண்டிக்காரர்கள் திரும்பி வந்தார்கள்.

பனி வெண்மையாகவும் பிரகாசமாகவும் இருந்தது. அதைப் பார்த்துக்கொண்டிருந்தாலே கண் பார்வை மங்கிவிடும் போலத் தோன்றிற்று. கீழ்த்திசையில் காணப்பட்ட சிவந்த கோளம் மெள்ள மேலே வந்தது. வர வர அது பிரகாசமாகவும் காணப்பட்டது. சூரியனின் சிவந்த வட்டவடிவம் இப்பொழுது நன்ருகத் தெரிந்தது. ஆகாயம் மாசு மாறுவற்றும், நல்ல நீல நிறத்துடனும் இருந்தது. பாதையில் வண்டித்தடம் நன்ருகத் தெரிந்தது. அங்கும் இங்குமாகச் சில இடங்களில் பாதை மேடும்பள்ளமுமாக இருந்தது. அதனுல் எங்கள் வண்டியும் அடிக்கடி தூக்கி வாரிப்போட்டது. அச்சமயம் என் மனம் அமைதியாக இருந்தது. சூரிய ஒளியையும், நல்ல காற்றையும் கண்டு நான் மகிழ்ச்சியடைந்தேன்.

என்னுடைய வண்டி வெகு வேகமாகச் சென்றது. குதிரைகளின் தலைகளும், அதில் போர்த்தியிருந்த துணியும் அடிக்கடி அப்படியும் இப்படியுமாகப் போயிற்று. வண்டியில் பூட்டப்படாத குதிரைகள் பின்னுலேயே ஓடி வந்தன.

இக்னுஷ்கா சந்தோஷமாகக் கூப்பாடு போட்டான். உறைந்த பனி, வண்டியின் வளைவினுல் பிளந்து சிதறிற்று. எங்களுக்குப் பின்னுல் இரண்டு மணி ஒலித்துக் கொண்டிருந்தன. சாராய போதையுடனிருந்த வண்டிக்காரர்கள் கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தார்கள். நான் திரும்பிப் பார்த்தேன். சாம்பல் நிறக்குதிரை பனி உறைந்த பாதையில் தாவி வந்து கொண்டிருந்தது. பிலிப் சாட்டையை மற்ரெரு கையில் பிடித்துத் தொப்பியைச் சரி செய்து கொண்டிருந்தான். வயதானவன் கால்களை வெளியே விட்டுப் படுத்துக் கொண்டிருந்தான்.

இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு என் வண்டி பிரயாண வண்டி நிலையத்தினுள் நுழைந்தது இக்னுஷ்கா என் பக்கம் திரும்பினுன். பனி படிந்த அவன் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. 'உங்களைக் கொண்டு சேர்த்து விட்டோம்!' என்ருன்.

(1856)

# 6. விதி

1882—ம் ஆண்டு மே மாதம் 3—ந்தேதி நாட்டர்டாம் டெஸ் வென்ட் என்ற கப்பல் ஹாவரி துறைமுகத்திலிருந்து சீனு தேசத்திற்குப் புறப்பட்டது. ஏற்றி வந்த பொருள்களைச்சீனுவில் இறக்கிவிட்டு போனியஸ் அய்ரீஸுக்குச் சாமான்களை ஏற்றிக் கொண்டு கிளம்பிற்று. அங்கு அவற்றை இறக்கிற்று. மீண்டும் புதிய சாமான்களை ஏற்றிக் கொண்டு பிரேஸலுக்குப் பயணமாயிற்று.

வெகுதூரப் பிரயாணத்துடன் கப்பல் பல இடங்களில் பழுது பார்ப்பதற்காக நிற்க வேண்டியதாயிற்று. அத்துடன் புயல்போன்ற இயற்கையின் தடங்கல் காரணமாகவும் அது தொடர்ந்து தன் பிரயாணத்தைச் செய்ய முடியவில்லை. சுமார் நான்கு வருஷத்திற்குப் பிறகு அக் கப்பல் பிரான்ஸ் தேசத்திற்குத் திரும்பிவந்தது. 1886—ம் ஆண்டு மே மாதம் 8—ந்தேதி நாட்டர்டாம் டெஸ் வென்ட், டப்பாக்களில் அடைக்கப்பட்ட அமெரிக்கப் பழங்களுடன் மார்ஸெயில்ஸ் துறைமுகத்திற்கு வந்துசேர்ந்தது.

ஹார்வி துறைமுகத்தைவிட்டுக் கிளம்பியபோது கப்பல் தலைவன், அவனுடைய உதவியாளன், பதினுன்கு மாலுமிகள் ஆகியோரே நாட்டர்டாம் டெஸ்வென்ட் கப்பலில் இருந்தார்கள். பிரயாணத்தின் போது ஒரு மாலுமி இறந்து விட்டான். பல வேலைகளில் ஈடுபட்ட நால்வர் காணுமல் போய்விட்டனர். பிரான்ஸ் தேசத்தை விட்டுப் புறப்பட்டவர்களில் ஒன்பது பேரே உயிருடன் ஊர் திரும்பினர். இழந்த மனிதர்களுக்குப் பதிலாக இரண்டு அமெரிக்க தேசத்தவர்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டனர். மற்றும் சிங்கப்பூர் மதுக்கடையில் குடி போதையிலிருந்த நீகிரோ ஒருவனையும், ஸ்வீடிஷ் தேசத்தவன் ஒருவனையும் சேர்த்துக் கொணடார்கள்.

துறைமுகத்தைக் கப்பல் நெருங்கிற்று. பாய்களைச் சுற்றி இழுத்துக் கட்டினுர்கள். ஒரு படகு வந்து கப்பலை இழுத்துக்கொண்டு சென்று கப்பல்களின் வரிசை

யில் நிறுத்திற்று. கடல் அமைதியாக இருந்தது. ஓரத்தில் தான் சிறு அலைகள் அடித்துக் கொண்டிருந்தன. எல்லா தேசத்தின் சிறிய பெரிய கப்பல்களும் அந்தத் துறை முகத்தில் நின்றிருந்தன. இத்தாலிய தேசத்துக் கப்பலுக்கும் ஆங்கிலநாட்டுக் கப்பலுக்கும் மத்தியில் நாட்டர்டாம் டெஸ்வென்ட் நின்றிருந்தது.

துறைமுக சுங்க அதிகாரிகளின், பரிசோதனைகளும் விசாரணைகளும் முடிந்ததும் மாலுமிகளையும் மற்றவர்களையும் ஊருக்குள் சென்றுவரக் கப்பல் தலைவன் அனுமதி அளித்தான்.

வெயில் காலம். புழுக்கம் அதிகமாக யிருந்தது. தெரு விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. கூட்டம் கூட்டமாக மக்கள் போய்க்கொண்டிருந்தார்கள். மக்களின் பேச்சரவத்துடன் வீடுகளில் தயாரிக்கும் உணவு வகைகளின் வாசனையும் கலந்து தெருவில் போவோர் வருவோரைத் திகைக்கச் செய்தது.

நாட்டர்டாம் கப்பலின் மாலுமிகள் கரைக்குச் சென்று நான்குமாதங்களாகின்றன. இப்பொழுது அவர்கள் ஊருக்குள் போய் வர அனுமதி கிடைத்ததும் இருவர் இருவராகக் கைகோர்த்துச் சந்தோஷமாகப் புறப்பட்டனர். சகமாலுமியான சிலாஸ்டைன் என்பவன் தலைவனைப் போல் முன்னால் சென்றான். எதையோ தேடிக் கண்டு பிடிக்க நாய் மோப்பம் பிடிப்பது போல் அவர்கள் துறை முகத்திற் கருகாமையி லிருக்கும் தெருக்களில் சுற்றி அலைந்தனர். மேலும் கடந்த நான்கு மாதங்களாக அவர்கள் ஒரு பெண்ணின் முகத்தைகூடப் பார்த்தது கிடையாது. சிலாஸ்டைன் தான் எப்பொழுதும் சகாக்களுக்குத் தலைவனைப் போல் நடந்து கொள்வான். அன்றும் அவனே தன் சகாக்களை அழைத்துக்கொண்டு நடந்தான். சரியான இடத்தைத் தேர்ந்தெடுக்கவும் அவனுக்குத் தெரியும். அவசியமானபோது அதிலிருந்து வெளியேறவும் தெரியும். மாலுமிகள் கரையிறங்கியதும் வழக்கமாகச் செல்லும் இடங்களைத் தவிர்த்தான். ஆனால் அவனும் அவனுடைய சகாக்களும் உல்லாசமாகப் பொழுது போக்கும்படியான இடத்தை நோக்கி நடந்தான்.

கடலில் கலக்கச் செல்லும் கால்வாய்களைப் போன்ற சாராய நாற்றம் வீசும் தெருக்களில் அவர்கள் சுற்றி அலைந்

தார்கள். கடைசியாக சிலேஸ்டைன் குறுகலான தெருப் பக்கமாகத் திரும்பினுன். அங்கு வீட்டின் முன்புறங்களில் விளக்குகள் பிரகாசமாக எரிந்துகொண் டிருந்தன. மற்ற மாலுமிகளும் சந்தோஷமாகப் பாடிக்கொண்டே அவனைப் பின்தொடர்ந்தனா.

வீட்டின் முன்னுல் பெரிய வர்ண விளக்குகள் எரிந்து கொண் டிருந்தன.அவற்றில் வீட்டின் இலக்கமும் வரையப் பட்டிருந்தது. கதவுக்கருகில் பிரம்பு நாற்காலிகளில் பெண்கள் நன்ருக அலங்காரம் செய்து கொண்டு உட்கார்ந் திருந்தனர். மாலுமிகளைக் கண்டதும் அவர்கள் பாய்ந் தோடி வந்தார்கள். வழியை மறைத்து ஒவ்வொருத்தியும் மாலுமிகளைத் தங்கள் வாடிக்கைக்காரர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள்.

அதேசமயம் வீட்டின் உட்புறத்திலிருந்த கதவு ஒன்று திறந்தது அதிலிருந்து நிர்வாணமாக இருப்பது போன்ற உடை உடுத்திய ஒருத்தி தோன்றினுள். அவள் பாதி அங்கங்கள் தெரியும்படியான உடையில் சரிகைப் பூவேலை கள் செய்யப்பட் டிருந்தது.

'வாருங்கள், இங்கே வாருங்கள்' என்று சிலர் தூரத்தி லிருந்தே கூவினுர்கள். சிலர், மாலுமிகள் அருகில் விரைந்து சென்று அவர்களைப் பற்றித் தங்களுடைய குகைகளுக்கு இழுத்தார்கள். தன்னைவிட அதிக பலமுள்ளதாகயிருக் கும் ஈயைச் சிலந்தி கொட்டுவது போல் ஒருவனை ஒருத்தி மெல்ல அடித்தாள். அகப்பட்டுக் கொண்டவன் அவள் பிடியிலிருந்து விடுபடப் போராடினுன். சிலேஸ்டைனுடன் வந்தவர்கள் என்ன நடக்கிறது என்று பார்க்க சற்று நின்ருர்கள். அதைக் கண்ட சிலேஸ்டைன் 'இங்கில்லை. இன்னும் சிறிது தூரம் போகவேண்டும். வாருங்கள்' என்று கத்தினுன்.

பெண்ணின் பிடியில் அகப்பட்டவன் பலமாகப் போராடித் தன்னை விடுவித்துக் கொண்டான். மற்றவர் களுடன் அவனும் சிலேஸ்டைனைப் பின்தொடர்ந்தான். தன் பிடியிலிருந்து பறவை விடுபட்டதைக் கண்ட அந்த மங்கை ஆத்திரமடைந்தாள். அவள் வாயில் வந்தபடி அவனை ஏசினுள். இக்குரலைக் கேட்டு வீட்டிலிருந்த மற்ற பெண்களும் வெளியில் ஓடி வந்தார்கள். மாலுமிகளைத் தங்கள் பக்கம் ஈர்க்க முயன்ருர்கள். தங்களுடைய உடை

களையும், உடலழகையும் வர்ணித்தார்கள். ஆனால் மாலுமிகள் அவற்றைக் கவனியாதவர்களைப் போல மேலே நடந்து கொண்டிருந்தார்கள். வழியில் சிப்பாயையோ, குமாஸ்தாவையோ அவர்கள் சந்தித்தார்கள். பக்கத்துத் தெருக்களிலும் அதே போன்று வீடுகளின் முன்னால் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. மாலுமிகள் மேலும் நடந்து கொண்டிருந்தார்கள். தெருக்களில் நாற்றம் மூக்கைத் துளைத்தது. கடைசியாக மற்ற வீடுகளைவிட நல்ல முறையில் காணப்பட்ட வீட்டின் முன்னால் சிலேஸ்டைன் நின்றான். அவன் அவ்வீட்டினுள் சென்றதும் அவனுடைய சகாக்களும் பின்னால் சென்றார்கள்.

**வீ**ட்டின் முன்ஹாலில் மாலுமிகள் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவர்கள் தேர்ந்தெடுத்த மங்கைகள் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார்கள். தேர்ந்தெடுக்கப்பட்ட பெண்கள் அன்று பூராவும் அவர்களை விட்டுப் பிரியாதிருப்பதே வழக்கம்.

மூன்று மேஜைகள் இருந்தன. அதன் முன் எல்லா மாலுமிகளும் உட்கார்ந்து கொண்டனர். முதலில் ஒரு கோப்பை சாராயம் பருகினார்கள். அவர்களுடன் இருந்த மங்கையர்களும் மது அருந்தினர். பிறகு அனைவரும் எழுந்து மாடிக்குச் சென்றார்கள். ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தனித்தனியான அறைகளுக்குப் போனார்கள். அங்கிருந்து மீண்டும் கீழே இறங்கி வந்தார்கள். மீண்டும் சாராயம் பருகிவிட்டு மாடிக்குச் சென்றார்கள்.

பணத்தை அவர்கள் கண்மூடித்தனமாகச் செலவு செய்தார்கள். ஆறுமாதச் சம்பளத்தை அவர்கள் நான்கு மணி நேர தீய செயலில் செலவழித்தார்கள். இரவு பதினொரு மணிக்கெல்லாம் அவர்கள் அனைவரும் மது போதையில் மூழ்கினார்கள். கண்கள் சிவக்கத் தாங்கள் என்ன சொல்கிறோம் என்பது கூடத் தெரியாமல் கூப்பாடு போட்டார்கள். ஆடினார்கள், பாடினார்கள். மேஜையை அடிக்கடி குத்தினார்கள். சாராயத்தை மேலும் பருகினார்கள். அவர்களுடன் சிலேஸ்டைனும் இருந்தான். அவன் பக்கத்தில் சிவந்த கன்னங்களையுடைய பருத்த மங்கை ஒருத்தி

உட்கார்ந்திருந்தாள். அவனும் மற்றவர்களைப்போல் சாராயம் பருகியிருந்தான். ஆனால் அவனுக்கு போதைதான் அதிகமாக ஏற்படவில்லை. அவனது சிந்தனையில் ஏதோ தொடர்பற்ற எண்ணங்கள் சுழன்றுகொண் டிருந்தன. அவன் அமைதியாகத் தன்னுடனிருக்கும் மங்கையிடம் எதையோ சொல்ல சிந்தித்துக்கொண் டிருந்தான். ஒரு முறை அவன் சிந்தனையிலிருந்து மறைந்தது மீண்டும் நினைவுக்கு வரவில்லை போல் தோன்றிற்று.

அவன் சிரித்துக் கொண்டே 'ஆமாம்....அதேதான்.... நீ இங்கு வெகு நாட்களாக இருக்கிறாயா?' என்று கேட்டான்.

'ஆறு மாதமாக யிருக்கிறேன்' என்றாள் அவள்.

சிலேஸ்டைன் தலையை அசைத்தான். 'இங்கு உனக்குக் கஷ்டமில்லாமல் இருக்கிறதா?'

அவள் சிறிது நேரம் எதையோ சிந்தித்தாள். 'எனக்குப் பழக்கமாகிவிட்டது. ஒருவர் எப்படியாவது வாழ்க்கை நடத்த வேண்டும். சலவைத்தொழிற்சாலையிலோ மற்றும் எங்கோ வேலை செய்வதைவிட இது மேலானது.'

அவள் சொன்னதை ஒப்புக்கொண்டவன் போல் சிலேஸ்டைன் தலையை ஆட்டினான். 'உன் பிறந்த ஊர் எது? இந்தப் பக்கம்தானா?'

அவள் தலையை அசைத்தாள்.

'உன் ஊர் வெகு தூரத்திலிருக்கிறதா?' என்று சிலேஸ்டைன் கேட்டான்.

அவள் உற்றுப் பார்த்தாள்.

'எந்த ஊர்?'

நினைவில்லாதவளைப் போல் அவள் தயங்கினாள்.

'பர்பிக்னன் பகுதியைச் சேர்ந்தவள்' என்றாள் அவள்.

'ஆமாம், ஆமாம்' என்றான் சிலேஸ்டைன். அத்துடன் கேள்வி கேட்பதையும் விட்டு விட்டான்.

'நீங்கள் என்ன மாலுமியா?' என்று அவள் பதிலுக்குக் கேள்வி கேட்கத் தொடங்கினாள்.

'ஆமாம். நாங்கள் மாலுமிகள் தான்.'

'நீங்கள் வெகு தூரம் பிரயாணம் செய்து திரும்பியிருக்கிறீர்களா?'

'ஆமாம். வெகு தூரம். கிட்டத்தட்ட எல்லா ஊர்களையும் பார்த்து விட்டோம்.

'உலகம் பூராவும் சுற்றி யிருக்கிறீர்களா?'

'ஆமாம். ஒருமுறையல்ல. இரண்டு முறை சுற்றி யிருக்கிறோம்.'

அவள் எதையோ நினைவுபடுத்திக் கொண்டவள் போல் சிறிது நேரம் மௌனமாக யிருந்தாள். 'நீங்கள் வழியில் பல கப்பல்களைப் பார்த்திருப்பீர்கள்?'

'பார்த்தோம்.'

'நாட்டர்டாம் டெஸ் வென்ட் என்ற கப்பலைப் பார்த்திருக்கிறீர்களா?'

அவன் வேலை செய்து கொண்டிருக்கும் கப்பலின் பெயரை அவள் சொன்னது கேட்டு சிலேஸ்டைன் ஆச்சரியமடைந்தான். உடனே அவன் தந்திரத்தைக் கையாளத் தொடங்கினான். 'ஏன்? பார்த்திருக்கிறோம். சென்ற வாரம் தான் அக்கப்பலைப் பார்த்தோம்''

'நீங்கள் சொல்வது உண்மையா?' என்று அவள் கேட்டாள். அவள் முகம் வெளுத்தது.

'உண்மைதான்!'

'பொய் இல்லையே?'

'கடவுள் ஆணையாகச் சொல்கிறேன். நான் சொன்னது உண்மைதான்!'

'அக்கப்பலில் வேலை செய்துவந்த சிலேஸ்டைன் என்பவனைச் சந்தித்திருக்கிறீர்களா?

'சிலேஸ்டைனா?' என்று சிலேஸ்டைன் திரும்பச் சொன்னான். அவன் திடுக்கிட்டான். அவளுக்குத் தன் பெயர் எப்படித் தெரிந்தது என்று ஆச்சரியப்பட்டான்.

'ஏன்? உனக்கு அவனைத் தெரியுமா?' என்று சிலேஸ்டைன் கேட்டான்.

அவன் கேள்வியினால் அவள் திடுக்கிட்டாள். 'இல்லை. எனக்குத் தெரியாது. இங்கு ஒருத்தி யிருக்கிறாள். அவளுக்கு அவனைத் தெரியும்.'

'யார் அவள்? இந்த வீட்டிலா இருக்கிறாள்?'

'இல்லை. சிறிது தூரத்தில் இருக்கிறாள்.'

'எங்கே யிருக்கிறாள்?'

'வெகு அருகாமையில்தான்!'

'அவள் யார்?'

'ஒரு பெண்—என்னைப் போன்றவள்தான்.'

'சிலேஸ்டைனிடம் அவளுக்கு என்ன வேண்டும்?'

'அது எனக்கு எப்படித் தெரியும்? அவர்கள் இருவரும் ஒரு ஊரைச் சேர்ந்தவர்களாக யிருக்கலாம்.'

அவர்கள் இருவரும் அவர்களுடைய கண்களில் தேடினார்கள்.

'நான் அந்தப் பெண்மணியைப் பார்க்க விரும்புகிறேன்' என்றான் சிலேஸ்டைன்.

'ஏன்? அவளிடம் ஏதாவது சொல்ல வேண்டுமா?' என்று அவள் கேட்டாள்.

'ஆமாம். சொல்ல வேண்டும்!'

'என்ன சொல்ல வேண்டும்?'

'சிலேஸ்டைனைச் சந்தித்தேன் என்று சொல்ல வேண்டும்.'

'நீங்கள் சிலேஸ்டைனைச் சந்தித்தீர்களா? அவன் சுகமாக யிருக்கிறானா? உயிருடன் இருக்கிறானா?'

'சுகமாக யிருக்கிறான். அவன் உனக்கு என்ன வேண்டும்?'

அவள் எதையோ நினைவுபடுத்திக் கொள்பவள்போல் மௌனமாக யிருந்தாள். பிறகு மெல்லிய குரலில் 'நாட்டாம் எந்தத் துறைமுகத்திற்குப் போய்க்கொண்டிருந்தது? என்று கேட்டாள்.

'எந்தத் துறைமுகமா? ஏன்? மார்ஸெயில்ஸ்!'

'நீங்கள் சொல்வது உண்மையா?'

'உண்மைதான்!'

'உங்களுக்குச் சிலேஸ்டைனைத் தெரியுமா?'

'அவனை எனக்குத் தெரியும் என்று முன்னமேயே சொல்லியிருக்கிறேன்.'

அவள் சிறிது நேரம் மௌனமாகச் சிந்தித்தாள். 'ஆமாம். ஆமாம். சரிதான்' என்றாள்.

'அவனிடம் உனக்கு என்ன ஆகவேண்டும்?'

'அவனைப் பார்த்தால் சொல்லுங்கள். வேண்டாம். சொல்ல வேண்டாம்'

'என்ன சொல்ல வேண்டும்?'

'வேண்டாம்.'

அவளையே உற்றுப் பார்த்தான் சிலேஸ்டைன். அவ

னுக்கு ஆத்திரம் அதிகரித்தது. 'உனக்கு அவனைத் தெரியுமா?'

'இல்லை. எனக்கு அவனைத் தெரியாது'

'அப்படியானால் அவனைப் பற்றிக் கேட்பானேன்?'

அவள் பதில் சொல்லவில்லை. ஆனால் துள்ளி எழுந்து மற்றவர்கள் உட்கார்ந்திருக்குமிடத்திற்குச் சென்றாள். மேஜை மீதிருந்து ஒரு எலுமிச்சம் பழத்தை எடுத்து நறுக்கினாள். பாதிப் பழத்தின் சாறை ஒரு டம்ளரில் பிழிந்தாள். அத்துடன் சிறிது தண்ணீரை விட்டு எடுத்து வந்து சிலேஸ்டைனிடம் கொடுத்தாள். 'பருகுங்கள்' என்று சொல்லி முன்போலவே அவன் எதிரில் உட்கார்ந்து கொண்டாள்.

'எதற்காகக் குடிக்க வேண்டும்?' என்று டம்ளரைக் கையில் வாங்கிக்கொண்டு சிலேஸ்டைன் கேட்டான்.

'உங்கள் மது மயக்கம் தெளிவதற்காகப் பருகுங்கள், பிறகு உங்களிடம் சிலவற்றைக் கூறுகிறேன்.'

அவன் அதைப் பருகினான். புறங் கையால் வாயைத் துடைத்துக் கொண்டான். 'நல்லது இப்பொழுது சொல்லு.'

'அவனிடம் என்னைப் பார்த்ததாகவோ, யார் உங்களுக்கு இந்த விஷயத்தைச் சொன்னார்கள் என்றோ கூறக் கூடாது'

'நல்லது. அப்படியே செய்கிறேன்'

'சத்தியமாக!'

சிலேஸ்டைன் சத்தியம் செய்தான்.

'அவனுடைய தாயாரும் தகப்பனாரும் இறந்து விட்டார்கள் என்று சொல்லுங்கள். அவனுடைய சகோதரனும் இறந்து விட்டான் என்றும் சொல்லுங்கள். ஊரில் ஒரு ஜுரம் பரவிற்று. ஒரே மாதத்தில் மூவரும் இறந்து விட்டார்கள்.'

சிலேஸ்டைனுக்குத் தலை சுழல்வது போலத் தோன்றிற்று. சிறிது நேரம் அவன் மௌனமாக யிருந்தான். அவனுக்கு என்ன சொல்வதென்றே தோன்றவில்லை. 'இது உண்மையா?' என்று மட்டும் கேட்டான்.

'உண்மை தான்!'

'உனக்கு யார் சொன்னது?'

அவள் சிலேஸ்டைன் கழுத்தில் கையைப் போட்டு

அவன் கண்களையே உற்றுப் பார்த்தாள், 'இதை யாரிடமும் சொல்ல மாட்டீர்களே?'

'கடவுள் ஆணையாக யாரிடமும் சொல்ல மாட்டேன்'

'நான் சிலேஸ்டைனின் சகோதரி' உடனே 'பிராங்காயிஸ்' என்று சிலேஸ்டைன் கத்தினான்,

அவள் அவனையே உற்று பார்த்தாள். அவளுடைய உதடுகள் மெள்ள அசைந்தன. 'நீ சிலேஸ்டைன் தானே?' என்றாள்.

இருவரும் அசையாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அவர்களைச் சுற்றியிருந்தவர்கள் மது மயக்கத்தில் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தார்கள். கண்ணாடி டம்ளர்கள் இடிபடும் ஓசையும் கைகளாலும் கால்களாலும் தட்டும் சப்தமும் கேட்டது. அத்துடன் பெண்களின் கூக்குரலும் பாட்டும் சேர்ந்து கொண்டது.

'இது எப்படி?' என்று சிலேஸ்டைன் கேட்டான். அவன் கேட்டதை பிராங்காயிஸ் தெரிந்து கொண்டாள். அவளுடைய கண்களில் நீர் சுரந்தது.

'அவர்கள் இறந்து விட்டார்கள். ஒரே மாதத்தில் மூவரும் இறந்து போனார்கள். நான் தனியாக விடப்பட்டேன். என்ன செய்வது? மருந்துக் கடைக்காரன், வைத்தியர், ஈமச்சடங்கு ஆகியவற்றிற்காக வீட்டுச் சாமான்கள் அனைத்தையும் விற்க வேண்டியதாயிற்று. நான் உடுத்திக் கொண்டிருந்த உடையைத்தவிர எல்லாவற்றையும் விற்றுக் கடனை அடைத்தேன். காசக்ஸ் என்ற பணக்காரனிடம் நான் வேலைக்குச் சென்றேன். - அவனை உனக்குத் தெரியுமா? ஒல்லியாக யிருப்பான்!' அப்பொழுது எனக்குப் பதினைந்து வயதுதான் ஆகியிருந்தது. நீ வீட்டைவிட்டுப் போகும் சமயம் எனக்குப் பதினன்கு வயது நிரம்பியிருந்தது. அவனுடன் நான் தவறான முறையில் நடந்து கொண்டேன். கிராமப்பெண்களே ஒன்று மறியாதவர்கள். பிறகு நான் ஒரு வியாபாரியின் குடும்பத்தில் தாதியாக வேலைக்கமர்ந்தேன். அந்த வீட்டு எஜமானனிடமும் அதே கதை தான். நான் கற்பை இழந்தேன். சில காலம் அவன் என்னைத் தனியிடத்தில் வைத்துக் காப்பாற்றினான். அது வெகு நாட்கள் நீடிக்கவில்லை. அவன் என்னை விட்டுச் சென்றான். மூன்று நாட்கள் நான் சாப்பாடுகூட இல்லா

மல் கிடந்தேன். என்னை யாரும் வேலைக்குச் சேர்த்துக் கொள்ளவில்லை. அதனால் இங்குள்ள மற்றவர்களைப் போல் வந்து சேர்ந்து விட்டேன்' என்றாள். அவள் கண்களில் ஆறு போல் நீர் பெருகிற்று.

'இப்பொழுது நாம் என்ன செய்வது?' என்று கேட்டான் சிலேஸ்டைன்.

'நீயும் இறந்து விட்டாய் என்றே நான் எண்ணினேன். வேறு விதமாக நான் எப்படி நினைத்திருக்க முடியும்?' என்று பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டே சொன்னாள் பிராங்காயிஸ்

'என்னை உனக்கு எப்படித் தெரியாமல் போய் விட்டது?' என்று மெல்லிய குரலில் கேட்டான்.

'எனக்குத் தெரியாது. அது என் தவறில்லை' என்று மேலும் அழுது கொண்டே சொன்னாள் பிராங்காயிஸ்.

'உன்னை நான் எப்படித் தெரிந்து கொண்டிருக்க முடியும்? நான் வீட்டை விட்டுப் போகும் சமயம் நீ வேறு விதமாக யிருந்தாய். ஆனால் நீ என்னை அடையாளம் கண்டு கொண்டிருக்கலாம்.'

பிராங்காயிஸ் நம்பிக்கையிழந்த நிலையில் அவன் தோளில் கையைப் போட்டாள்.

'நான் தினமும் பலரைப் பார்க்கிறேன். எல்லோரும் எனக்கு ஒரே விதமாகத்தான் காணப்படுகிறார்கள்' என்றாள் பிராங்காயிஸ்.

சிலேஸ்டைன் மனம் வேதனையடைந்தது. ஏதோ கூர்மையான ஒன்று அவன் மனதைத் தைத்தது போலத் தோன்றிற்று. அவனுக்கு வாய்விட்டு அழவேண்டும் போல இருந்தது. அவன் எழுந்தான். அவளைப் பற்றி இழுத்தான். அவள் முகத்தை தன் முரட்டுக் கரங்களால் பற்றி உற்றுப் பார்த்தான்.

மெள்ள அவனுக்கு தான் வீட்டை விட்டுப் போகும் சமயம் அவள் இருந்த நிலை நினைவிற்கு வந்தது.

'ஆமாம் நீ பிராங்காயிஸ்தான். என் சகோதரிதான்!' என்றான் சிலேஸ்டைன். திடீரென்று உரக்க அழுதான். மது மயக்கத்தில் அவனுக்கு விக்கல் ஏற்பட்டது' அவள் முகத்தை நழுவவிட்டான். பிராங்காயிஸின் தலை மேஜையில் மோதி கண்ணாடி டம்ளர்கள் கீழே விழுந்து உடைந்தன.

சிலேஸ்டைடனின் சகாக்கள் ஆச்சரியத்துடன் அவனையே பார்த்தார்கள்.

'அவன் எப்படித் தள்ளாடுகிறான் பார்' என்றான் ஒருவன்.

'சப்தம் போடாதே' என்றான் வேறு ஒருவன்.

'என்ன சிலேஸ்டைன், ஏன் கத்துகிறாய்? மாடிக்குப் போகலாம் வா!' என்றான் மூன்றாமவன். அவன் சிலேஸ்டைனின் சொக்காயைப் பற்றி இழுத்தான். மற்றவர்கள் சிலேஸ்டைனின் பக்கத்திலிருந்த பிராங்காயிஸைப் பார்த்துச் சிரித்தார்கள்.

சிலேஸ்டைன் அழுவதை நிறுத்தினான். அவன் தன்னைத் திடப்படுத்திக் கொண்டு சகாக்களைப் பார்த்தான். பிறகு சண்டை போடத் தயாராக முன்னேறுவது போல் மற்ற மாலுமிகள் அருகில் சென்றான். அவர்கள் அணைப்பிலிருந்த பெண்களைப் பலமாக விடுவித்தான்.

'தூரவிலகிப் போங்கள். அவள் உங்களுடைய சகோதரி என்று தெரியவில்லையா? ஒவ்வொருத்தியும் யாரோ ஒருவனுடைய சகோதரி. இதோ பார் என் சகோதரி பிராங்காயிஸ் ஹா ஹா ஹா...!' என்று உரக்கச் சிரிக்கத் தொடங்கினான். பிறகு தள்ளாடிக் கொண்டே கைகளை மேலே உயர்த்தினான். அப்படியே தரையில் சாய்ந்தான். கைகளையும் கால்களையும் உதறிக் கொண்டான். மரணத் தருவாயில் வலிப்பு வந்தவனைப் போல் காணப்பட்டான்.

'அவனைப் படுக்கையில் கிடத்திவிட வேண்டும். அவனை அழைத்துக் கொண்டு தெருவில் சென்றால் நமக்குத்தான் கஷ்டம்' என்றான் ஒருவன்.

எல்லா மாலுமிகளுமாக சிலேஸ்டனைத் தூக்கிக் கொண்டு மாடிக்குச் சென்றார்கள். அவனைப் பிராங்காயிஸின் அறைக்குக் கொண்டு படுக்க வைத்தார்கள்.

(1892)

# 7. அஸ்ஸிரியா மன்னன்

லிலி அரசன்மீது படையெடுத்து அவன் நாட்டைக் கைப்பற்றினான் அஸ்ஸிரியாவின் மன்னன் எஸர் ஹட்டன். தோல்வியடைந்த நாட்டின் முக்கிய நகரங்களை அழித்து தீக்கிரையாக்கினான். அங்கு வசித்த மக்களைக் கைது செய்து தம் ஊருக்கு அனுப்பினான். ராணுவ வீரர்களைப் பலவிதமாகச் சித்திரவதை செய்து கொன்றான். லிலி அரசரையும் கைது செய்து ஒரு கூண்டில் அடைத்தான்

அதன் பிறகு ஒரு நாள் இரவு அஸ்ஸிரியா மன்னன் எஸர் ஹட்டன் படுக்கையில் கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தான். அவன் லிலி அரசனுக்கு எப்படி மரண தண்டனை அளிப்பது என்று சிந்தித்துக் கொண்டிருந்தான். அச்சமயம் அவன் படுக்கையருகில் ஏதோ சலசலப்புச் சப்தம் கேட்டது. உடனே அவன் கண்களைத் திறந்து பார்த்தான். அவன், நீண்ட நரைத்த தாடியும், அமைதியின் பிறப்பிடம் போன்ற கண்களும் உள்ள ஒரு வயதானவன் நிற்பதைக் கண்டான். 'லிலி அரசனுக்கு மரண தண்டனை அளிக்க விரும்புகிறாயா?' என்று அவர் மன்னனைக் கேட்டார்.

'ஆமாம். ஆனால் அதை எப்படி நிறைவேற்றுவது என்பதைப் பற்றி இன்னும் முடிவு செய்யவில்லை.' என்றான்.

'நீ தான் லிலி!' என்றார் வயதானவர்.

'இல்லை. அது பொய். லிலி லிலிதான். நான் நான் தான்!'

'நீயும் லிலியும் ஒருவரே தான். நான் லிலி இல்லை. லிலியும் நான் அல்ல என்று நீ நினைக்கிறாய்,

'நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? இதோ நான் நேர்த்தியான படுக்கையில் படுத்திருக்கிறேன். என்னைச் சுற்றி என் கட்டளைக்குக்கீழ்ப்படிந்து நடக்கக்கூடிய ஆண், பெண் அடிமைகள் இருக்கிறார்கள். இன்று போலவே நாளையும் நான் என் நண்பர்களுடன் விருந்து சாப்பிடுவேன். இதே சமயம் லிலி அரசன் நிலைமையைப் பாருங்கள். அவன் கூட்டிலடைக்கப்பட்ட பறவை போல கூண்டினுள் உட்கார்ந்திருக்கிறான். நாளை அவன் கழுமரத்திலேற்றப்படலாம். அவன் நாக்கை நீட்டித் துடி துடித்துக் கொண்டே உயிரை விடுவான். அவனது உடலை நாய்கள் சின்னாபின்னமாகக் கிழித்துப் போட்டுவிடும்' என்றான் மன்னன்.

'உன்னால் அவனை அழிக்க முடியாது.'

'பதினாலாயிரம் படைவீரர்களைக் கொன்று குவித்தேன். இதோ நான் உயிருடன் இருக்கிறேன். ஆனால் அவர்களோ இல்லை. இது ஒன்றே ஒரு உயிரை என்னால் அழிக்க முடியும் என்பதை நிரூபிக்கவில்லையா?'

'இப்பொழுது அவர்கள் உயிர் வாழவில்லை என்று உனக்கு எப்படித் தெரியும்?'

'அவர்களை நான் இப்பொழுது பார்க்காததினால் அவ்விதம் கூறுகிறேன். மேலும் அவர்கள் வேதனைக்குள்ளானார்கள். நானோ அப்படியில்லை. இது அவர்களுக்குக்கெடுதலானது. எனக்கோ அது நல்லது.'

'அது கூட உன் கற்பனைதான். நீ உன்னையே சித்திரவதை செய்து வேதனைக்குள்ளாக்கிக் கொண்டாயே தவிர அவர்களை இல்லை.'

'நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை.'

'தெரிந்துகொள்ள விரும்புகிறாயா?'

'ஆமாம். விரும்புகிறேன்.'

'அப்படியானால் இங்கே வா' என்று ஒரு ஊற்று நிறைய இருந்த தண்ணீரைச் சுட்டிக் காட்டினார் வயதானவர். மன்னன் எஸர் ஹட்டன் எழுந்து வயதானவர் காட்டிய ஊற்றின் அருகில் சென்றான்.

'துணிகளைக் களைந்துவிட்டு ஊற்றில் இறங்கு.'

வயதானவர் கூறியபடி எஸர் ஹட்டன் மன்னன் செய்தான். வயதானவர் ஒரு குடத்தில் நீரை மொண்டுகொண்டு 'இதை உன் தலையில் கொட்டத் தொடங்கியதும் நீ சட்டென்று ஊற்றினுள் முழுகிவிடு' என்றார்.

வயதானவர் மன்னன் எஸர் ஹட்டன் தலைமீது தண்ணீரைக் கொட்டத் தொடங்கினார். மன்னனும் உடனே ஊற்றினுள் தலையை அமிழ்த்தினான்.

தண்ணீரில் மூழ்கிய பிறகு மன்னன் எஸர்ஹட்டனுக்குத் தான் வேற்றவனாகக் காணப்பட்டான். வேறு மனிதனாகி விட்ட அவன் நேர்த்தியான படுக்கையில் உட்கார்ந்திருந்தான். அவன் அருகில் ஒரு அழகி உட்கார்ந்திருந்தாள். அதற்கு முன்னால் எஸர் ஹட்டன் அந்த அழகியைப் பார்த்ததே இல்லை ஆனால் அவள் தன்னுடைய மனைவி என்பதை உணர்ந்தான். அந்த அழகி படுக்கையிலிருந்து எழுந்து 'என் அருமை லைலி அரசரே, நேற்று நீங்கள் அதிக வேலை செய்ததன் காரணமாகக் களைத்துப்

போய் அதிக நேரம் தூங்கிவிட்டீர்கள். ஆனால் இப்பொழுது எழுந்திருங்கள். முன் ஹாலில் உங்களுக்காக இளவரசர்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள். உடை அணிந்து கொண்டு போங்கள்' என்றாள்.

அவள் சொன்னதிலிருந்து தான் லைலி அரசன் என்று மன்னன் ஸெர்ஹாட்டன் கருதினான். இது அவனுக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணவில்லை. இதைமுன்னதாக உணராமல் போனேமே என்று வியந்தான். அவன் ஆடை அணிந்து இளவரசர்களிருக்குமிடம் சென்றான்.

லைலி அரசனை இளவரசர்கள் தரை வரை குனிந்து வணங்கினார்கள். எல்லோரிலும் மூத்தவனாக உள்ள இளவரசன் பேசத்தொடங்கினான். 'கேவலமான எஸர் ஹாட்டன் தங்களை அவமானப்படுத்திக் கொண்டிருப்பதை இனி பொறுக்கமுடியாது. உடனே அவன் மீது போர் தொடுக்கவேண்டும்' என்றான்.

ஆனால் அரசன் லைலியோ இளவரசன் சொன்னதை ஆதரிக்கவில்லை. தம் தூதர்களை அழைத்து மன்னன் எஸர் ஹாட்டனிடம் சென்று குறைகளைச் சொல்லும்படி உத்தரவிட்டான்.

அறிவாளிகளாகவும், நல்லவர்களாகவும் உள்ள பலரைத் தூதர்களாக நியமித்தான் அரசன் லைலி. பிறகு அவர்கள் எஸர் ஹாட்டன் மன்னனிடம் என்ன சொல்ல வேண்டும் என்பதைக் கூறினான். இந்த வேலையை முடித்ததும் லைலி அரசனாகத் தான் கருதிய எஸர்ஹாட்டன் மன்னன் காட்டுக் கழுதைகளை வேட்டையாடப் புறப்பட்டான்.

மன்னன் இரண்டு கழுதைகளை வேட்டையில் கொன்றான். வீடுதிரும்பி நண்பர்களுடன் விருந்துண்டான். அடிமைப் பெண்களின் நடனத்தைப் பார்த்தான்.

மறுநாள் மன்னன் சபைக்குச் சென்றான். அங்கு அவனுக்காக மனுதாரர்களும், வழக்குகளும், விசாரணைக் கைதிகளும் காத்திருந்தனர். வழக்கப்படி அவன் தம்மிடம் வந்த வழக்குகளையும், மனுக்களையும் பார்த்துத் தீர்ப்புக் கூறினான். அது முடிந்ததும் அவன் தம் மனதிற்கு விருப்பமான வேட்டைக்குக் கிளம்பினான். அன்றும் வேட்டை வெற்றிகரமாகவே முடிந்தது. இச்சமயம் அவன் தன் கையாலேயே ஒரு கிழச்சிங்கத்தைக் கொன்றான். அதன் இரண்டு

குட்டிகளை எடுத்துக் கொண்டு வந்தான். வேட்டைக்குப் பிறகு அவன் நண்பர்களுடன் விருந்துண்டான். பாட்டையும் நடனத்தையும் கண்டு களித்தான். இரவு அவன் நேசித்த மனைவியுடன் இருந்து மகிழ்ந்தான்.

மன்னன் எஸர் ஹட்டனிடம் அனுப்பிய தூதர்கள் திரும்பி வரும் வரை அவன் அரச காரியங்களிலும் மனதிற்குச் சந்தோஷத்தை அளிப்பவைகளிலும் நாட்களைக் கழித்து வந்தான். எஸர் ஹட்டனுகயிருந்த அவன் தன்னிடம் அனுப்பிய தூதர்களை எதிர் நோக்கிக் கொண்டிருந்தான். ஒரு மாதத்திற்குப் பிறகு எஸர் ஹட்டனைக் காணச் சென்ற தூதர்கள் திரும்பி வந்தார்கள். அவர்களுடைய மூக்கும் காதுகளும் துண்டிக்கப் பட்டிருந்தன.

'உடனே பொன்னும், வெள்ளியும் மற்றும் விலை உயர்ந்த பொருள்களையும் கப்பமாக எடுத்துக்கொண்டு நேரில் வராவிட்டால் தூதர்களுக்கு ஏற்பட்ட கதியே லைலி அரசனுக்கும் கிடைக்கும்' என்று தூதர்களிடம் எஸர் ஹட்டன் மன்னன் சொல்லி அனுப்பியிருந்தான்.

முன்பு எஸர் ஹட்டன் மன்னனுகயிருந்த லைலி அரசன் தம் சிற்றரசர்களை அழைத்தான். அரச சபையைக் கூட்டி என்ன செய்யலாம் என்று ஆலோசனை செய்தான். எஸர் ஹட்டன்மீது உடனே போர் தொடுக்க வேண்டும். அவன் நம்மைத் தாக்கும்வரை காத்திருக்கக் கூடாது என்று அனைவரும் ஒரு முகமாகக் கூறினுர்கள். லைலி அரசன் அதற்கு இசைந்தான், அவனே படைக்குத் தலைமை தாங்கி போருக்குக் கிளம்பினுன். லைலி அரசன் குதிரை மீதேறிபடை வீரர்களுக்கு உற்சாக மூட்டிக் கொண்டு வந்தான். எட்டாவது நாள் லைலி அரசனின் படைகள் எஸர் ஹட்டன் மன்னனுடைய படைகளைச் சந்தித்தன. அவை சந்தித்த இடம் பரந்தவெளி. பக்கத்திலேயே ஒரு ஆறும் ஓடிக் கொண்டிருந்தது. லைலி அரசனின் படைகள் வீரத்துடன் போராடிக் கொண்டிருந்தன. ஆனுல் முன்பு எஸர் ஹட்டன் மன்னனுக யிருந்த லைலி அரசன் படைகள் மலை மீதிருந்து எறும்புகள் சாரை சாரையாக வருவதுபோல் வந்தன. அவை மைதானத்தையும் அவனது படையையும் சுற்றி வளைத்துக் கொண்டிருந்தன. லைலி அரசன் ரதத்தில் ஏறிப் படைகளின் மத்தியில் புகுந்து எதிரியை வெட்டி வீழ்த்திக் கொண்டிருந்தான். ஆனுல்

லலி அரசனின் படை வீரர்களோ நூற்றுக் கணக்கில் தான் இருந்தார்கள். எஸர் ஹட்டன் மன்னரின் படைகளோ ஆயிரக் கணக்கில் குவிந்து கிடந்தன. லலி அரசன் தான் அடிபட்டதாகவும் தன்னைக் கைதியாகப் பிடித்துக் கொண்டு விட்டதாகவும் எண்ணினான். அவனும் மற்ற கைதிகளும் ஒன்பது நாட்கள் வழி நடந்தார்கள். அவர்களைச் சுற்றி எஸர் ஹட்டன் மன்னனின் படை வீரர்கள் காவல் வந்தார்கள். பத்தாவது நாள் அவர்கள் நினெவா நகரத்தை அடைந்தார்கள். அங்கு லலி அரசனைக் கூண்டில் அடைத்து வைத்தார்கள்.

லலி அரசனோ பசியினாலோ, காயமுற்றதற்காகவோ, தான் கைதாகப் பிடிக்கப்பட்டு கூண்டிலடைக்கப்பட்டதற்காகவோ சிறிதும் வருந்தவில்லை தன்னை இவ்வளவு துன்பத்திற்குள்ளாக்கிய எதிரியிடம் வஞ்சம் தீர்க்க முடியாத நிலையில் இருப்பதற்காக வேதனைப் பட்டான். தான்படும் வேதனையை எதிரி பார்த்துச் சந்தோஷப் படாமலிருக்கச் செய்யத் ,தீர்மானித்தான். அதனால் அவனுக்குச் செய்யும் கொடுமைகளை பொறுத்துக் கொண் 'டிருந்தான்.

சுமார் இருபது நாட்கள் லலி அரசன் கூண்டிலேயே அடைபட்டுக் கிடந்தான். தண்டனை நிறைவேற்றப்படுவதை எதிர் நோக்கிக் கொண்டிருந்தான். நண்பர்களையும், உறவினர்களையும் தண்டனை நிறைவேற்ற அழைத்துச் செல்வதைப் பார்த்தான். அவர்கள் தண்டனையை நிறைவேற்றப்படும் சமயம் போட்ட கூச்சல்களை கேட்டான். சிலருடைய கைகளையும், சிலருடைய கால்களையும் வெட்டினார்கள். மற்றும் சிலரையோ உயிருடன் சித்திரவதை செய்யச் சொன்னார்கள் இதைக் கண்டு அரசன் மனம் தளரவில்லை. வருத்தப்பட்டதாகவோ, ஆத்திரமடைந்ததாகவோ அவன் வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை. அவனுடைய நேசத்திற்குப் பாத்திரமான மனைவி கைகளைக் கட்டி இரண்டு கோஜாக்கள் இழுத்துச் செல்வதைக் கண்டான். எஸர் ஹட்டன் மன்னனுக்கு அவளை அடிமையாக ஆக்கவே அழைத்துப் போகிறார்கள் என்பது அவனுக்குத் தெரியும். அதையும் அவன் எவ்வித முணுமுணுப்புமின்றிப் பொறுத்துக் கொண்டான்.

லலி அரசனைக் கண் காணித்து வர ஒரு சிப்பாயை நியமித்திருந்தார்கள். அவன் லலி அரசன் மௌனமாக

இருப்பதைக் கண்டு 'ஐயோ பாவம், லேலி அரசரே உங்களைக் கண்டால் வருத்தமாக யிருக்கிறது. நீங்கள் அரச பதவியில் இருந்தீர்கள். இப்பொழுது எப்படிப் பட்ட நிலையில் இருக்கிறீர்கள்?' என்முன்.

இதைக் கேட்டதும் லேலி அரசனுக்கு தான் இழந்தவை அனைத்தும் நினைவுக்கு வந்தன. அவன் கூண்டின் கம்பிகளைப்பற்றி அதில் முட்டிக் கொண்டான். தற்கொலை செய்து கொள்ள விரும்பினன். ஆனல் அவனுக்கு அப்படிச் செய்துகொள்ள சக்தியில்லாமல் போய்விட்டது. அதனல் அவன் சொல்லொணுத வருத்தத்துடன் கூக்குர லிட்டுக் கொண்டே கீழே விழுந்தான்.

கடைசியாக கொலையாளிகள் இருவர், தண்டனை அடைந்த லேலி அரசனை அடைத்திருந்த கூண்டைத் திறந்தார்கள். அவனுடைய கைகளைப் பின் புறமாக இழுத்துக் கட்டினர்கள். பிறகு கொலைக்களத்திற்கு அவனை அழைத்துச் சென்ருர்கள். கொலைக்களம் ரத்தம் தோய்ந்திருந்தது. ஒரு கூர்மையான மரம் ரத்தக் கறையுடன் இருந்தது. சற்று முன்தான் அவனுடைய நண்பன் ஒருவன் உடலை கூர்மையான அந்த மரத்திலிருந்து அப்புறப்படுத்தி யிருந்தார்கள். இப்பொழுது அந்த மரம் தனக்குப் பயன்படப் போகிறது என்பதை லேலி அரசன் உணர்ந்தான்.

கொலையாளிகள் லேலி அரசனின் ஆடைகளை அகற்றினர்கள். ஒரு சமயம் மிக அழகாகவும், திடகாத்திரத்துடனும் இருந்த உடல் மெலிந்திருப்பதைக் கண்டு அவனே திகைத்தான். இரண்டு கொலையாளிகளும் அவனது மெலிந்த தொடையைப்பற்றி இழுத்தார்கள். இருவருமாகச்சேர்ந்து கூர்மையான மரத்தில் மோத அவனைமேலே தூக்கினர்கள். 'இது தான் மரணம். அழிவு' என்று எண்ணினன் லேலி அரசன். கடைசி வரை கலங்காமல் மௌனமாகயிருக்க வேண்டும் என்று எண்ணிய அவன் 'கோ'வென்று கதறி கண்ணீர் பெருக்கினன். கருணை காட்டும்படி வேண்டினன். ஆனல் எவனும் அவன் சொல்லுக்குச் செவி சாய்க்க வில்லை.

'இது இல்லவே இல்லை. உண்மையில் நான் தூங்கிக் கொண்டிருக்கிறேன். இது வெறும் கனவு' என்று எண்ணி அவன் எழுந்திருக்க முயற்சித்தான். அப்படியே கண் விழித்து எழுந்தான். ஆனல் அப்பொழுது அவன் எஸர்

ஹட்டன் மன்னனாகவோ, கலிப் அரசனாகவோ காணப்படவில்லை. ஏதோ ஒரு பிராணியாக இருந்தான். தான் ஒரு பிராணியாக யிருப்பதையும், அதற்கு முன் அப்பிராணியை பார்த்ததில்லை என்பதையும் உணர்ந்து ஆச்சரியமடைந்தான். மிருகமாக யிருந்த அவன் மைதானத்தில் பச்சைப் புல்லைப் பற்களால் கடித்து இழுத்துக் கொண் டிருந்தான். அவனை மேலே மொய்த்துக் கொண் டிருந்த ஈக்களை விரலால் ஓட்டினான். அவனை ஒரு சாம்பல் நிறக் கழுதைக் குட்டி குதித்துக் குதித்து ஓடிக்கொண்டிருந்தது. பின்னங்கால்களை உதறிக்கொண்டு அக்கழுதை மிருகமாக யிருந்த எஸர் ஹட்டன் மன்னன் மார்பில் முட்டிப் பால் பருக முயற்சித்தது. முலைக்காம்பைக் கண்டதும் பற்றிப் பால் குடிக்கத் தொடங்கிற்று.

அச்சமயம்தான் எஸர் ஹட்டன் மன்னனுக்குத் தான் பெட்டைக் கழுதையாக யிருப்பது தெரியவந்தது. ஆனால் அது அவனுக்கு வருத்தத்தை உண்டுபண்ணவில்லை. மகிழ்ச்சியையே அளித்தது. அவனுள்ளும், குட்டியின் உடலிலும் உயிர் துடிப்பு இருப்பதைக் கண்டு சந்தோஷமான உணர்ச்சி ஒன்று ஏற்பட்டது.

ஆனால் ‘விர்’ என்ற சத்தத்துடன் ஏதோ பறந்து வந்து அவன் பக்கத்தில் விழுந்தது. அதன் கூரான முனை அவனுடைய உடலைக் கிழித்துக் கொண்டு உள்ளே பாய்ந்தது. உடனே எஸர் ஹட்டனுக்கு தீப்பற்றி எரிவது போன்று தோன்றிற்று. கழுதையாக யிருந்த அவன் குட்டியின் வாயிலிருந்த முலைக்காம்பைப் பிடுங்கிக் கொண்டு பிரிந்து வந்த மந்தையை நோக்கி வெகு வேகமாக ஓடினான். குட்டியும் அவனை விடாமல் தொடர்ந்து ஓடிவந்தது. அவை இரண்டும் மந்தையை நெருங்கும் சமயம் மற்றொரு அம்பு மிகவும் வேகமாக வந்து குட்டியின் கழுத்தில் பாய்ந்தது. உடனே குட்டியின் கழுத்திலிருந்து ரத்தம் வெள்ளம்போல் பெருகிற்று. குட்டி கீழே சாய்ந்து மனதைக் கரைக்கும் முறையில் கத்திற்று. கழுதையாகயிருந்த எஸர் ஹட்டனால் குட்டியைவிட்டு நகர முடியவில்லை. அதன் அருகிலேயே நின்று கொண்டிருந்தான். குட்டி எழுந்தது. ஆனால் அதனால் முடியவில்லை. மீண்டும் அப்படியே விழுந்துவிட்டது. அச்சமயம் பயங்கரத் தோற்றமுடைய இரண்டு கால் பிராணி—மனிதன்—ஓடி

வந்தான். அதன் கழுத்தை அறுத்துவிட்டான்.

'இது முடியாத காரியம். நடக்கவே நடக்காது. கனவு தான்' என்று எண்ணி அவன் முழு முயற்சி செய்து எழுந் தான். கண்விழிக்க முயற்சித்துக் கொண்டே 'நான் லேவி அரசனே, கழுதையோ இல்லை. எஸர் ஹட்டன் மன்னன் தான்' என்றான்.

அவன் கத்திக்கொண்டே ஊற்றிலிருந்து தலையை மேலே தூக்கினான்...வயதானவர் தன் பானையி லிருந்த தண்ணீரை அவன் தலையில் கொட்டிக் கொண்டிருந்தார்.

'அப்பப்பா, எவ்வளவு பயங்கரமான வேதனைகளை அனுபவித்தேன்! எவ்வளவு நேரம் இம்மாதிரி அனுபவித் தேனே!' என்றான் எஸர் ஹட்டன்.

'எவ்வளவுநேரமா? நீ தலையைத்தண்ணீரில் மூக்கினாய். உடனே மேலே எடுத்துவிட்டாய். என் பானையிலிருந்த தண்ணீர்கூட ஆகவில்லை பார். இப்போது உனக்குத் தெரிகிறதா?' என்று வயதானவர் கேட்டார்.

எஸர் ஹட்டன் பதிலளிக்கவில்லை.

'இப்பொழுது நீ எல்லாவற்றையும் உணர்ந்திருப்பாய் என்று நம்புகிறேன். லேவி அரசனும் நீதான். நீ கொன்று குவித்தாயே அந்தப் போர் வீரர்களும் நீயே தான். அது மாத்திரமல்ல. நீ வேட்டையில் கொன்று சமைத்து நண்பர் களுடன் விருந்துண்டாயே அந்தப் பிராணிகளும் நீயே தான். உன் உடலில் மாத்திரம் உயிர் இருப்பதாக நீ எண்ணி யிருக்கிறாய். அந்தத் தவறான எண்ணத்தைப் போக்கவே உன் கண்களை மறைத்திருக்கும் மாயத் திரையை அகற்றினேன். மற்றவர்களுக்கு நீ செய்யும் கெடுதி உனக்கே செய்துகொண்டது போலாகும் என்பதை உணர்த்தவே அவற்றைக் காட்டினேன்.

'உன்உடலிலும் மற்ற எல்லா ஜீவன்களின் உடலிலும் இருப்பது ஒரே உயிர்தான். உன் உடலில் இருப்பது அதில் ஒரு பகுதி. அதைக்கொண்டு உன் வாழ்க்கையை மேன்மை யுறவும் செய்யலாம். கெடுக்கவும் கெடுக்கலாம் அதை அதிகரிக்கச் செய்யலாம். அல்லது அடியோடு நாசப்படுத்தி விடலாம். உன்னை மற்றவர்களிடமிருந்து பிரிக்கும் பிரிவினை சக்திகளைத் தகர்த்தெறிந்து, உன்னைப் போலவே மற்றவர்களைக் கருதி, அவர்களை நேசிப்பதன் மூலமே உன்

வாழ்வை மேன்மையுறச் செய்ய முடியும். அப்படிச் செய்வதனால் நீ வாழ்வில் உன் பங்கை அதிகரித்துக் கொள்கிறாய். உன் வாழ்வு ஒன்றேதான் உண்மையானது என்று கருதி, அதை மற்றவர்களின் வாழ்க்கையைக் கொண்டு நலமாக யிருக்கச்செய்ய நினைக்கும்போதே நீ உன்னையே சேதப்படுத்திக் கொள்கிறாய். இவ்விதம் செய்வதால் உன் வாழ்வையும் குறைத்துக் கொள்கிறாய். மற்றவர் உடலில் இருக்கும் உயிரைப் போக்குவது உன் சக்திக்கு அப்பாற்பட்டது. நீ வெட்டி வீழ்த்தியவர்களின் உயிர் உன் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்துவிட்டது. ஆனால் அது அழிந்துவிடவில்லை. உன்னுடைய வாழ்க்கையை அதிகரித்துக் கொள்ளவும், மற்றவர் வாழ்க்கையைக் குறைக்கவும் உன்னால் முடியும் என்று எண்ணுகிறாய். அது உன்னால் இயலாது வாழ்விற்கு காலமோ, இடமோ தெரியாது. கண நேரமும் ஆயிரம் ஆண்டும் வாழ்விற்கு ஒன்றுதான். இந்த உலகத்தில் உன்னுடைய வாழ்வும், மற்றவருடையதும், கண்களுக்குத் தெரிவதும், புலப்படாததும் சரிநிகர் சமானம்தான். உயிரை அழிக்கவோ, அதை மாற்றவோ முடியாத காரியம். உயிர் ஒன்றுதான் நிலையாக இருக்கக் கூடியது. மற்றவை இருப்பதுபோல் வெறும் தோற்றமளிக்கின்றன' இதைக் கூறிவிட்டு வயதானவர் மறைந்தார்.

மறுநாள் பொழுது விடிந்ததும், லைலி அரசனையும் மற்ற கைதிகளையும் விடுவிக்கும்படி உத்தரவிட்டான் மன்னன் எஸர் ஹட்டன். அளிக்கப்பட்ட தண்டனைகளையும் ரத்து செய்தான்.

மூன்றாவது நாள் தன் மகன் அஸுரி பனிடால் என்பவனை மன்னன் எஸர் ஹட்டன் அழைத்தான். அவனுக்குப் பட்டம் கட்டி, அரச பொறுப்பை அவனிடம் ஒப்படைத்தான். பிறகு தான் கற்றவைகளைச் சிந்தித்துக் கொண்டே நாட்டைவிட்டுப் புறப்பட்டான். ஊர் ஊராகத் திரிந்து சென்று 'எல்லா உயிர்களும் ஒன்றுதான் மனிதன் மற்றவனுக்குத் தீங்கு செய்ய நினைக்கும்போது அவன் தனக்கே கெடுதலைத் தேடிக் கொள்கிறான் என்று மக்களிடம் பிரசாரம் செய்து வந்தான்.

(1903)